




# பிரச்நோத்தரரத்நமாலை.



BY

*V. Muthukrishnaiyer,*
*HINDU SASTRABHIMANI,*
**Kallidaikurichi, Tinnevelly.**

---

1911.



வி. பி. சார்ஜு உள்பட விலை அணு 10.

The Vaijayanti Press, Mount Road, Madras.

# புத்தகவரவு.



ஆரியஜனபோதினி :—

[பிர்மஸ்ரீ வா. முத்துகிருஷ்ணய்யரவர்கள் இயற்றியது.
வி. பி. சார்ச்சுடன் விலை அணா 10.]

இந்நூலாசிரியர் ஏற்கனவே இந்துசாஸ்திராபிமானி, சிரேஷ்டமாலிகா முதலியபுத்தகங்களை வெளியிட்டுத் தமிழுலகத்திற்கு உபகரித்துள்ளார். ஸ்ரீ. வி. நடராஜ ஐயரவர்களால் "லோகோபகாரி" ப்பத்திரிகை நடைபெற்றநாளில் இவரது வியாஸங்கள் பொதுஜனங்களால் அதிக ஆதரவுடன் வாசிக்கப்பட்டுவந்தன. இவர் இப்போது பிரசுரித்துள்ள இந்நூலிலும் கவனிக்கத்தகுந்த பாகங்கள் அநேகம் உள்ளன. வாசகநடை அதிக இனிமையுடன் கூடியிருக்கின்றது. இதனாசிரியர் எடுத்தாளும் விஷயங்களும் நன்றாயிருக்கிறது. ஆயினும், அச்சியற்றியவிஷயத்தில் சில திருத்தங்கள் அனுஸரிக்கப்பட்டிருந்தால் சிலாக்கியமாகவிருக்கும். தனித்தனிப் பாராவாகப் பிரிக்கத்தவரிய பிசகு அடுத்தபதிப்பில் திருத்தப்பட்டுப் போகுமென்று நம்பியிருக்கிறோம். அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கும் விலாஸங்களால் நம்மவர்கள் அநேகவிதமான பிரயோஜனங்களையடையலாம். இந்நூல் விசேஷமாக ஒவ்வொரு யாத்திரிகர்களுக்கும் இன்றியமையாதது.

 S. G. ராயாநுஜலுநாயுடு,

ப்ரோப்ரைட்டர்,

பிரஜாநுகூலன்,

திருச்சிறுப்பள்ளி.

---

# புத்தகவரவு.



ஆரியஜனபோதினி :—இது, இந்துசாஸ்திராபிமானி முதலிய புஸ்தகங்களை இயற்றியவரும், திராவிட பாஷாபத்திரிகைகளுக்கு நிரூபநேயராக விருந்தவருமான கல்லிடைக்குரிச்சி, வா. முத்துகிருஷ்ணய்யரவர்களால் இயற்றப்பட்டது. நமதுஇந்துஜனங்கள் தங்கள்நாட்டின் முற்கால தற்கால நிலைமைகளை நன்குணர்ந்து ஐக்கியம் என்ற துவஜம் அறுந்துவிழாதபடி தேசக்ஷேமத்தின்பொருட்டு, வியாபாரம், வியவஸாயம், கைத்தொழில் முதலியவைகளில் கவனம்செலுத்தி உழைத்துவரவேண்டுமென்ற நன்னோக்கத்துடன் எழுதப்பட்டது.

இதன் விலை, வி. பி. சார்ச்சுடன் அணா 10.

சுதேசமித்திரன்,

மதராஸ்.

ஓம்

தத்ஸத்.

# பிரசிநோத்தரரத்நமாலை.

இஃது

ஈசுவரதுல்லியாளான

பெரியோர்களின் அநுக்ரஹவிசேஷத்தால்

முன்

சிரேஷ்டமாலிகா, கல்லிடைக்கும்மி,
இந்துசாஸ்திராபிமானி, ஆரியஜனபோதினி

என்ற புஸ்தகங்களைஎழுதின

கல்லிடைக்குறிச்சி

**வா. முத்துகிருஷ்ணய்யரால்**

இயற்றப்பட்டு

ஷையாருடைய ஜேஷ்டகுமாரர்

**M. வாஞ்சேசுவரய்யரால்**

சென்னை

வைஜயந்தி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

முதற்பதிப்பு 1,000 காப்பிகள்.

1911.

　　வி. பி. சார்ச்சுஉள்பட விலை அணு 10.

20-3 3

ஓம்.

# இந்தப்புத்தகமானது

அதை எழுதினவரின் அந்தராத்மாவின்பிரீதியின்பொருட்டும், லோகோபகாரார்த்தமாகவும் ஷியாரால் மஹாமாயாமோஹமென்னும் பெரிய அந்தகாரத்தை எப்பொழுதும் எடுத்தெடுத்து விழுங்குகிறதே வேலையாகவிருக்கின்ற சின்மயானந்தஸ்வரூபியான ஸ்ரீ தெக்ஷிணாமூர்த்தியின் திவ்யசரணாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கப்படுவதன்றி, அதன் பிரின்டிங்வேலை முதலியவைகளுக்குத் தனஉதவியில்லாமல் வாடிய பயிரைப்போல்தவித்து நிற்கிறஸமயத்தில் கார்மேகத்தை வருஷாத் தாரையாக வருஷிக்கச்செய்த வருணதேவனைப்போல், அதற்குப் பொருளுதவிபுரிய முன்வந்தகொடைவள்ளலும், கர்ப்பஸ்ரீமானும், கல்விடைக்கு ஓர் தார்வேந்தனைப்போல் விளங்கிவருபவருமாகிய இவ்வூர் மாக்ஷிமைதங்கிய ம-ா-ா-ஸ்ரீ, ரா. ச. அ. லெக்ஷ்மணய்யரவர்களின் தயாளகுணமாகிய சிறந்ததோர் கருணாஸாகரத்திற்கும் அற்பணம் செய்யப்பட்டிருக்கின்றது.

தத்ஸத்.

---

# முன்னுரை.

அறிஞர்களே!

நீங்கள் ஈசுவரதுல்லியாளான பெரியோர்களாதலின், இதினும் சிறந்தவேதாந்த நூல்களைப்படித்துணர்ந்து அவைகளின்பிரயோஜனமான மோக்ஷஸாம்பராஜ்யத்தைப் பெறவல்லவர்களாக பவித்திருப்பீர்கள். நான் அதனை நன்குணராது இதனை எழுதிவெளியிட முன்வரவில்லை. ஆனால், அவைகள்மிகக்கடினமான பதப்பிரயோகங்களால் அலங்கிருதஞ்செய்யப்பட்டிருப்பதால் அவைகளிற்கூறப்படும் உண்மையான பொருளானது எல்லோருக்குமே எளிதாக அர்த்தமாகமாட்டாது. உலகமோபலவிதமாக விருக்கின்றது. அங்ஙனமில்லாவிடின், சாந்தோக்கியோபநிஷத்தானது அறிந்தவனும் அறியாதவனும் மோக்ஷத்தைக்கருதி அதற்குரியகர்மங்களைச் செய்கிறானென்றும, அவ்விருவருள்பின்னவன் முன்னவனைப்போல் "அறிவென்பது வேறு," "அறியாமையென்பதுவேறு," என்றதை யுணருகிறதில்லையென்றும், எவனொன்றைஞானத்தோடும், விசுவாஸத்தோடும், சிரத்தையோடும் செய்கின்றானோ அதுதான்அவனுக்குமிகுந்த நலமுடையதாகப்பவிக்குமெனக்கோஷிக்கவும், இதற்கு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளவர்கள் உலகத்தின்கண்ணுள்ள ரத்நவியாபாரியும்,நாட்டுப்புத்தானுமாகிய இருவருள்முன்னவன் ரத்நபரீக்ஷையில் தேரியிருப்பதாலன்றோ பின்னவனைக்காட்டிலும் அவன்மிகுந்தபணம்லாபமடைகிறானென்று பாஷ்யம்செய்யவும் நிமித்தமில்லை. ஆதலின், பலவிதமாகவிருக்கிற உலகத்தில்வஸிக்கின்ற என்போன்றஸாமான்யரான இருபாலரின் பிரயோஜனத்தைக்கருதி இதனையெழுதிவெளியிட்டிருப்பதால், நீங்கள் தயவுசெய்து ஒருமுறைஅன்போடும் ஆதரவோடும் படித்துப்பார்த்து, இதிலுள்ளசொற்குற்றம், பொருட்குற்றம், அக்ஷரலோபமுதலியவைகளை எனக்கெடுத்துரைத்து, அதற்குப்பிரதிபலனாக எனதுசிரேயஸ்ஸைக் கோரினால் தங்களுக்குஅற்பிதம் செய்யப்படும்பலவிதமான வந்தனங்களைநீங்கள் திருகரணசுத்தியுடன் ஏற்று எனக்காசிகூறவேண்டுமெனப்போற்றுவதுமன்றி, இம்மாலையிற் கண்டபிரசினோத்தரங்கள் சுருதிகளின்அபிப்ராயங்களை அனுஸரித்திருக்கிறதாவென்னும் விஷயத்திற்காலத்தைவிரயம்செய்து, தற்பொழுது ஸ்ரீமத் இராமாயணத்திலுள்ள ஸப்தகாண்டங்களுக்கும் வேதாந்தபரமாகத் தமிழில் அர்த்தம் செய்துவருகிறஎனது ஸ்யாலனாகிய இவ்வூர், பிர்மஸ்ரீ, ப. வெங்கிடேசுவரமய்யரவர்களுக்கும், இந்நூலின் புரூபுகளைமிகுந்த அன்புடன்ஸரிபார்த்துத் தந்தநம் நண்பர்இவ்வூர் ம-ா-ா-ஸ்ரீ, ரா. ம. ராமஸுப்பய்யரவர்களுக்கும் அவர்களின் இஷ்டகாம்யார்த்தங்களாகிய போகபாக்கியங்களை அனுப்பன்னியில் எப்பொழுதும் அபரிமிதமாக அளித்துக்கொண்டிருக்க வேண்டுமென்று நான்முப்பொழுதும் மெய்ப்பொருளின்மலரடி யென்னும் முக்கண்ணன் திருவடியில் சென்னியைச்சாய்த்துக்கொண்டிருக்கின்றேன்.

☞ வா. மு. கி. ஸௌம்யஞூ மாசிமீ உகூவ.

9—3—1910.

மஹாசிவராத்திரி.

# முகவுரை.

ஐயா! நான் இந்தப் பிரசிநோத்தரரத்நமாலையிலுள்ள வேதாந்தவிஷயவசனாமிருதங்களைப் பானஞ்செய்கின்றபொழுது, முக்தனைப்போல் ஆனந்தபரவசமாகினேன். அன்றியும், இதில் கூறப்படுகின்ற நவக்கிரகங்களின்ஸ்தானாதிகளையும், பதினான்குஉலகங்களின்மஹிமைகளையும், ஸகலத்வீபங்களின் ஆதிபத்தியாதிவிஷயங்களையும் படித்துப்பார்க்கின்றபொழுது, ஆச்சரியரஸஜலநிதியிலும் மூழ்கினேன். இந்தக்ரந்தகர்த்தாவைப்போன்ற **இந்துசாஸ்திராபிமானி**களால் இதுவரை அதிகமாயெழுதி வெளியிடப்படாத அஸாத்தியமான ஸ்மிருதி ஸ்ரீதோபநிஷத்துக்களின் மர்மங்களை **இதன் ஆசிரியர்** லோகோபகாரார்த்தம் தெளிவாயெழுதி வெளியிட்டிருப்பதால், நாம் அவரை **இந்துசாஸ்திராபிக்ஞரென்று** சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்நூல் பிரதானபுருஷார்த்தத்தை அடைவதற்குரிய ஞானமார்க்கத்தை யெளிதாகப்போதிப்பதாலும், வெளிப்ரபஞ்சத்தில் அறியவேண்டிய குறிப்பானவிஷயங்களை விளங்கவெடுத்துரைப்பதாலும், அஷ்டாங்காதி யோகவிஷயங்களின்ஸாரமான ரகஸ்யஸித்தாந்தங்களை விசதமாகக்கூறுவதாலும், மத்தியில் அநேக ஸ்மிருதிவிஷயங்கள்வருவதாலும், இதனை **இந்துசாஸ்திரஸாரமென்று** சொல்ல அபிப்பிராயப்படுகின்றோம். இந்தப்புஸ்தகம் பண்டிதர்களுக்கும், ஸ்கூல், லைபெரிமுதலியவைகளுக்கும் அவசியமிருக்க வேண்டும்.


ஏ. சுப்பிரமண்ய சாஸ்திரிகள்,

ஹெட்மாஸ்டர்,

லோகல் பண்டு ஸம்ஸ்கிருதஸ்கூல்,

கல்லிடைக்குறிச்சி.


30—11—10.

# விஷயஸூசிகை.



முற்றிற்று.

ஓம்.

தத்ஸத்.

# பிரசிநோத்தரரத்நமாலை.

—— ❋❋❋ ——

## குருசிஷ்யஸம்பாஷணை.

வினா:— 1. சிஷ்யனது பிரசினம். ஓ, அகண்டபரிபூரண ஸச்சிதானந்தஸ்வரூபமாகிய குருமூர்த்தே! இவ்வுலகமானது ஸ்வாநுபூதியடைந்து ஆனந்தாதீதமாகும்படி கிருபைசெய்யவேண்டுமென்று தங்களுடைய திவ்ய சரணாரவிந்தத்தில் நான் ஸதாகாலமும் திருகரண சுத்தியுடன் அனேகவிதமான வந்தனங்களை ஸமர்ப்பித்துக்கொண்டிருப்பதுபோல், இப்பொழுதும் பலவிதநமஸ்காரங்களை ஸமர்ப்பிக்கின்றேன்.

விடை:— குருமூர்த்தியினது உத்தரம். அப்பா, தர்மசீலமுடைய ஸர்வகுணஸம்பந்நனாகிய சிஷ்யா! உனது அன்பானவந்தனங்கள் மிகுந்த ஆதரவுடன் ஸ்வீகரித்துக்கொள்ளப்பட்டிருப்பதால், நின் அபிப்பிராயங்களும், கோரிக்கைகளும், அந்த அகண்டபரிபூர்ண ஸச்சிதானந்த ஸ்வரூபத்தின் திருவருளால் வெகு சீக்கிரத்தில் நிறைவேறவேண்டுமென்று உனக்கு ஆசீர்வதிக்கின்றேன்.

வினா:— 2. ஐயா! ஸ்வாநுபூதியை அடைகிறவழி எப்படி?

விடை:— அத்தியாரோப அபவாதயுக்திகளால் பிர்மவிசாரம் செய்கிறதே அதனை அடைகின்ற வழி.

வினா:— 3. அத்தியாரோபம் என்பது என்ன? அபவாதம் என்பது யாது?

விடை:— கிளிஞ்சலில் வெள்ளிதோனுகிறதுபோல் பிர்மத்தில் ஜகத்துத்தோனுகிறதுதான் அத்தியாரோபம். அபவாதமாவது, மண்ணினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டபாண்டங்கள் அம்மண்ணுக்கு அன்னியமாயிராததுபோல் காரணத்திற் கன்னியமாய்க் காரியமில்லையென்றறிவது.

வினா :— 4. காரணம் எது? காரியம் எது?

விடை :— பிர்மம் காரணம். பிரபஞ்சம் காரியம்.

வினா :— 5. அத்தியாரோபத்தினால் தான் பிர்மத்தினிடத்தில் பிரபஞ்சம் ஆரோபிக்கப்பட்டிருக்கிறதோ?

விடை :— ஆம். அத்தியாரோபத்தினால் தான் பிர்மத்தினிடத்தில் பிரபஞ்சம் ஆரோபிக்கப்பட்டிருக்கிறது.

வினா :— 6. இந்த அத்தியாரோபம் எதனால் வந்தது?

விடை :— அதிஷ்டானாக் ஞானத்தால் வந்தது.

வினா :— 7. இவ்வக்ஞானத்தை யொழிப்பதற்குரிய வழியாது?

விடை :— ஸாதன சதுஷ்டய ஸம்பன்னனாகப்பவித்து, ஸத்குருவையடுத்து, அவருக்கு மனோவாக்குக் காயங்களால் அளவற்ற பணிவிடைகளைச்செய்து, அவரது கிருபைக்குப்பாத்திரனாகி, வெகுகாலம் சிரவண மனன நிதித்தியாஸனாதிகளைப்பண்ணி, ஞானத்தைப் பெறுவதே அவ்வக்ஞானத்தை யொழிப்பதற்குரிய வழி.

வினா :— 8. முன்சொன்ன ஸத்குருவின் தரிசனம் நமக்கு எவ்வாறு கிடைக்கும்? அவர் நல்ல பாண்டித்தியமும் மஹா மஹோபாத்தியாயமென்றதை யொத்த சிறந்த பட்டங்களையும் பெற்ற உயர்ந்த சாஸ்திரியாகவிருப்பாரா?

விடை :— அவர் இவ்விதமாக விருப்பாரென்று நம்மால் தீர்மானிக்க முடியாது. ஒருக்கால் நீசொன்ன சாஸ்திரியைப்போல விருந்தாலும் அந்த சாஸ்திரியானவர் விஷயாசக்தியினால் காம்யகர்மங்களைச் செய்துகொண்டிருக்கக் கூடுமாதலின், அவரை ஸத்குருவென்று சொல்ல வாய்க்கிறதில்லை.

வினா :— 9. அல்லது மான்தோலைக் கக்ஷத்தில் இடுக்கிக்கொண்டு ஜடைமுடியுடன் வெண்ணீறுபூசிச் சிறந்தயோகியெனப் பெயர்பூண்ட யோகீசுவரனைப்போ லிருப்பாரா?

விடை :— ஒருக்கால் அவ்விதமாகவிருந்தாலுமிருப்பார். ஆனால், அந்த யோகீசுவரன் கேவல யோகமுடையவனாக

இருக்கக்கூடுமாதலின், அவரை முமுக்ஷுவாகச் சொல்ல விடமில்லை. ஆனதால் அவரைச் சின்மாத்திர ஸ்வரூபரான ஸத்குருவென்று சொல்ல வாய்க்கிறதில்லை.

வினா:— 10. ஆனால், நீங்கள் சொல்லுகிற குருவின் லக்ஷணமென்ன?

விடை:— மௌனமாகிற வியாக்கியானத்தினால் வெளியிடப்பட்ட பிர்மானுஸந்தானத்துடனிருப்பதே அந்த ஸத்குருவின் லக்ஷணம்.

வினா:— 11. அவர்தான் அத்தியந்தகிருதார்த்தரான அகண்டக்ஞானியோ?

விடை:— ஆம். அவர்தான் அத்தியந்தகிருதார்த்தரான அகண்டக்ஞானி. ஸம்ஸாரமற்றவர். நிர்மலசித்தர். ஆபிர்ம்ஹஸ்தம்பபர்யந்தமான பூதங்களில் அபேதபாவமுடையவர். ஜீவேசுவர பேதமின்றி ஸகலப் பிரபஞ்சங்களிலும் பாரமார்த்திகதிருஷ்டியுடையவர். ஆனந்தமக்னர். ஸர்வகர்மநிர்முக்தர். ஸகலமதஸம்மதர். ஸங்கல்பரஹிதர். மூர்த்திரஹிதபரமானந்தர். நினைப்பு மறப்பற்ற ஸ்வரூபானுஸந்தானமுடையவர். ஈசுவரதுல்யர்.

வினா:— 12. குணரஹிதரான குருமூர்த்தே! ஸத்சிஷ்யனுடைய லக்ஷணம் எவ்விதமாக விருக்கவேண்டும்?

விடை:— அப்பா! ஆலஸ்யம், நிஷ்டூரம், குருஸேவாவஞ்சகம், வித்யாசோரம், ஸ்தம்பனமோஹன வித்யாப்யாஸம், விஷயாசக்தி, அஹங்காரம், கர்வம், பாஷண்டமதஸம்யுக்தம், சோம்பல், நாஸ்திகவாதம், ஞானசௌரியம், பதிதத்துவம், அகாரணபரதூஷணம், இத்யாதி துர்க்குணங்களன்றி, சுத்தமான அந்தக்கரணத்துடன் ஸாதனசதுஷ்டய ஸம்பன்னனாகவிருப்பது தான் ஸத்சிஷ்யனுடைய லக்ஷணம்.

வினா:— 13. இவ்விதமாகவிருந்து குருஸேவைசெய்து பிர்மவிசாரம் செய்வதினால் என்ன ஸித்திக்கின்றது?

விடை:— ஞானம் ஸித்திக்கின்றது.

வினா:— 14. அந்தக்ஞானத்தினால் என்ன ஸித்திக்கின்றது?
விடை:— மோக்ஷம் ஸித்திக்கின்றது.

வினா:— 15. மோக்ஷமென்பது யாது?
விடை:— அவித்யாநாசத்தால் அகண்ட பரிபூரண ஸச்சிதானந்தஸ்வரூபமாகிய பிர்மத்தில் ஐக்கியமடைகிறது தான் மோக்ஷம்.

வினா:— 16. அகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்த ஸ்வரூபமாவது யாது?
விடை:— அகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்தஸ்வரூபம் என்பது இடைவெளியன்னியில் எங்கும் வியாபித்திருக்கின்ற பிர்மத்தின் ஸ்வரூபமேயாம்.

---

## ஸ த் ல க்ஷ ண ம்.

வினா:— 17. அந்த ஸச்சிதானந்த லக்ஷணம் எதனிடத்தில் பொருந்தியிருக்கின்றது?
விடை:— ஆத்மாவினிடத்தில் பொருந்தியிருக்கின்றது.

வினா:— 18. அதற்குப் பிரமாணமுண்டா?
விடை:— உண்டு.

வினா:— 19. அதுயெது?
விடை:— நம்ஆரியவேதமே.

வினா:— 20. ஆனால், ஆத்மாவினிடத்திலுள்ள ஸத்லக்ஷணமாவதென்ன?
விடை:— அதுஇறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலமென்னும் முக்காலங்களிலும் ஒன்றினாலும் வாதிக்கப்படாமலிருப்பதே ஸத்லக்ஷணம்.

வினா:— 21. மேற்சொன்ன முக்காலங்களிலும் ஆத்மா வுண்டென்பதற்குரிய அனுபவம்யாது?
விடை:— கோவிந்தன் மகாராஜனாயும், மகாதேவன் தரித்திரனாயுமிருப்பதாலும், அம்மனிதர்கள் ஒருவருக்கொருவர் நீயும்நானும் முற்பிறப்பிற்செய்த பாபபுண்ணியங்களுக்குத் தகுந்தபடி இந்தஜன்மத்தில் ஸுகதுக்காதிகளை யனுபவிக்கிறோமென்று ஸம்பாஷித்துக்

கொள்வதாலும், இப்பொழுது செய்கின்றகர்மங்களின் பலனைமறுபிறப்பில் அநுபவிப்போமென்ற நம் புதல்நம்முள் இருப்பதினாலும், ஆத்மாகாலத்திரயத்திலும் உண்டென்பதுதான் அநுபவம்.

வினா: — 22. இவ்வனுபவத்தால் ஆத்மாவையும்ஜீவனையும் ஒன்றுகச்செப்பலாமா? அதற்குப் பிரமாணமென்ன? இருக்குமாயின் அதைவிளங்க உரைக்கவேண்டும்?

விடை:— சிவனையின்றி ஜீவனில்லையென்ற வேதாந்தவாக்கியத்தாலும், அந்தச்சிவனே எங்கும்நிறைந்த பரிபூரணரான ஆத்மஸ்வரூபரானதாலும் ஆத்மாவுக்கும் ஜீவனுக்கும் பேதமில்லை.

வினா: — 23. ஆத்மாவுக்கும் ஜீவனுக்கும் பேதமில்லையானால் அவைஇரண்டும் ஒன்றுகத்தோன்றுமல் இரண்டாகத்தோன்றுவதற்குரிய காரணம்யாது?

விடை:— ஆத்மாவை அறியாமையான அக்ஞானத்தாலும், அவைகளின் லக்ஷணபேதங்களாலும், அது ஒன்றுகத்தோன்றுமல் இரண்டாகத் தோன்றுகின்றது.

வினா: — 24. அவ்விதமாயின், ஆத்மாவுக்குரிய லக்ஷணங்கள் எவைகள்?

விடை:— ஆத்மாவுக்குரிய லக்ஷணங்களாவது, நிர்விகாரம், அபரிச்சின்னம், ஸாக்ஷிமாத்ரம், அஸம்ஸாரம், சேதனம், நித்யமுக்தத்வம், இந்திரியத்தில் அஸம்மந்தம் ஆகியவைகளாம்.

வினா: — 25. ஜீவனுக்குரிய லக்ஷணங்கள் எவைகள்?

விடை:— ஜீவனுக்குரிய லக்ஷணங்களாவது, விகாரம், பரிச்சின்னம், ஸாக்ஷியம், ஸம்ஸாரம், ஜடஸம்மந்தம், அநித்தியம், பந்தமாகியவைகளாம்.

வினா: — 26. இவ்விதம் ஆத்மாவுக்கும் ஜீவனுக்கும் லக்ஷணங்கள் வித்தியாஸமாகவிருக்க, எதனுல் அவையிரண்டும் ஒன்றெனக் கூறப்படுகின்றன?

விடை:— ஜீவனனது ஆத்மாவினுடையப் பிரதிபிம்பமாக விருப்பதால், அவையிரண்டும் ஒன்றெனக் கூறப்படுகின்றன. அங்ஙனமிருக்க, லக்ஷணங்கள்மட்டும் மாறு

படக்கூடுமோவென்றால், இதனடியிற்கூறப்படும் நித ர்சனத்தால் மாறுபடக்கூடுமென்பது தீர்மானம்.

வினா: — 27. ஆனால், அந்நிதர்சனம்யாது?

விடை:— அந்நிதர்சனமாவது, ஜலத்திற் காணப்படுகின்ற சந்தி ரப்பிரதிபிம்பம் அந்தஜலத்தின் சலனத்தினால்தானும் சலிக்கின்றது. இந்தச்சலனமானது, அந்தசந்திரப் பிரதி பிம்பத்தினிடத்தில் ஏற்படுகிறதேயன்றி, அத ற்கு அதிஷ்டானமான சந்திரனிடத்தில் ஏற்படுகிற தில்லை. அதுபோல், ஆத்மாவானது அந்தஹ்கரணத் தில் பிரதிபலித்து ஜீவன்என்ற பெயரையடைந்தா லும், அந்தஜீவனுக்குரிய விகாரமுதலிய லக்ஷணங் கள் இந்த ஆத்மாவினிடத்தில் பொருந்தியிருக்க வில்லை யென்பதேயாம்.

வினா: — 28. ஐயா! நல்லது. இவையிருக்கட்டும். ஆத்மாவுக்கு ஸத்ரூபம் ஸித்தித்ததென்பது இதற்குமுன்சொன்ன அனுபவங்களை வைத்துக்கொண்டு நாம்பகுத்தறி யும் ஓர்யுக்தியல்லவா?

விடை:— ஆம், அதுவே.

வினா: — 29. ஆனால், அந்தயுக்தியினால்நாம்இப்போதுஇருக்கிறோ மா இல்லையாவென்பதைப்பற்றிக்கொஞ்சம் ஆலோ சிக்கவேண்டியதுண்டு. இருக்கிறோமா, இல்லையா?

விடை:— இருக்கிறோம்.

வினா: — 30. இருக்கிறோமென்பதை எவரும் அறிவார்கள். ஆனால், சரீரத்துடன் இருக்கின்றோமா? சரீரமற்றவராக விருக்கின்றோமா?

விடை:— சரீரமற்றவனுக்கு உண்ணல், உடுத்தல், உறங்கல்முத லிய வியவகாரங்கள் கிடையாதாகையால் வியவகரிக் கின்றநாம் சரீரத்துடனேயே இருக்கின்றோம்.

வினா: — 31. நாம் இந்தச் சரீரத்தை எதனால் பெறக்காரணமா யிற்று?

விடை:— முன்ஜன்மங்களிற் செய்த வினையின்பயனால் இச்சரீ ரத்தைப்பெறக் காரணமாயிற்று.

வினா :— 32. நான்செய்த கர்மத்தினால்எனக்கு இந்தச்சரீரம் உண்டாயிற்றா? அல்லது, மற்றொருவன் செய்தகர்மத்தினால் ஏற்பட்டதா?

விடை :— அவனவன் கர்மபலன் அவனவனைத் தொடருமேயன்றி, மற்றவனைத் தொடரமாட்டாது. அவ்விதம் தொடருமாயின், தேவதத்தனால் செய்யப்பட்ட அன்னதானத்தின் பலனை ஸோமநாதனும், ஸோமநாதனடிவந்த தீர்த்தயாத்திரையின் பலனை தேவதத்தனும் அடையவேண்டும். அங்ஙனமின்றி, ஒரேகர்ப்பத்தில் ஒரேகாலத்தில் ஜனித்தஇருவரில் ஒருவன் போஹியாயும், ஒருவன்ரோகியாயுமிருப்பதால், அவனவனுடைய கர்மபலனை அவனவனே அநுபவிக்கவேண்டுமெனத் தீர்மானமாகின்றது.

வினா :— 33. ஆனால், நாம்செய்த கர்மத்தினால்தான் நமக்கு இந்த ஜன்மம்வந்ததோ?

விடை :— ஆம். அதற்கென்னஸந்தேகம்.

வினா :— 34. கர்மத்தினால் ஜன்மம்ஏன் ஏற்படவேண்டும்?

விடை :— அதன்பலனை யநுபவிக்கும் பொருட்டாக ஏற்படுகின்றது.

வினா :— 35. கர்மத்தினால் ஜன்மம்ஏற்பட்டதா? ஜன்மத்தினால் கர்மம்ஏற்பட்டதா?

விடை :— இந்தக்கேள்விக்கு எவ்விதம்பதில் சொல்லுகின்றது? இவ்விருவிருக்ஷத்தினால் வித்துஉண்டாயிற்றா? வித்தினால்விருக்ஷம் உண்டாயிற்றா? இவ்விரண்டில் எது ஆதியிலுள்ளது? என்றகேள்வியை ஒத்திருப்பதால் குறித்தவினா ஒப்பத்தக்கதன்று.

வினா :— 36. ஆனால், இந்தயுக்திக்கு முகாந்திரமென்ன?

விடை :— ஜன்மகர்மங்களுக்கு அநாதித்வம் ஸித்தித்திருக்கிறதென்பதே முகாந்திரம்.

வினா :— 37. இதனால் ஜன்மமும் கர்மமும் ஒன்றுக்கொன்று எப்பொழுதும் த்வந்தப்பட்டுக்கொண்டிருக்கிறதாகத் தெரியவருகிறதல்லவா?

விடை :— ஆம். த்வந்தப்பட்டுக்கொண்டிருக்கிறதாகத் தெரியவருகிறது.

வினு: — 38. அப்படியானல், ஸ்ருஷ்டிகாலமுதல் நாம்எடுத்த ஜன்மத்திற்கும் செய்தகர்மத்திற்கும் அளவில்லேயே. அதுமுதல் இதுவரைப் பலவித கர்மங்களைச்செய்து அனேகங்கோடி ஜன்மங்களைப் பெற்றுவருகின்ருேமல்லவா? அன்றியும், இன்னும் பலவித கர்மங்களைச் செய்து அனேகங்கோடி ஜன்மங்களைப் பெறக் காத்திருக்கின்ருேமல்லவா?

விடை:— ஆம். நாம் இதற்குமுன் பலவிதகர்மங்களைச்செய்து அளவற்ற ஜன்மங்களைப் பெற்றதுபோல், பின்னும் அனேகங்கர்மங்களைச்செய்து பலவிதசரீரங்களைப்பெறக் காத்திருக்கின்ருேம்.

வினு: — 39. அதனுல் நாம் அடையும் பிரயோஜனம் யாது?

விடை:— நாலுவகை யோனியில் எழுவகைப் பிறவியாய்ப்பற் பலவாருன சரீரங்களைப்பெற்று, நசுவரமான ஸுக துக்காதிகளையனுபவிப்பதேயன்றி வேறுவிதப்பிரயோஜனமில்லே.

வினு: — 40. நாம் இன்னும் பலவிதஜன்மங்களைப் பெருதிருக்க உபாயம் யாது?

விடை:— இந்தஜன்மத்தில் ஸத்குருஸேவைசெய்து, அவரிடம் ஞானேபதேசம்பெற்று, அதனுல் சிரவண மனன நிதித்தியாஸனுதிகளைப் பண்ணி, மோக்ஷமடைவதே ஜன்மநிவிர்த்திக்குத் தகுந்தஃதார் உபாயமாம்.

---

## சித்லக்ஷணம்.

வினு: — 41. ஐயா! ஆத்மஸ்வரூபத்தில் ஸத்லக்ஷணமிருப்பதைத் தெரிந்துகொண்டதுபோல்,சித்லக்ஷணம் இருப்பதையும் தெரியவிரும்புகிறேன். அது எப்படி?

விடை:— சூரியன்,அக்னிமுதலிய இதரதேஜஸுகளை அபேக்ஷியாமல் தானுகவேப் பிரகாசித்துக்கொண்டும், தன்னிடத்தில் ஆரோபிக்கப்பட்ட ஸகலமான சேதனு சேதனப் பிரபஞ்சங்களையும் பிரகாசிப்பித்துக்கொண்டும் இருக்கிறதெதுவோ,அதுவேசித்லக்ஷணமென்று சொல்லப்படும்.

வினு: — 42. நமக்கு ஸர்வக்ஞத்துவமில்லாதிருக்க, ஸகலபதார்த்தங்களேயும் விளக்குவிக்கிற சக்தி எவ்விதம்?

விடை:— ஸர்வக்ஞத்வமானது ஆத்மாவுக்கு பாரமார்த்திகத்தில் இல்லே. அவருக்கு ஸர்வக்ஞத்வம், ஸர்வேசுவரத்வம், பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத்வம் முதலியவை மாயோபாதியின் ஸம்மந்தத்தால் ஏற்படுகின்றது. ஆகையாலும், அவ்வாத்மாவே நாமாதலாலும், ஸகலபதார்த்தங்களேயும் விளக்குவிக்கிற சக்தி நமக்கு ஏற்பட்டது.

வினு: — 43. ஐயா! பிரபஞ்சம் என்பது எவ்விதமாகவிருக்கின்றது?

விடை:— அப்பா! பிரபஞ்சம் என்பது, வெளிப்பிரபஞ்சமென்றும், உட்பிரபஞ்சமென்றும் இரண்டுவிதமாக விருக்கின்றது.

வினு: — 44. வெளிப்பிரபஞ்சம் என்பது யாது? உட்பிரபஞ்சம் என்பது எது?

விடை:— வெளிப்பிரபஞ்சமென்பது, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகவும், சப்தஸ்பரிசரூப ரஸகந்தமென்றும், பஞ்சீகிருத பூதங்களென்றும், பிரமாண்டமென்றும், பதினுன்குஉலகமென்றும், நாலுவிதஸ்தூல சரீரங்களென்றும் பற்பலவாருன நாமரூபகுணதர்மகர்மமுதலிய விகாரசக்திக்கு ஆசிரயமாகவிருக்கிறது எதுவோ அதுவேயாம். உட்பிரபஞ்சம் என்பது, அன்னமயம் முதல் ஜீவன் முக்திவரையிலுள்ள அனேகமார்க்கங்களால் பற்பலவாருன பேதங்களே அடைந்து, பஞ்சகோசங்களாகவும், சரீரத்திரயமாகவும், ஷட்பாவவிகாரங்களாகவும், ஷட்கோசங்களாகவும், ஷடூர்மிகளாகவும், குருட்டுத்தனமாகவும், மந்தத்தனமாகவும், சுறுசுறுப்பாகவும், ஆசையாகவும், துவேஷமாகவும், மூன்றுவித காணங்களாகவும், அவஸ்தாத்திரயமாகவும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களாகவும், பஞ்சப்பிராணன், உபப்பிராணன்களாகவும், மனது, புத்தி, சித்தம், அகங்காரம், ஸங்கல்பம், நிச்சயம், நினேவு, அபிமானமுதலியனவாக

வும், விசுவன், தைஜஸன், பிராக்ஞன்முதலிய அவஸ்தைகளை யுடையவர்களுடனும், பிராதிபாஸிகன், வியாவகாரிகன், பாரமார்த்திகனுகி யவர்களுடனும், முக்குணங்களுடனும், ஸுகதுக்கங்களுடனும், ஞாருக்ஞானங்களுடனும், பிரியாப்பிரியங்களுடனும், உபேக்ஷை, ஸாதன சதுஷ்டயம், மைத்திரியாதிசதுஷ்டயம், அஷ்டாங்கயோகம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனம், ஸமாதிகளாகவும், பிரமாணுப் பிரமாணங்களாகவும், பிரமாணத்தின் நிச்சிதமாகவும், தாபத்திரயமாகவும், மனோவியாதியாகவும், வியாதியாகவும், ஆரோக்கியம், பக்தி, வைராக்கியம், மந்தம், தீவிரமாகியவைகளுடனும், ஸகுணோபாஸனை, நிர்க்குணோபாஸனை, மனோநாசம், வாஸனநாசம், விதேகமுக்தி, ஜீவன் முக்தி முதலான பற்பல நாமரூபகுணவிகாரங்களாகிய சக்திக்கு ஆசிரியமாகவிருக்கிறது எதுவோ அதுவேயாம்.

---

## வெளிப்ரபஞ்சம்.

வினா: — 45. ஐயா! இதற்குமுன் வெளிப்ரபஞ்சத்தின் வாலாறிற் கூறப்பட்ட பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமென்ற பஞ்சபூதங்கள், அபஞ்சீகிருதபூதங்களா? பஞ்சீகிருதபூதங்களா?

விடை :— அப்பா! அவைகள் பஞ்சீகிருதபூதங்களும் அபஞ்சீகிருதபூதங்களுமாம்.

வினா: — 46. அபஞ்சீகிருதபூதங்கள் என்பவை எவை?

விடை :— அபஞ்சீகிருதபூதங்கள் என்பவை விக்ஷேபசக்தியினிடத்தில் சத்ததன்மாத்திரையாலுண்டான ஆகாசமும், அவ்வாகாசத்தில் பரிசதன்மாத்திரையாலுண்டானவாயுவும், அவ்வாயுவில் ரூபதன்மாத்திரையாலுண்டான அக்னியும், அவ்வக்னியில் ரசதன்மாத்திரையாலுண்டான அப்புவும், அவ்வப்புவில் கந்ததன்மாத்திரையாலுண்டான பிருதிவியுமாம்.

வினா: — 47. இப்பூதங்களுக்கு முக்குணங்கள் உண்டா?

விடை :— உண்டு.

வினா : — 48. அக்குணங்கள் எதனிடத்திலிருந்துஉற்பத்தியாயின?
விடை :— விக்ஷேபசக்தியினிடத்திலிருந்து உற்பத்தியாயின.

வினா : — 49. இந்த அபஞ்சீகிருத பூதங்களுக்கு வேறுஎன்னென்ன பெயர்கள்உண்டு?
விடை :— அவைகளுக்கு தன்மாத்திரைகள், ஸூக்ஷ்மபூதங்கள், முக்குணபூதங்கள் என்றபெயர்கள்உண்டு.

வினா : — 50. இப்பஞ்சபூதங்களுக்குரிய குணங்கள்எவை?
விடை :— சப்தஸ்பரிச ரூபரஸகந்தங்களே அவைகளுக்குரிய குணங்களாம்.

வினா : — 51. இதனால்எனக்கு அவைகளின் குணங்கள் நன்றாகப் புலப்படவில்லை யாதலின், அவைகளில் ஒவ்வொரு பூதத்திற்கு முரியகுணத்தைத் தனித்தனியேவிளங்க எடுத்துரைக்கவேண்டும்?
விடை :— அப்படியே.

வினா : — 52. பிருதிவிக்குரிய குணம்யாது?
விடை :— கந்தம்.

வினா : — 53. அப்புவுக்குரிய குணம்யாது?
விடை :— ரஸம்.

வினா : — 54. தேயுவுக்குரிய குணம்யாது?
விடை :— ரூபம்.

வினா : — 55. வாயுவுக்குரிய குணம்யாது?
விடை :— ஸ்பரிசம்.

வினா : — 56. ஆகாசத்திற்குரிய குணம்யாது?
விடை :— சப்தம்.

வினா : — 57. பஞ்சீகிருதபூதங்கள் என்பவைஎவை?
விடை :— உலகத்தில் நம்மாற்காணப்படுகின்ற பஞ்சபூதங்களே பஞ்சீகிருதபூதங்களாம்.

வினா : — 58 பஞ்சீகரணமாவதென்ன?
விடை :— அபஞ்சீகிருத பூதத்தில்மிஞ்சினதான தாமஸகுணத்துடன் கூடிய ஐந்துபூதங்களையும் ஒன்றிரண்டாகப்

பகுத்து, முதற்பாதிஐந்தையும் ஒன்றுநாலாக்கி, இரண்டாம்பாதி ஐந்துடன் தன் அம்சத்துடனே கூட்டாமல், மற்றநாலுபூதத்துடனும் பூதத்திற்கு அரைக்கால்மாத்திரையாகக் கொடுக்கின்றது தான்பஞ்சீகரணம்.

வினா:— 59. அவ்விதமாயின், எந்தெந்த பூதங்களுக்கு எத்தனை எத்தனை குணங்கள் ஏற்பட்டிருக்கின்றன?

விடை:— பிருதிவிக்கு ஐந்தும், அப்புவுக்கு நாலும், தேயுவுக்குமூனும், வாயுவுக்குஇரண்டும், ஆகாசத்திற்கு ஒன்றுமாகக் குணங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

வினா:— 60. அப்புமுதல் ஆகாசம்வரையுள்ள நான்குபூதங்களில் முறையே ஒவ்வொருகுணங்கள் குறைவுபடுவதால், அவைகளிடத்தில் அக்குணங்கள் இல்லையா?

விடை:— இல்லையென்பது இல்லை. ஆனால், அவைகளிடத்தில் அக்குணங்கள் அதிருசயமாக விருக்கின்றன.

வினா:— 61. பிருதிவியினிடத்திலுள்ள ஐந்துகுணங்கள் எவை?

விடை:— சப்தஸ்பரிசரூப ரஸகந்தங்களாகியவைகளே பிருதிவியினிடத்திலுள்ள ஐந்துகுணங்களாம்.

வினா:— 62. அப்புவினிடத்திலுள்ள நான்குகுணங்கள் எவை?

விடை:— சப்தஸ்பரிசரூப ரஸங்களாகியவைகளே அப்புவினிடத்திலுள்ள நான்குகுணங்களாம்.

வினா:— 63. தேயுவினிடத்திலுள்ள மூன்றுகுணங்கள் எவை?

விடை:— சப்தஸ்பரிச ரூபங்களாகியவைகளே தேயுவினிடத்திலுள்ள மூன்றுகுணங்களாம்.

வினா:— 64. வாயுவினிடத்திலுள்ள இரண்டுகுணங்கள் எவை?

விடை:— சப்தஸ்பரிசங்களாகியவைகளே வாயுவினிடத்திலுள்ள இரண்டுகுணங்களாம்.

வினா:— 65. ஆகாசத்தினிடத்திலுள்ள ஓர்குணம் எது?

விடை:— சப்தமே ஆகாசத்தினிடத்திலுள்ள ஓர்குணமாம்.

வினா:— 66. ஐயா! முன் பிர்மாண்டமென்று சொன்னீர்களே, அதென்ன?

விடை :— அப்பா! இந்தப்பூலோகத்தைப்போன்ற ஈரேழுபதினாலு உலகங்களும் அடங்கப்பெற்றது எதுவோ அதுவே பிர்மாண்டமாம்.

வினா : — 67. பதினான்கு உலகங்களாவதென்ன? அவைகள் எவ்வெவ்விடங்களில் இருக்கின்றன?

விடை :— பதினான்கு உலகங்களாவது, இந்தப்பூலோகத்தைப்போல் தனித்தனியாக இவ்வுலகத்திற்கு மேலும் கீழுமிருக்கின்ற புவர், ஸுவர், மஹா, ஜன, தபோ, ஸத்திய, அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதாளலோகங்களாகிய மற்ற உலகங்களாம்.

வினா : — 68. மேலேஇருக்கிற உலகங்கள் எவை?

விடை :— புவர்லோகமுதல் ஸத்தியலோகம் வரையுள்ள உலகங்கள் மேலே இருக்கின்றன.

வினா : — 69. கீழேஇருக்கிற உலகங்கள் எவை?

விடை :— அதலமுதல் பாதாளம்வரையுள்ள உலகங்கள் கீழே இருக்கின்றன.

---

## ஜம்பூத்வீபம்.

வினா : — 70. ஐயா! அவைகளிருக்கட்டும். இந்தப்பூமியானது எவ்வளவு விஸ்தீரணமுடையது?

விடை :— அப்பா! பஞ்சாசத்கோடி விஸ்தீரணமுடையது.

வினா : — 71. அப்பூமியானது வட்டமாகவிருக்கின்றதா? சதுரமாகவிருக்கின்றதா?

விடை :— கமலம்போல் வட்டமாகவிருக்கின்றது.

வினா : — 72. பூமியானது கமலம்போல் வட்டமாகவிருக்குமானால் அதற்கு இதழ்கள் எவை?

விடை :— ஸப்தத்தீவுகளே அதற்கு இதழ்களாம்.

வினா : — 73. அந்த ஸப்தத்தீவுகளுடைய மத்தியிலிருக்கின்ற தீவின்பெயர் என்ன?

விடை :— ஜம்பூத்தீவு.

வினா: — 74. இந்தத்தீவு எவ்வளவுயோசனைவிஸ்தீரணமுடையது?
விடை:— லக்ஷம்யோசனை விஸ்தீரணமுடையது.

வினா: — 75. அத்தீவின்மத்தியில் எவைகள் இருக்கின்றன?
விடை:— நவகண்டங்களிருக்கின்றன.

வினா: — 76. ஒவ்வொருகண்டமும் எவைகளால் வேறுபடுத்திப் பிரிக்கப்பட்டிருக்கின்றன?
விடை:— அஷ்டகுலகிரிகளென்றஎட்டுப்பர்வதங்களால் வேறுபடுத்திப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

வினா: — 77. மேற்சொன்ன நவகண்டங்களுக்கு மத்தியிலிருக்கும் கண்டத்தின்பெயர் யாது?
விடை:— இளாவிருதகண்டம்.

வினா: — 78. இந்த இளாவிருதகண்டத்தின் மத்தியில் என்ன இருக்கின்றது?
விடை:— மகாமேருபர்வதம் இருக்கின்றது.

வினா: — 79. இந்தப்பர்வதம் குலகிரிகளுக்கெல்லாம் அரசனா?
விடை:— ஆம். அரசனே.

வினா: — 80. மேருமலைஎன்பது மண்ணா, கல்லா?
விடை:— அம்மலை மண்ணுமல்ல, கல்லுமல்ல. ஸ்வர்ணமலையேயாம்.

வினா: — 81. நிஷதம், ஏமகூடம், இமாலயம்முதலிய பர்வதங்கள் எவ்விடத்தில் இருக்கின்றன?
விடை:— இளாவிருதகண்டத்திற்குத் தெற்கேஇருக்கின்றன.

வினா: — 82. அக்கண்டத்திற்குக் கிழக்கிலும் மேற்கிலும் என்னென்னபர்வதங்கள் இருக்கின்றன?
விடை:— மாலியவான், கந்தமாதனம்என்ற பர்வதங்கள் இருக்கின்றன.

வினா: — 83. மேருவுக்கு நான்குதிசைகளிலுமிருக்கின்ற பர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை?
விடை:— மந்தரம், மேருமந்தரம், சுபாரசுவம், குமுதமென்ற பெயர்களாம்.

வினு : — 84. அப்பர்வதங்களுக்கு த்வஜம்போல் ஒவ்வொருமலை யிலும் மிகவும் உயர்ந்ததாயும் பருத்ததாயும் சிறந்து விளங்குகின்ற விருக்ஷங்களுக்குரிய பெயர்களெவை?

விடை :— சூதமென்றும், ஜம்புவென்றும், கதம்பமென்றும், நெக்குரோதமென்றும் சொல்லப்படும்.

வினு : — 85. அவ்விருக்ஷங்களின் ஸமீபத்தில் என்னென்னமடுக் கள் இருக்கின்றன ?

விடை :— பால், நெய், மது, கருப்புஆகிய மடுக்கள் இருக் கின்றன.

வினு : — 86. இவைகளின் ரஸங்களினுல் பூர்ணமாயிருக்கின்றஜல ங்கள், அததுகளின் ருசிகளைத்தான் பொருந்தியிரு க்குமோ ?

விடை :— ஆம். அதற்கென்ன தடை.

வினு : — 87. அம்மடுக்களில் இராநின்ற ஜலங்களை எவர்கள் பான ம்பண்ணுகிறார்கள் ?

விடை :— உபதேவகணங்கள் பானம்பண்ணுகிறார்கள்.

வினு : — 88. உபதேவகணங்கள் என்பவர்கள் எவர்கள் ?

விடை :— தேவசிரேஷ்டர்களுக்குத் தொண்டுசெய்கிறவர்களே உபதேவகணங்களாம்.

வினு : — 89. இவர்கள் தேவசிரேஷ்டர்களுக்கு எவ்விதமான தொண்டுகள்செய்கிறார்கள் ?

விடை :— கானம்முதலிய தொண்டுகளைச் செய்கிறார்கள்.

வினு : — 90. அவைகளை எவ்விடத்தில்வைத்துச்செய்கிறார்கள் ?

விடை :— தேவஉத்தியானவனங்களில் வைத்துச்செய்கிறார்கள்.

வினு : — 91. அவைகள் எவ்விடத்தில் இருக்கின்றன ?

விடை :— மேலேசொன்ன க்ஷீரமடு முதலியவைகளுக்கு ஸமீப மாகவிருக்கின்றன.

வினு : — 92. அப்படி எத்தனை உத்தியானவனங்கள் உண்டு ?

விடை :— நான்கு உத்தியானவனங்கள் உண்டு.

வினு : — 93. அவைகளுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— நந்தனம், சயித்திராதம், வயிப்பிராசிகம், சர்வதோபத்திரம்என்றபெயர்களே அவைகளுக்குரியனவாம்.

வினா : — 94. இதற்குமுன்சொன்ன குலகிரிகளுக்கு ஸகாயமாக உபபர்வதங்கள் படைக்கப்பட்டிருக்கின்றனவா ?

விடை :— ஆம். படைக்கப்பட்டிருக்கின்றன.

வினா : — 95. அவைகள் எவ்விடத்தில் படைக்கப்பட்டிருக்கின்றன ?

விடை :— மகாமேருபர்வதத்தின் அடிவாரத்தில் படைக்கப்பட்டிருக்கின்றன.

வினா : — 96. அந்த உபபர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— குரங்கம், குரவகம், குசும்பம், வைகங்கதம், சித்திரகூடம், சிசிரம், பதங்கம், ருசகம், நிஷதம், சிகிவாசம், கபிலம், சங்கம், வைடூரியம், சாருதி, அமுசம், ரிஷபம், நாகம், காளாஞ்சனம், நாரதம்முதலியவைகளே அப்பருவதங்களுக்குரிய பெயர்களாம்.

வினா : — 97. மகாமேருபர்வதத்தின் நாலண்டையிலும் எத்தனை பர்வதங்கள் அதனைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றன ?

விடை :— எட்டுபர்வதங்கள் அதனைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றன.

வினா : — 98. தென்திசையிலிருக்கின்ற பர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— கைலாஸம், கரவீரம் என்னும் பெயர்களாம்.

வினா : — 99. மேல்திசையிலிருக்கிற பர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— நவம், பாரியாத்திரம் என்னும் பெயர்களாம்.

வினா : — 100. வடதிசையிலிருக்கின்ற பர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— திரிசிருங்கம், மகரமென்னும் பெயர்களாம்.

வினா : — 101. கீழ்திசையிலிருக்கின்ற பர்வதங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை :— சடரம், தேவகூடம் என்னும் பெயர்களாம்.

வினு: — 102. ஸ்வர்ணபர்வதமாகிய மஹாமேருவின்சிரஸிலே என்னஇருக்கின்றது?

விடை:— சாதகும்பிஎன்ற ஒரு பட்டணமிருக்கின்றது.

வினு: — 103. இந்தப்பட்டணம் பிர்மதேவனுடைய எந்தப்ரதேசத்தில் இருக்கின்றது?

விடை:— மத்தியப்ரதேசத்திலிருக்கின்றது.

வினு: — 104. அந்தப்பட்டணத்திற்கு நாலண்டையிலும் எவைகள் இருக்கின்றன?

விடை:— நகரங்கள் இருக்கின்றன.

வினு: — 105. எத்தனைநகரங்கள் இருக்கின்றன?

விடை:— எட்டுநகரங்கள் இருக்கின்றன.

வினு: — 106. அவைகளில் எவர்கள் வாஸம்செய்கிறுர்கள்?

விடை:— இந்திரன், அக்னி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசான்யனுகிய அஷ்டதிக்பாலாள் வாஸம் செய்கிறுர்கள்.

வினு: — 107. மேருவின்சிரஸிலேயிருக்கிற சாதகும்பி என்ற பட்டணம் யாருக்குச்சொந்தம்?

விடை:— பிர்மதேவனுக்குச்சொந்தம்.

வினு: — 108. அப்பட்டணத்தில் நதி இருக்கின்றதா?

விடை:— ஆம். இருக்கின்றது.

வினு: — 109. அந்நதியின்பெயர் யாது?

விடை:— அந்நதியின்பெயர் விஷ்ணுபதி என்று சொல்லப்படும்.

வினு: — 110. அந்நதிக்கு இப்பெயர் எதனுல் வந்தது?

விடை:— ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய பாதத்திலிருந்து உத்பவித்ததினுல் வந்தது.

வினு: — 111. அதற்கு இதைத்தவிர வேறுபெயர் உண்டா?

விடை:— உண்டு.

வினு: — 112. அப்பெயர் யாது?

விடை:— கங்கை.

வினா: — 113. விஷ்ணுவின் பாதத்திலிருந்து உத்பவித்த கங்காநதியானது பின்பு எவ்வாறாக பவித்தது?

விடை:— மேருவின் சிகரத்தின்வழியாக பிர்மதேவனுடைய சாதகும்பிபட்டணத்திற் பிரவேசித்து, அதற்குப் பின் நாலுதிசைகளிலும் நாலுபிரிவுகளாகப் பிரிந்து போயிற்று.

வினா: — 114. அவ்விதம் நாலுபிரகாரமாகப் பேதிக்கப்பட்ட நான் குநதிகளுக்குரிய பெயர்கள் எவை?

விடை:— சிதை, அளகந்தை, சக்ஷு, பத்திரையென்று சொல்லப்படும்.

வினா: — 115. சிதையென்ற நதியானது எந்தமுகமாகப் பிரவாகிக்கின்றது?

விடை:— கிழக்குமுகமாகப் பிரவாகிக்கின்றது.

வினா: — 116. பத்திரையென்ற நதியானது எந்தமுகமாகப் பிரவாகிக்கின்றது?

விடை:— வடக்குமுகமாகப் பிரவாகிக்கின்றது.

வினா: — 117. சக்ஷுவென்றநதி எந்தமுகமாகப் பிரவாகிக்கின்றது?

விடை:— மேற்குமுகமாகப் பிரவாகிக்கின்றது.

வினா: — 118. அளகந்தையென்றநதி எந்தமுகமாகப் பிரவாகிக்கின்றது?

விடை:— அளகந்தையென்றநதி மேருவிலேயிராநின்ற பிர்மாவினுடைய பட்டணத்திற்குத்தெற்கே அனேகப் பிரகாரங்களான கிரிசிகரங்களை அதிக்கிரமித்துக்கொண்டும், ஏமகூடம், இமாலயம் இவைகளுடைய சிகரங்களை ஆக்கிரமித்துக்கொண்டும், பாதகண்டத்தின் வழியாகத் தெற்குமுகமாய்ப் பிரவாகிக்கின்றது.

வினா: — 119. இந்த நான்குநதிகளும் எந்தெந்தஸமுத்திரங்களில் ஸங்கமமாகின்றன?

விடை:— அந்தந்ததிசைகளிலுள்ள ஸமுத்திரங்களில் ஸங்கமமாகின்றன.

## நவகண்டங்கள்.

வினா:—120. முன்நவகண்டங்கள் உண்டு என்று சொன்னீர்களே, அந்தஒன்பது கண்டங்களுக்குரிய பெயர்கள்எவை?

விடை:— இளாவிருதம், அரி, கிம்புரு, பாரதம், கேதுமாலம், பத்திராசுவம், ரம்மியம், இரண்மயகம், உத்தரகுருவென்று சொல்லப்படும்.

வினா:—121. இளாவிருதகண்டத்தின் விசேஷமென்ன?

விடை:— மேரு, குலகிரிமுதலிய உபபர்வதங்களால் வியாபிக்கப்பட்டுமிகவும் தேஜோமயமாய் ஜ்வலித்துக் கொண்டிருக்கின்றது தான்விசேஷம்.

வினா:—122. அரிவருஷத்தின் விசேஷம்யாது?

விடை:— நரஸிம்ஹமூர்த்தியினுடைய ஸாநித்தியம்தான் விசேஷம்.

வினா:—123. இந்த மூர்த்தியானவர் எவரால் பூஜிக்கப்படுகின்றார்?

விடை:— பிரஹ்லாதன் என்னுமோர் பாகவதசிரோமணியால் பூஜிக்கப்படுகின்றார்.

வினா:—124. கிம்புருவென்னும் கண்டத்தின் விசேஷம்யாது?

விடை:— பரமபக்த சிரோமணியாகிய ஆஞ்சநேயரின் உபாஸனைதான்விசேஷம்.

வினா:—125. இந்த ஆஞ்சநேயமூர்த்தியானவர் எவரைக்குறித்து உபாஸனைசெய்கின்றார்?

விடை:— மந்திரத்தின்பொருள் ராகாதிகளினாலே தூஷிக்கப்படாத விசுத்தஞானஸ்வரூபமாயும், தன்னுடைய மஹாத்மத்தினால் ஸத்வாதிகுண காரியங்களான ஜாக்ராதி அவஸ்தைகளில்லாதவராயும், ஸ்வயம்பிரகாசராயும், மிகுந்தசாந்தியை உடையவராயும், யோகத்தினாலேபிறந்த ஞானத்தினால் அறியத்தக்கவராயும், கர்மமூலங்களான நாமரூபங்கள் இல்லாதவராயும், அஹங்காரமமகாரமற்றவராயுமிருக்கிற ஸ்ரீராமமூர்த்தியாகிய ஹரியைக்குறித்து உபாஸனை செய்கின்றார்.

வினா :—126. கேதுமால மென்னும் கண்டத்தின் விசேஷம் யாது?
விடை :— ஸ்ரீஹரியானவர் இலக்ஷ்மீதேவிக்குப் பிரியத்தை யுண்டுபண்ணும் பொருட்டு ப்ரத்தியும்னனாக அவதரித்ததுதான் விசேஷம்.

வினா :—127. பத்திராசுவமென்னும் கண்டத்தின் விசேஷம்யாது?
விடை :— ஹயக்கிரீவமூர்த்தியின் ஸாந்நித்தியம்தான்விசேஷம்.

வினா :—128. இந்தமூர்த்தியானவர் யாரால் உபாஸனைசெய்யப்படுகின்றார்?
விடை :— தர்மனுடையபுத்திரனாகிய பத்திரசிரவஸ்ஸென்னும் ஓர்பக்த சிரோமணியால் உபாஸனைசெய்யப்படுகின்றார்.

வினா :—129. ஹயக்கிரீவமூர்த்தியென்பவர்யாவர்?
விடை :— ஸ்ரீஹரியே ஹயக்கிரீவமூர்த்தியாம்.

வினா :—130. அவர் யாதுகாரணத்தின்பொருட்டு ஹயக்கிரீவராக அவதரித்தார்?
விடை :— வேதங்களைக்கவர்ந்துசென்ற அஸுரனை நிக்ரஹித்து அவ்வேதங்களை மறுபடியும் பூமியில்நிலைத்திருக்கச் செய்யும்பொருட்டு அவதரித்தார்.

வினா :—131. ரம்மியமென்னும் கண்டத்தின்விசேஷம் யாது?
விடை :— ஸ்ரீ ஹரியானவர் மநுசக்கிரவர்த்தியின் அநுக்ரஹத்தின்பொருட்டு மத்ஸ்யாவதாரம் செய்ததுதான் விசேஷம்.

வினா :—132. இரண்மயகம் என்னும் கண்டத்தின்விசேஷம் யாது?
விடை :— ஸ்ரீ ஹரியானவர் கூர்மாவதாரம்செய்ததுதான் விசேஷம்.

வினா :—133. இந்தக் கூர்மமூர்த்தியை எவர்கள் ஆராதிக்கின்றார்கள்?
விடை :— பிதுர்க்கணங்களுக்கு அதிபதியான அரியமாவும், அக் கண்டத்திலுள்ள மற்றவர்களும் ஆராதிக்கின்றார்கள்.

வினா :—134. உத்தரகுருவென்னும் கண்டத்தின் விசேஷம் யாது?

விடை :— ஸ்ரீ ஹரியானவர் பூமியைப் பாயாகச்சுருட்டிச்சென்ற இரண்யாக்ஷனை ஸம்ஹரிக்கும்பொருட்டு வராஹாவதாரம்செய்ததுதான் விசேஷம்.

வினா : —135. இந்த வராஹமூர்த்தியானவர் யாரால் உபாஸிக்கப்படுகின்றார் ?

விடை :— பூமிதேவியால் உபாஸிக்கப்படுகின்றார்.

வினா : —136. பரதகண்டத்தின் விசேஷம்யாது ? அக்கண்டம் எவ்விடத்திலிருக்கின்றது ?

விடை :— நாம் வஸிக்கிறகண்டமே பரதகண்டமாம். இப்பரதகண்டமானது மிகவும் சிறந்த புண்ணியபூமியாகையால் அதில் பலவிதமான விசேஷங்கள்உண்டு.

வினா : —137. இந்தக்கண்டத்திற்கு, பரதகண்டமென்று பெயர் வந்த காரணமென்ன ?

விடை :— இந்தக்கண்டத்தைப் பரதன்என்னும் ஓர்சக்கிரவர்த்தி மநுநீதிதவறாமல் அரசாக்ஷிபுரிந்து உலகத்தில் நீதிநெறிகளை நிலைத்திருக்கச்செய்ததால், பெரியோர்கள்அவனுடைய பெயரை இக்கண்டத்திற்கு சூட்டிவித்தார்கள்.

வினா : —138. பரதன்என்பவன் யாவன் ?

விடை :— பரதன்என்பவன் சந்திரவம்சத்தில் ஜனித்த ஓர்அரசன்.

வினா : —139. இவனது மாதாபிதாக்களின் பெயர்கள்எவை ?

விடை :— சகுந்தலைஎன்றும் துஷ்யந்தனென்றும் சொல்லுவார்கள்.

வினா : —140. பரதகண்டத்தைச் சிறந்த புண்ணியபூமியென்றதற்குக் காரணமென்ன ?

விடை :— இக்கண்டத்திலுள்ள பலஉத்கிருஷ்டமான பர்வதங்களிலிருந்து அனேகமஹாநதிகள் உற்பத்தியாகி ஸாகரங்களில் ஸங்கமமாகிறபடியாலும், சிறந்த சிவாலயங்களும் விஷ்ணு ஆலயங்களுமிருப்பதினாலும், புண்ணியஸ்வரூபிகளான உத்தமபுருஷர்களுக்கு ஜனனஸ்தானமாக ஏற்பட்டிருப்பதினாலும், தேவர்கள் தங்

கள் கர்மநிவிருத்தியின்பொருட்டு இதில் ஜனிக்கவே ண்டுமென்று விரும்புவதினாலும், பரதகண்டத்தைச் சிறந்த புண்ணியபூமியெனக்கூறக் காரணமாயிற்று.

வினா:—141. மற்ற ஒவ்வொருகண்டத்திலும் ஒவ்வொருமூர்த்தி ஒவ்வொரு புண்ணியபுருஷனால் ஆராதிக்கப்படுவது போல், இந்தப் பரதகண்டத்தில் எந்தமூர்த்தி எவ ரால் ஆராதிக்கப்படுகின்றார்?

விடை:— தத்துவக்ஞானியாகிய நாரதமகாமுனிவரால் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி ஆராதிக்கப்படுகின்றார்.

வினா:—142. இந்தப்பரதகண்டத்தில் அனேகபர்வதங்களும் நதிக ளும் உண்டு என்று சொன்னீர்களே, அவைகளுக் குரிய பெயர்கள் எவை?

விடை:— பர்வதங்களின் பெயர்களாவது, மலயம், மந்திரபிரஸ் தம், மைநாகம், திரிகூடம், ரிஷபம், குடகம், கோஷ் டணம், சைகம், வேதகிரி, ரிஸ்யமுகம், ஸ்ரீ சைலம், வேங்கடம், மஹேந்திரம், வாரிதாரம், விந்தியம், சுக த்திமான், ரிக்ஷகிரி, பாரியாத்திரம், துரோணம், சித் திரகூடம், கோவர்த்தனம், ரைவதகம், கபுகம், நீலம், கோகாமுகம், இந்திரநீலகம், இமயகிரிஎன்று சொல் லப்படும். நதிகளின் பெயர்களோவெனின், சந்திர வரை, தாம்பரபரணி, அவடோதரம், கிருதுமாலா, வைகாயிசி, காவேரி, பெண்ணை, க்ஷீரநதி, சக்கரா வதி, துங்கபத்திரை, கிருஷ்ணவேணி, பீமநதி, நிர் விந்தியா, கோதாவிரி, பயோஷ்ணி, தாபினி, ரேவா, சுரஸா, நிர்மலா, சாமணவதி, ஸிந்து,சோணம், மகா நதி, வேதஸ்மிருதி, ரிஷிகுல்லியா, கௌசகி, ஸரஸ் வதி, பிருஹத்துவதி, கோமதி, சரயு, ரோமவதி, சுகோஷ்டா, குக்ஷமணு, சத்துரு, மருத்துருதா, விதஸ்தா, அசிக்னி, விசுவாவென்றும் சொல்லப்படும்.

வினா:—143. பரதகண்டத்திலுள்ள பர்வதங்களும் நதிகளும் இவ் வளவுதானா? அல்லது இன்னும் உண்டா?

விடை:— இன்னும் எவ்வளவோ பர்வதங்களும் நதிகளுமிருக் கின்றன. ஆனால், இப்பொழுது உத்கிருஷ்டமான பர் வதங்களின் பெயர்களையும், பாபவிமோசனஹேது

வான மஹா புண்ணியநதிகளின் பெயர்களையும்தான் இவ்விடத்தில் எடுத்துக்கூறப்பட்டது.

வினு: — 144. இந்த பாரதவருஷத்திலிருக்கின்ற மனிதர்கள் எவ்விதமானகர்மங்களைச் செய்கிறார்கள்?

விடை:— ஸாத்விக, ராஜஸ, தாமஸமான கர்மங்களைச் செய்கின்றார்கள்.

வினு: — 145. அதனால் அவர்களுக்கு ஸித்திக்கின்றவைஎவை?

விடை:— ஸ்வர்க்க நரகப்ராப்தியும், பூலோகஜனனமும் ஸித்திக்கின்றன.

வினு: — 146. அவ்விதமாயின், தேவர்கள் இவ்வுலகத்தில் ஜனிக்க வேண்டுமென்று விரும்புவார்களா?

விடை:— விரும்புவார்கள்.

வினு: — 147. அதற்கென்ன காரணம்?

விடை:— இந்த பாரதவருஷத்தில் வர்ணாசிரமதர்மானுஷ்டானங்களால் மோக்ஷமும், அதற்குஹேதுவான ஞானமும், அந்தஞானத்திற்கு ஹேதுவானகர்மங்களும், கர்மங்களுக்கு ஹேதுவான திரவியங்களும்ஸித்தமாக விருப்பதால் இதில் ஜனிக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள்.

வினு: — 148. மோக்ஷம் ஸித்திக்கிறதென்பதற்கு நிதர்சனமென்ன?

விடை:— ஜீவன் முக்திஎன்ற முக்தியே போதுமான நிதர்சனம்.

வினு: — 149. ஐயா! சகரபுத்திரர்கள் அசுவத்தைத் தேடிச்சென்றபொழுது இந்த ஜம்பூத்தீபத்திலுள்ள ஒவ்வொரு ஸ்தலங்களையும் வெட்டிப் பரிசோதனை செய்தபடியினாலே இந்தத்தீபத்திற்கு உபதீபங்களாக எட்டுத்தீவுகள் ஏற்பட்டிருக்கின்றனவென்று சொல்லுகிறார்களே, அது உண்மைதானா?

விடை:— ஆம். அது உண்மையே.

வினு: — 150. அவ்விதமாயின், அந்த உபதீவுகளுக்குரிய பெயர்கள் எவை?

விடை:— ஸ்வர்ணபிரஸ்தம், சந்திரவலகம், ஆவர்த்தனம், ரமணகம், மந்தஅரணம், பாஞ்சசன்னியம், சிம்மளம்,

இலங்கை முதலியவைகளே அத்தீவுகளுக்குரிய பெயர்களாம்.

வினா: —151. இந்த ஜம்பூத்தீபமானது எதைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றது?
விடை:— மஹாமேரு பர்வதத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினா: —152. அந்த ஜம்பூத்தீபத்தை எது சூழ்ந்துகொண்டிருக்கின்றது?
விடை:— லவணஸமுத்திரம் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

---

## பிலக்ஷத்தீபம்.

வினா: —153. அந்த லவணஸமுத்திரத்தை எது சூழ்ந்துகொண்டிருக்கின்றது?
விடை:— பிலக்ஷமென்னுந் தீவு சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினா: —154. அத்தீவுக்கு பிலக்ஷமென்ற பெயர்வந்த காரணம் யாது?
விடை:— ஸ்வர்ணரூபமான பிலக்ஷவிருக்ஷமொன்று அத்தீவில் நிற்பதால் அதற்கு அப்பெயர்வந்தது.

வினா: —155. அந்தத்தீவிலே எந்தத்தேவனுடைய ஸாநித்தியம்?
விடை:— அக்னிதேவனுடைய ஸாநித்தியம்.

வினா: —156. அவருக்கு நாவு எத்தனை?
விடை:— ஏழு.

வினா: —157. இந்தப்பிலக்ஷத்தீவுக்கு எவன் அதிபதி?
விடை:— பிரியவிரதனுடைய புத்திரனாகிய இத்துமசிக் என்பவன் அதிபதி.

வினா: —158. அவன் அத்தீவை எத்தனை கண்டங்களாகப் பிரித்திருக்கின்றான்?
விடை:— ஏழுகண்டங்களாகப் பிரித்திருக்கின்றான்.

வினா: —159. அவ்விதம் பிரித்தகாரணம் யாது?
விடை:— அவனுடைய ஏழுகுமாரர்களுக்கும் பாகித்துக்கொடுக்கும்பொருட்டு அவ்விதம் பிரித்தனன்.

வினா: — 160. இத்துமசிக்குவின் பிள்ளையான எழுவர்களின்பெயர்கள் எவை ?

விடை:— இதனடியிற் கூறப்படும் கண்டங்களுக்குரிய பெயர்களே அவர்களுடைய பெயர்களாம்.

வினா: — 161. இத்துமசிக்கானவன் அத்தீவைப் பிரித்துக்கொடுத்த பிறகு எவ்விதமாகவிருந்தான் ?

விடை:— ஸம்ஸாரத்திலிருந்தும் நீங்கி ஆத்மக்ஞானியாகப் பஸித்திருந்தான்.

வினா: — 162. அந்த ஏழுகண்டங்களுக்குரிய பெயர்கள் எவை ?

விடை:— சிலம், வயசம், சுபத்திரம், சாந்தம், ஷேமம், அமயம், ரிதம் என்று சொல்லப்படும்.

வினா: — 163. அத்தீவில் பர்வதங்கள், நதிகள் முதலியவை இருக்கின்றனவா ?

விடை:— இருக்கின்றன.

வினா: — 164. எத்தனை பர்வதங்களும் எத்தனை நதிகளுமிருக்கின்றன ?

விடை:— ஏழுபர்வதங்களும் ஏழுநதிகளுமே ப்ரஸித்தமாகவிருக்கின்றன.

வினா: — 165. அப்பர்வதங்களுக்கும் அந்நதிகளுக்குமுரிய பெயர்கள் எவை ?

விடை:— பர்வதங்களின் பெயர்களாவது, மணிகூடம், வச்சிரகூடம், இந்திரிசேனம், ஜோதிடமா, தூம்பாவர்ணம், இரணியகிரிவம், மேகமாலமென்று சொல்லப்படும். நதிகளின் பெயர்களோவெனின், அருணா, ரமணா, ஆங்கிரசி, சாவித்திரி, சுப்பிரபாதா, ருதம்பரா, சத்தியம்பராவென்று கூறப்படும்.

வினா: — 166. மேலேசொன்ன நதிகளென்ன, மஹாநதிகளா ?

விடை:— ஆம். மஹாநதிகளே.

வினா: — 167. அந்நதிகளின் ஜலத்தைப்பானம்செய்கின்றவர்கள் எவ்விதமாகப் பஸிக்கின்றார்கள் ?

விடை: — ரஜஸ்தமோகுணங்களைவிடப்பட்டவர்களாய் அம்சாளென்றும், பதங்காளென்றும், ஊர்த்துவாயனளென்றும், சத்தியங்காளென்றும் பெயர்களையுடைய நான்குவருணத்தவர்களாகப் பஸிக்கின்றார்கள்.

வினா: —168. அவர்கள் எத்தனைவயஸுவரை ஜீவித்திருப்பார்கள்?
விடை:— அனேகாயிரம் வயஸுவரை ஜீவித்திருப்பார்கள்.

வினா: —169. அவர்களுடைய ரூபமானது எவர்களுடைய ரூபத்தைப்போலிருக்கும்?
விடை:— தேவதைகளுடைய ரூபத்தைப்போலிருக்கும்.

வினா: —170. மேலேசொன்ன நான்குவருணத்தார்களும் எந்தப் பகவானை உபாஸிக்கின்றார்கள்?
விடை:— வேதமயமாயிருக்கப்பட்ட சூரியபகவானை பரமாத்மாவாகப்பாவித்து வேதமார்க்கங்களினால் உபாஸிக்கின்றார்கள்.

வினா: —171. இவர்கள் பராக்ரமசாலிகளா?
விடை:— ஆம். மிகவும் பராக்ரமசாலிகளே.

வினா: —172. இவர்களுக்கு இந்தப் பராக்ரமமும், தீர்க்காயுளும் எப்பொழுது ஏற்படுகின்றன?
விடை:— ஜனிக்கிறபொழுதே ஏற்படுகின்றன.

வினா: —173. ப்ரஸ்தாபவிஷயமான பிலக்ஷத்தீவை எது சூழ்ந்து கொண்டிருக்கின்றது?
விடை:— இக்ஷுரஸோதமென்கிற கருப்பஞ்சாறு ஸமுத்திரம் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

---

## சால்மலித்வீபம்.

வினா: —174. அந்தக் கருப்பஞ்சாறு ஸமுத்திரம் எதனால் சூழப் பட்டிருக்கின்றது?
விடை:— சால்மலி என்னும் தீவினால் சூழப்பட்டிருக்கின்றது.

வினா: —175. இந்த சால்மலிஎன்னும்தீவை எது சூழ்ந்துகொண்டிருக்கின்றது?
விடை:— சுராவென்னும் ஸமுத்திரம் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினா: —176. பிலக்ஷமென்னுந்தீவில் பிலக்ஷவிருக்ஷமிருக்கிறது போல், இந்த சால்மலி என்னும்தீவில் ஏதேனும்விருக்ஷம் இருக்கின்றதா?
விடை:— இருக்கின்றது.

வினு: — 177. அவ்விருக்ஷத்தின் பெயர்யாது?

விடை :— சால்மலிஎன்று சொல்லப்படும்.

வினு: — 178. சால்மலி என்பதற்குப் பொருள் என்ன?

விடை :— இலவுஎன்று அருத்தம்.

வினு: — 179. அந்த இலவமரத்தடியில் வஸிக்கின்றவர் யார்?

விடை :— ஞானசக்திமுதலான குணங்களை யுடையவராயும், பக்ஷிகளுக்கெல்லாம் இராஜாவாயுமிருக்கின்ற கருடாழ்வார் வஸிக்கின்றார்.

வினு: — 180. அந்த சால்மலி என்னும்தீவில் சால்மலிஎன்ற விருக்ஷம் நிற்பதினால்தான் அத்தீவுக்கு அப்பெயர்கிடைத்ததோ?

விடை :— ஆம். அதனால்தான் அப்பெயர்கிடைத்தது.

வினு: — 181. இந்தத்தீவுக்கு எவன் அதிபதி?

விடை :— பிரியவிருதனுடைய குமாரனான எக்ஞபாகுஎன்பவன் அதிபதி.

வினு: — 182. இவன் அத்தீவை ஒரேதீவாக வைத்திருந்தானா? அல்லது கண்டம்கண்டமாகப்பிரித்திருந்தானா?

விடை :— ஒரேதீவாக வைத்திருக்கவில்லை. கண்டம்கண்டமாகவே பிரித்திருந்தான்.

வினு: — 183. இவன் யாதுகாரணத்தின்பொருட்டு அதைக் கண்டம்கண்டமாகப் பிரித்தனன்?

விடை :— தன்னுடைய குமாரர்களுக்குப் பாகம்செய்து கொடுக்கும்பொருட்டு அதனைக் கண்டம்கண்டமாகப் பிரித்தனன்.

வினு: — 184. அவனுக்கு எத்தனைகுமாரர்கள் உண்டு?

விடை :— ஏழுகுமாரர்கள் உண்டு.

வினு: — 185. அவர்களுக்குரிய பெயர்கள்எவை?

விடை :— இதனடியிற்கூறப்படும் கண்டங்களுக்குரிய பெயர்களே அவர்களுக்குரிய பெயர்களாம்.

வினு: — 186. ஆனால், அக்கண்டங்களுக்குரிய பெயர்கள்எவை?

விடை:— சுரோசனம், சௌமனசியம், ரமணகம், தேவபெருகம், பாரிபத்திரம், ஆப்பியாயனம், அபிக்கியானம் என்று சொல்லப்படும்.

வினு:—187. அக்கண்டங்களில் பர்வதங்களும் நதிகளுமிருக்கின்றனவா?

விடை:— ஆம். இருக்கின்றன.

வினு:—188. எத்தனைபர்வதங்களும் எத்தனைநதிகளு மிருக்கின்றன?

விடை:— ஏழுபர்வதங்களும் ஏழுநதிகளுமிருக்கின்றன.

வினு:—189. அப்பர்வதங்களுக்கும் அந்நதிகளுக்குமுரிய பெயர்களெவை?

விடை:— பர்வதங்களுடைய பெயர்களாவது, சுவற்சம், சதசிருங்கம், வாமதேவம், குந்தம், குமுதம், புஷ்பவருஷம், சகசுருதியென்று சொல்லப்படும். நதிகளின் பெயர்களோவெனின், அனுமதி, சினிவாலி, ஸரஸ்வதி, குரு, அசிக்கினி, நந்தா, ராகாவென்று கூறப்படும்.

வினு:—190. பிலக்ஷம்என்னும் தீவில்வர்ணபேதங்கள் ஏற்பட்டிருக்கிறதுபோல் இந்தசால்மலிஎன்னும்தீவில் ஏதேனும் வர்ணபேதங்கள்உண்டா?

விடை:— உண்டு.

வினு:—191. அவை எத்தனைவர்ணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன?

விடை:— நாலுவர்ணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

வினு:—192. அந்தந்த வர்ணத்தாருக்குரிய பெயர்களெவை?

விடை:— சுருத்திராள், வீரியதராள், வசுந்தராள், இஷ்டாந்தராள்என்று சொல்லப்படும்.

வினு:—193. இவர்கள்எந்தபகவானை உபாஸிக்கின்றார்கள்?

விடை:— சந்திரபகவானை உபாஸிக்கின்றார்கள்.

வினு:—194. ஐயா! இந்தசால்மலி என்னுந்தீவை ஸுராஎன்னும் ஸமுத்திரம் சூழ்ந்துகொண்டிருக்கிறதாக முன்சொன்னீர்களல்லவா?

விடை:— ஆம். சொன்னேன்.

## குஜத்வீபம்.

வினு :— 195. அந்தஸுராவென்னும் ஸமுத்திரமானது எதனுல் சூழப்பட்டிருக்கின்றது?
விடை:— குஜம்என்னும் தீவினுல்சூழப்பட்டிருக்கின்றது.

வினு :— 196. அந்தக்குஜம்என்னும் தீவை எதுசூழ்ந்துகொண்டிருக்கின்றது?
விடை:— நெய்க்கடல் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினு :— 197. மேற்சொன்னதீவுக்கு குஜத்தீபமென்னும்பெயர் வந்தகாரணம்யாது?
விடை:— அத்தீவில் குஜஸ்தம்பம்ஒன்றுநிற்பதால் அப்பெயர் வந்தது.

வினு :— 198. அந்தஸ்தம்பத்தை அவ்விடத்தில் நிறுத்தினவர் யார்?
விடை:— தேவன்.

வினு :— 199. யாதுப் பிரயோஜனத்தைக்கருதி அந்தஸ்தம்பத்தை அவ்விடத்தில் நிறுத்தினுர்?
விடை:— இதரப்பிரகாசங்களை எதிர்பாராமல் எப்பொழுதும் அஷ்டதிக்குகளிலும் ஜாஜ்வல்லியமானமாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கும்பொருட்டு அந்தஸ்தம்பத்தை அவ்விடத்தில் நிறுத்தினுர்.

வினு :— 200. இத்தீவுக்கு எவன் அதிபதி?
விடை:— பிரியவிருதனுடைய புத்திரனுகிய இரணியரோமாவென்பவன் அதிபதி.

வினு :— 201. அவனுக்குஎத்தனை குமாரர்கள் உண்டு?
விடை:— ஏழுகுமாரர்கள் உண்டு.

வினு :— 202. இந்த இரணியரோமாவானவன் தன்னுடைய ஸகோதரர்களைப்போல் தன்னுடைய ஏழுகுமாரர்களுக்கும் குஜத்தீபத்தை ஏழுகண்டங்களாகப் பிரித்துப்பங்கிட்டுக் கொடுத்தானு?
விடை:— ஆம். கொடுத்தான்.

வினு :— 203. இரணியரோமாவுக்கு ஜனித்த ஏழுவர்களுக்குரிய பெயர்கள்எவை?

விடை :— வஸு, வஸுதானன், திருடருசி, நாபிகுமதன், ஸத்தியவிரதன், விப்பிரன், வாமதேவனென்ற பெயர்களாம்.

வினா : — 204. இக்கண்டங்களில் முன்கூறினதீவுகளிலுள்ள கண்டங்களைப்போல் பர்வதங்களும் நதிகளுமிருக்கின்றனவா?

விடை :— ஆம். இருக்கின்றன.

வினா : — 205. எத்தனைபர்வதங்களும்எத்தனை நதிகளுமிருக்கின்றன?

விடை :— இதற்கு முன்சொன்னதீவுகளிலுள்ள கண்டங்களைப்போல் ஏழுபர்வதங்களும் ஏழுநதிகளுமிருக்கின்றன.

வினா :— 206. அப்பர்வதங்களுக்கும் அந்நதிகளுக்கு முரியபெயர்களெவை?

விடை :— பர்வதங்களுடையபெயர்களாவது, பெப்புரு, சதுசிருங்கம், பிப்பலம், சித்திரகூடம், தேவானிகம், ஊர்த்தரோமா, திராவிணம்என்றுசொல்லப்படும். நதிகளுக்குரியபெயர்களோவெனின், ரசகுல்லியை, மதுகுல்லியை, சுருதுவிந்தை, மித்துருவிந்தை, வேதகர்ப்பை, கிருதச்சுதா, மந்திரமாலையென்றுகூறப்படும்.

வினா : — 207. அந்தநதிகளின் தீர்த்தங்களைப் பானம்செய்கின்றவர்களெவ்விதமாக பவிக்கின்றார்கள்?

விடை :— குசலாள், கோவிதாள், அபியுக்தாள், குலகாளென்றவர்ணத்தவர்களாக பவிக்கின்றார்கள்.

வினா : — 208. இந்தச் சதுர்வர்ணத்தார்களும் எந்ததேவனை ஆராதிக்கின்றார்கள்?

விடை :— அக்னிதேவனை ஆராதிக்கின்றார்கள்.

வினா : — 209. ஐயா! இந்தக் குஜத்தீபமானது நெய்க்கடலினால் சூழப்பட்டிருப்பதுபோல் அக்கடலானது வேறுஎதனால் சூழப்பட்டிருக்கின்றது?

விடை :— கிரௌஞ்சமென்னும் ஓர்தீவினால் சூழப்பட்டிருக்கின்றது.

---

## கிரௌஞ்சத்வீபம்.

வினா:—210. அந்த கிரௌஞ்சமென்னுந்தீவை எதுசூழ்ந்துகொண்டிருக்கின்றது?

விடை:— பாற்கடல் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினா:—211. அத்தீவுக்கு கிரௌஞ்சமென்ற பெயர்வந்த காரணம் யாது?

விடை:— அத்தீவில் கிரௌஞ்சமென்னும் ஓர் பர்வதமிருப்பதினால் அப்பெயர் வந்தது.

வினா:—212. அந்தத்தீவில் அனேகந்தாழ்வரைப் பிரதேசங்களிருக்கிறதாகச் சொல்லுகிறார்களே, அதென்ன?

விடை:— ஆம். அனேகந்தாழ்வரைப் பிரதேசங்களிருக்கின்றன. இந்தத் தாழ்வரைகளானது ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியினுடைய ஆயுதத்தினால் துளைக்கப்பட்டவைகள்.

வினா:—213. ஆனால், அவைகளைப் பார்க்கிறபொழுது மிகுந்தபயமாகவிருக்குமோ?

விடை:— ஆம். மிகுந்தபயமாகவேயிருக்கும்.

வினா:—214. அத்தாழ்வரைகள் இப்பொழுதுஎன்னஸ்திதியிலிருக்கின்றன?

விடை:— அடுத்திருக்கிறபாற்கடலின் மோதலினாலே கொஞ்சம் கொஞ்சம் மூடப்பட்டிருக்கின்றன.

வினா:—215. இந்தக்கிரௌஞ்சமென்னுந்தீவுக்கு எவன் அதிபதி?

விடை:— பிரியவிரதனுடைய பிள்ளையானகிருதபிரஷ்டன் என்பவன் அதிபதி.

வினா:—216. அந்தக் கிருதப்பிரஷ்டனுக்கு எத்தனை பிள்ளைகள்?

விடை:— ஏழுபிள்ளைகள்.

வினா:—217. அவர்களுடைய பெயர்களெவை?

விடை:— ஆமோதன், துவகன், மேகபிரஷ்டன், சுதர்மன், ரெஞ்சிஷ்டன், லோகிதாரணன், வனஸ்பதியென்று சொல்லப்படும்.

வினா:—218. இந்தக் கிருதப்பிரஷ்டனனவன் தன்னுடைய ஸகோதரர்களைப்போல் தன்னுடைய ஏழுபிள்ளைகளுக்கும்

அந்தகிரௌஞ்சமென்னும் தீபத்தை ஏழுகண்டங்களாகப்பிரித்துபாகித்துக் கொடுத்திருக்கின்றனா?

விடை:— ஆம். பாகித்துக் கொடுத்திருக்கின்றான்.

வினா:—219. அக்கண்டங்களுக்குரிய பெயர்களெவை?

விடை:— அப்பிள்ளைகளுக்குரியபெயர்களே அக்கண்டங்களுக்குரியபெயர்களாம்.

வினா:—220. இக்கண்டங்களில் பர்வதங்கள் நதிகள்முதலியவை இருக்கின்றனவா?

விடை:— ஆம். இருக்கின்றன.

வினா:—221. எத்தனைபர்வதங்களும் எத்தனைநதிகளு மிருக்கின்றன?

விடை:— ஏழுபர்வதங்களும் ஏழுநதிகளுமிருக்கின்றன.

வினா:—222. அப்பர்வதங்களுக்கும் நதிகளுக்குமுரிய பெயர்கள் எவை?

விடை:— பர்வதங்களுடைய பெயர்களாவது, சுக்கிலம், வர்த்தமானம், போஜனம், உபபெருகணம், ஆனந்தம், நந்தம், சர்வதோபத்திரம் என்றுசொல்லப்படும். நதிகளுக்குரிய பெயர்களோவெனின், அபையா, அமிர்தவுகா, ஆரியகா, தீர்த்தவதி, பாத்திராவதி, பவித்தீர்வதி, சுக்கிலையென்று கூறப்படும்.

வினா:—223. இந்நதிகளின் தீர்த்தங்களைப் பானம்செய்கின்றவர்கள் எவ்விதமாக பவிக்கின்றார்கள்?

விடை:— குரு, ரிஷபன், திரவிணன், தேவனென்றபெயர்களையுடைய நான்குவருணத்தவர்களாக பவிக்கின்றார்கள்.

வினா:—224. இவர்கள்உபாஸிக்கின்ற தேவன்யார்?

விடை:— வருணதேவனும்.

வினா:—225. இந்தகிரௌஞ்சம்என்னும் தீவானது பாற்கடலினால் சூழப்பட்டிருக்கிறதுபோல் அப்பாற்கடலானது எதனால் சூழப்பட்டிருக்கின்றது?

விடை:— சாகத்வீபமென்னும் ஓர்தீவினால் சூழப்பட்டிருக்கின்றது.

## சாகத்வீபம்.

வினா: —226. அந்தச் சாகத்வீபத்தை எது சூழ்ந்துகொண்டிருக்கின்றது?

விடை:— தயிர்க்கடல் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

வினா: —227. மேலேசொன்னதீவுக்கு, சாகத்தீவுஎன்றபெயர் எதனால் ஏற்பட்டது?

விடை:— அத்தீவில் சாகமென்னப்பட்ட விருக்ஷமிருப்பதினால் அப்பெயர்ஏற்பட்டது.

வினா: —228. இந்தத்தீவுக்கு, பிரியவிரதனுடைய குமாரன்தான் அதிபதியோ?

விடை:— ஆம். அவன்தான் அதிபதி.

வினா: —229. அவனுடைய பெயரென்ன?

விடை:— மேதாதி.

வினா: —230. இந்தமேதாதிக்கும் ஏழுகுமாரர்கள் உண்டோ?

விடை:— ஆம். உண்டு.

வினா: —231. மேதாதியானவன் தன்ஸஹோதரர்களைப்போல் தன்னுடைய த்வீபத்தை ஏழுகண்டங்களாகப் பிரித்து அக்கண்டங்களுக்குத் தன்புத்திரர்களுக்குரிய பெயர்களையிட்டு அப்புத்திரர்களுக்கு இவ்வேழுகண்டங்களையும் பாகஞ்செய்துகொடுத்தானா?

விடை:— ஆம். கொடுத்தான்.

வினா: —232. அவனது பிள்ளைகளின் பெயர்களென்ன?

விடை:— புரோசகன், மனோசவன், வெபமானன், தூம்பாாணிகன், சித்திராதன், வெகுரூபன், விசுவவரான் என்று சொல்லுவார்கள்.

வினா: —233. இக்கண்டங்களுக்கும் முன்கூறின கண்டங்களைப்போல் 7-பர்வதங்களும் 7-நதிகளும் உண்டோ?

விடை:— ஆம். உண்டு.

வினா: —234. அப்பர்வதங்களுக்கும் அந்நதிகளுக்கும் உரிய பெயர்களெவை?

விடை:— பர்வதங்களுடைய பெயர்களாவது, ஈசானம், உருசிங்கம், பலபத்திரம், சதகேசரம், சகஸ்திரசுரோதசு,

தேவபாலம், மகாநசம்என்று சொல்லப்படும். நதிகளின் பெயர்களோவெனின், அநரகா, ஆயுர்த்தா, உபையசிருஷ்டி, அமராசிதா, பஞ்சபதி, சகஸ்திரசுதி, நிசதுருதி என்று கூறப்படும்.

வினா: —235. அவ்விடத்தில் வஸிக்கின்றவர்கள் எந்தெந்த வர்ணங்களையுடையவர்கள்?

விடை:— நிதவிரதம், சத்தியவிரதம், தானவிரதம், அனுவிரதம் என்ற பெயர்களையுடைய வர்ணத்தவர்கள்.

வினா: —236. அவர்கள் எந்ததேவனை உபாஸிக்கின்றார்கள்?

விடை:— வாயுதேவனை யுபாஸிக்கின்றார்கள்.

வினா: —237. வாயுதேவனை எவ்விதம் உபாஸிக்கின்றார்கள்?

விடை:— பிராணாயாமத்தினாலே ரஜஸ்தமஸுகளை நசிப்பித்தவர்களாய் பரமமானஸமாதியினாலே உபாஸிக்கின்றார்கள்.

வினா: —238. ஐயா! இந்தச் சாகத்தீபத்தைத்தான் தயிர்க்கடல் சூழ்ந்துகொண்டிருக்கின்றது. அந்தத் தயிர்க்கடலை எது சூழ்ந்துகொண்டிருக்கின்றது?

விடை:— புஷ்கரத்வீபமென்னும் ஓர்தீவு சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

---

## புஷ்கரத்வீபம்.

வினா: —239. அந்தப் புஷ்கரத்வீபமானது எதனால் சூழப்பட்டிருக்கின்றது?

விடை:— சுத்தோதகம்என்னும் உப்பில்லாத நல்ல சுத்த ஜலஸமுத்திரத்தினால் சூழப்பட்டிருக்கின்றது.

வினா: —240. அத்தீவில் ஏதோ ஒருபெரிய புஷ்பமிருக்கிறதாகச் சொல்லுகிறார்களே, அது என்ன புஷ்பம்?

விடை:— அதுதானப்பா, கமலாஸனக்கடவுளாகிய சதுர்முகனுக்காக அமைக்கப்பட்டிருக்கின்ற ஆஸனமாகிய சிறந்ததோர் தாமரஸபுஷ்பம்.

வினா: —241. இந்தப்புஷ்பத்தை மிகவும்சிறந்ததாகச் சொல்லுகிறீர்களே; அப்படி அதில் என்னவிசேஷம்?

விடை :— அப்பா! அப்புஷ்பமானது அக்னியினுடைய சிகை யைப்போல் நிர்மலமாய் லக்ஷம் இதழ்களையுடைய தாய்பகவானாகிய பிர்மதேவனுக்கு ஆஸனமாக ஏற் பட்டிருக்கிறதுதான் விசேஷம்.

வினா :— 242. இந்தத்வீபத்தில் ஏதேனும் பர்வதமிருக்கின்றதா?

விடை :— மானஸோத்திரம் என்றபெயரையுடைய ஒரேயொரு பர்வதமட்டும் இருக்கின்றது.

வினா :— 243. அப்பர்வதத்தின் நான்குதிக்குகளிலேயும் என்ன இருக்கின்றது?

விடை :— நான்கு பட்டணங்களிருக்கின்றன.

வினா :— 244. அப்பட்டணங்கள் எவர்களுக்குரியன?

விடை :— லோகபாலாளான இந்திராதிகளுக்குரியன.

வினா :— 245. அந்தப் பர்வதத்திற்குமேலே என்னவிருக்கின்றது?

விடை :— ஸம்வத்ஸரரூபமான காலசக்கிரம் ஒன்றுஇருக்கின் றது.

வினா :— 246. அதுஎப்பேர்ப்பட்டது? என்னசெய்துகொண்டிருக் கின்றது?

விடை :— மேருவைச் சுற்றுகின்ற ஸூர்யாதத்தினுடையஸம் வத்ஸரஸ்வரூபமானது. அதுவினாடி, நிமிஷம், நாழி கை, முகூர்த்தம், பகல், இரவு, திதி, வாரம், பக்ஷம், மாஸம், ரிது, அயனம் என்றமார்க்கங்களினாலே எப்பொழுதும் சுழன்றுகொண்டே யிருக்கின்றது.

வினா :— 247. அந்தப் புஷ்கரத்வீபத்திற்கும் பிரியவிரதனுடைய குமாரன்தான் அதிபதியோ?

விடை :— ஆம். அவன்தான் அதிபதி.

வினா :— 248. அவனுடையபெயர்என்ன?

விடை :— வீதிகோத்திரன்என்றுசொல்லுவார்கள்.

வினா :— 249. இவனுக்கும்ஏழுபிள்ளைகள்உண்டோ?

விடை :— இல்லை. இரண்டுகுமாரர்கள்தான்உண்டு.

வினா :— 250. அவ்விருவர்களின்பெயர்களெவை?

விடை :— ரமணகனென்றும், யாதனென்றும் சொல்லப்படும்.

வினா:—251. வீதிஹோத்திரனவன் தன்னுடைய தீவைத் தன் பிள்ளைகளுக்கு இரண்டுகண்டங்களாகப் பிரித்துக் கொடுத்தானா?

விடை:— ஆம். இரண்டுகண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான்.

வினா:—252. அத்தீவிலிருக்கின்றவர்கள் எந்ததேவனை ஆராதிக்கின்றார்கள்?

விடை:— பிர்மதேவனை ஆராதிக்கின்றார்கள்.

வினா:—253. பிர்மதேவனை எவ்விதம்ஆராதிக்கின்றார்கள்?

விடை:— பிர்மஸாலோக்கியாதிகளுக்கு ஸாதனமாக விருக்கிற எக்ஞாதிகர்மங்களினாலே ஆராதிக்கின்றார்கள்.

வினா:—254. ஐயா! இந்தப் புஷ்கரத்வீபத்திற்கப்பால் சுத்தோதக ஸமுத்திர மிருக்கிறதாகச் சொன்னீர்கள். அந்த ஸமுத்திரத்திற்கப்பால் என்னவிருக்கின்றது?

விடை:— ஆம். சொன்னேன். அதற்கப்பால் லோகாலோக மென்ற ஓர்பர்வதம் இருக்கின்றது.

---

## லோகாலோகபர்வதம்.

வினா:—255. அப்பர்வதம் எவ்விடத்தில் இருக்கின்றது?

விடை:— ஸூர்யப்ரகாசமுள்ள தேசங்களுக்கும், ஸூர்யப்ரகாச மில்லாததேசங்களுக்கும் மத்தியிலிருக்கின்றது.

வினா:—256. அப்பர்வதத்திற்கப்பால்என்ன இருக்கின்றது?

விடை:— கண்ணாடிபோலொத்த தரையையுடைய காஞ்சன மயமான பூமியிருக்கின்றது.

வினா:—257. அப்பூமியின் தன்மையென்ன?

விடை:— தன்மீதுவிழுந்த ஸாமான்களைக்காணாமற் செய்வதே அதற்குரியதன்மையாம்.

வினா:—258. அங்ஙனமாயின், அப்பூமியினால் என்னப்பிரயோஜனம்?

விடை:— ஒன்றுமில்லை. பிரயோஜனமில்லை யென்றதைக்கருதியே அப்பூமியை ஸர்வப்பிராணிகளாலும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது.

வினா:—259. லோகாலோக பர்வதத்திற்குமேல் என்னவிருக்கின்றது?

விடை:— திக்கஜங்கள் இருக்கின்றன.

வினா:—260. எத்தனைகஜங்கள் இருக்கின்றன?

விடை:— நாலுகஜங்கள் இருக்கின்றன.

வினா:—261. அவைகள் எந்தெந்ததிசைகளை நோக்கிக்கொண்டிருக்கின்றன?

விடை:— கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்காகியநாலுதிசைகளையும் நோக்கிக்கொண்டிருக்கின்றன.

வினா:—262. அவைகளைஸ்ருஷ்டித்து அவ்விடங்களில் ஸ்தாபித்தவர்யார்?

விடை:— அகிலலோககுருவான சதுர்முகபிர்மதேவனே அவைகளை ஸ்ருஷ்டித்து அவ்விடங்களில் ஸ்தாபித்தவர்.

வினா:—263. அந்நான்கு கஜங்களுக்குரிய பெயர்கள் எவை?

விடை:— ரிஷபமென்றும், புஷ்காசூடமென்றும், வாமனமென்றும், அபராசிதமென்றும் சொல்லப்படும்.

வினா:—264. அந்தசிரேஷ்டமான லோகாலோகபர்வதத்தில்ஆவிற்பவித்திருக்கிறவர்யார்?

விடை:— அந்தர்யாமியாயும், பரிசுத்தமான ஸத்துவகுணம், தர்மக்ஞானம், வைராக்கியம், ஐசுவர்ய முதலான அஷ்டமஹாஸித்திகளைத் தன்னிடமிருக்கப் பெற்றவராயுமுள்ள விசுவக்ஸேனர் என்னும்பகவான் அதில் ஆவிற்பவித்திருக்கின்றார்.

வினா:—265. யாதுகாரணத்தின்பொருட்டு அதில் அவர்ஆவிற்பவித்திருக்கின்றார்?

விடை:— ஸகலலோகங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டும், தம்முடைய யோகமாயையினாற் செய்யப்பட்டநானாவிதமான லோகமரியாதைகளுடைய ரக்ஷணத்தின் பொருட்டும், அதில் அவர்ஆவிற்பவித்திருக்கின்றார்.

வினா:—266. இப்படி அவர்அதில் எவ்வளவு காலம்வரை ஆவிற்பவித்திருப்பார்?

விடை :— கற்பகாலபர்யந்தம் அவர் அதில் ஆவிர்பவித்திருப்பார்.

வினா : — 267. அந்தலோகாலோக பர்வதத்திற்கப்பால் எவர்கள் ஸஞ்சரிக்கிறார்கள் ?

விடை :— யாரும் ஸஞ்சரிக்கவில்லை. ஆனால், யோகஸித்தாளாயிருக்கிறவர்கள் யோகீசுவரார்கள் ஸஞ்சரிக்கின்றதாகச் சொல்லுவார்கள்.

---

## சூரியனுடையலோகயாத்திரை.

வினா : — 268. ஐயா ! இவைகளிருக்கட்டும். ஸர்வஜீவராசிகளுடைய நேத்திரங்களுக்கு அதிஷ்டாதாவாகவிருக்கிறவர் எவர்?

விடை :— பகவானாகிய ஸூர்யனே அதிஷ்டாதாவாகவிருக்கிறவர்.

வினா : — 269. என்னகாரணத்தினால் இவரை அதிஷ்டாதாவாகஎடுத்துக்கொள்ளப்பட்டது?

விடை :— திக்குகள், ஆகாசம், ஸ்வர்க்கம், பூமிமுதலியஸ்தானங்களைப்பிரிக்கிறதற்கு அவர்ஏதுவாகவிருப்பதால் அவரை அதிஷ்டாதாவாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

வினா : — 270. அவர்அடைந்திருக்கிற ஸ்தானம்எது?

விடை :— பூமிக்கும் அந்தரக்ஷத்திற்கும் நடுவேயிருக்கிறஅண்டமத்தியம் என்னும் ஸ்தானத்தைஅடைந்திருக்கிறார்.

வினா : — 271. அண்டமத்தியம்என்னும் ஸ்தானம்எவ்விதமாகவிருக்கின்றது?

விடை :— ஆகாசமாகவிருக்கின்றது.

வினா : — 272. சூரியனுடைய தேஜஸினாலே எந்தலோகம் பிரகாசிக்கின்றது?

விடை :— திருலோகங்களும் பிரகாசிக்கின்றன.

வினா : — 273. அவர்உத்தராயனம், தெக்ஷிணாயனம், வைசுவம்என்னும்காலங்களில் எவ்விதமானகதிகளையுடையவராகவிருக்கின்றார் ?

விடை :— அம்முக்காலங்களிலும் மந்தம், சீக்கிரம், ஸமம் என்னும்கதிகளினால் ஏரத்தக்கதாயும் இரங்கத்தக்கதாயுமிருக்கிற ஸ்தானங்களில்காலத்தை அதிக்கிரமியாமல் ஏறிஇரங்கியும், மகரமுதலானமாஸங்களில் பகல்களையும் இராவுகளையும் தீர்க்கங்களாகவும், குறுகினதுகளாகவும், ஸமங்களாகவும் செய்துகொண்டிருக்கின்றார்.

வினா :— 274. சூரியன் மேஷராசியிலும் துலாராசியிலுமிருக்கிற பொழுது பகல்இராவுகள் எவ்விதமாகவிருக்கும்?

விடை :— ஸமமாகவிருக்கும்.

வினா :— 275. பகற்காலமானது விருத்தியடைகின்றபொழுது அவர் எந்தராசிகளில் இருக்கின்றார்?

விடை :— ரிஷபம்முதலான ஐந்துராசிகளில் இருக்கின்றார்.

வினா :— 276. பகல்விருத்தியாகிறகாலங்களில் இராவுஎவ்விதம் பவிக்கின்றது?

விடை :— மாஸங்கள்தோறும் ஒவ்வொருநாழிகையாகக் குறைந்து கொண்டு வருகின்றது.

வினா :— 277. ஸூரியன் விருச்சிகம் முதலான ஐந்துராசிகளில் இருக்கிற பொழுது இராவுபகல்கள் எவ்விதம்பவிக்கின்றன?

விடை :— இராவுகள் தீர்க்கங்களாயும், பகல்கள் குறுகினதுகளாயும் பவிக்கின்றன.

வினா :— 278. தக்ஷிணாயனத்தில் விருத்தியடைகின்றது எது? பகலா? இராவா?

விடை :— பகல்.

வினா :— 279. இராவானது எப்பொழுதுவிருத்தியடைகின்றது?

விடை :— உத்தராயனத்தில் விருத்தியடைகின்றது.

வினா :— 280. ஸூரியன் மானஸோத்தரகிரியில் எவ்வளவுயோஜனைதூரம் சுற்றிவருகின்றார்?

விடை :— ஒன்பதுகோடியே ஐம்பத்தோருலக்ஷம் யோஜனைதூரம்சுற்றிவருகின்றார்.

வினா:—281. அவர்சுற்றிவருகிற மார்க்கத்தில் என்னஇருக்கின்றது?

விடை:— மகாமேருபர்வதமிருக்கின்றது.

வினா:—282. அந்தமேருவுக்குக் கிழக்காக என்னஇருக்கின்றது?

விடை:— தேவயானையென்னும் பெயரையுடைய ஓர்பட்டணம் இருக்கின்றது.

வினா:—283. அப்பட்டணம் யாருக்குச்சொந்தம்?

விடை:— தேவேந்திரனுக்குச்சொந்தம்.

வினா:—284. மேருவுக்குத் தெக்ஷிணபாகத்தில் என்னஇருக்கின்றது?

விடை:— சம்யமனியென்ற ஓர்பட்டணம்இருக்கின்றது.

வினா:—285. இந்தப்பட்டணம் யாருக்குச்சொந்தம்?

விடை:— எமதர்மராஜனுக்குச் சொந்தம்.

வினா:—236. மேருவுக்குமேலண்டையில் என்னஇருக்கின்றது?

விடை:— நிம்ரோசனையென்ற ஓர்பட்டணம்இருக்கின்றது.

வினா:—287. இந்தப்பட்டணம் யாருக்குச்சொந்தம்?

விடை:— வருணதேவனுக்குச்சொந்தம்.

வினா:—288. மேருவுக்கு வடபக்கத்தில் என்னஇருக்கின்றது?

விடை:— விபாவரியென்ற ஓர்பட்டணம் இருக்கின்றது.

வினா:—289. இந்தப்பட்டணம் யாருக்குச்சொந்தம்?

விடை:— ஸோமனுக்குச்சொந்தம்.

வினா:—290. சூரியனவர் மேருவைச்சுற்றிவருகின்றவரானதால் பிரதிதினமும் இந்தத்தேவயானைமுதலான நாலுபட்டணங்களுக்கும் வருவாரல்லவா?

விடை:— ஆம். வருவார்.

வினா:—291. அவ்விதமாயின், இதுபோல் உதயாஸ்தமனகாலங்கள் மேருவின் மற்றதிசைகளில் ஏற்பட்டிருக்கின்றதா?

விடை:— ஆம். ஏற்பட்டிருக்கின்றது.

வினா:—292. சூரியனவர் மேருவுக்கு எந்தபாரிசத்திலிருந்துகொண்டு மேருவைப்பிரதக்ஷிணம் பண்ணுகின்றார்?

விடை:— மேருவுக்கு இடதுபாரிசத்திலிருந்துகொண்டு மேருவைப் பிரதக்ஷிணம்பண்ணுகின்றார்.

வினா : — 293. அப்படியானால், ஒருதிசையில் சூரியன்உதயமாகிற பொழுது அதற்கு எதிரிலிருக்கிற திசையில்அவர் அஸ்தமனமாக வேண்டுமல்லவா ?

விடை :— ஆம். அஸ்தமனமாக வேண்டும்.

வினா : — 294. அவ்விதம் ஏற்பட்டிருக்கின்றதா ?

விடை :— ஏற்பட்டிருக்கின்றது.

வினா : — 295. சூரியனானவர் இந்திரனுடைய பட்டணத்திலிருந்து எமனுடைய பட்டணத்திற்கு எவ்வளவுநேரத்தில் வருகின்றார் ?

விடை :— ஆறுமணிநேரத்தில் வருகின்றார்.

வினா : — 296. அப்பட்டணத்திலிருந்து வருணனுடைய பட்டணத்திற்கும், அதிலிருந்து ஸோமனுடையபட்டணத்திற்கும், ஸோமனுடையபட்டணத்திலிருந்து இந்திரனுடையபட்டணத்திற்கும் எவ்வளவு எவ்வளவுநேரத்தில் வருகின்றார் ?

விடை :— 6-மணிநேரத்தில் ஒருபட்டணத்திலிருந்து மற்றொரு பட்டணத்திற்கு வருகின்றார்.

வினா: — 297. இவருடைய உச்சகாலமானது அவருக்கு நேராக விருக்கும்திசைக்கு எவ்விதமாகப் பலிக்கின்றது ?

விடை :— அஸ்தமனகாலமாகப்பலிக்கின்றது.

வினா : — 298. இவ்விதமாகத்தான் சந்திரன்முதலான கிரகங்களும் மற்றுள்ள நக்ஷத்திரங்களும் ஜோதிஷசக்கரங்களுடன்கூட உதயமாகி அஸ்தமிக்கின்றனவோ ?

விடை :— ஆம். இவ்விதமாகத்தான் அச்சக்கரங்களுடன்கூட அவைகளும் உதயாஸ்தமனங்களாகின்றன.

வினா : — 299. சூரியன் எதில்ஆரோகணித்து லோகயாத்திரைசெய்கின்றார் ?

விடை :— ரதத்தில் ஆரோகணித்து லோகயாத்திரைசெய்கின்றார்.

வினா : — 300. அந்தரதம் மிகவும்பெரியதோ ?

விடை : — ஆம். மிகவும்பெரியது.

வினா: — 301. அந்தரதத்தின் ஸ்வரூபம் எவ்விதம்? அது எவைகளினால் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றது?

விடை: — அந்தரதமானது, 12 - மாதங்களாகிற அரமென்னப்பட்ட இலைகளாலும், ஷட்ருதுக்களாகிற நேமியென்னப்பட்ட முனைகளாலும், சாதுர்மாஸ்யங்களென்னப்பட்ட தொப்பக்கட்டைகளாலும், ஸம்வத்ஸரமென்ற ஒற்றச்சக்கரத்தினாலும் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றது.

வினா: — 302. அந்தஒற்றைச்சக்கரத்தின் இருசுமுனைகள் எவ்வெவ்விடங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன?

விடை:— அந்தஇருசின் முனைகளானது, ஒன்று மேருபர்வதத்தின்சிரஸிலும், மற்றொன்று மானஸோத்கிரிபர்வதத்திலுமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

வினா: — 303. அந்தஇருசிலே கோர்க்கப்பட்டசக்கிரமானது எவ்விடத்தில் எவ்விதமாகச் சுழன்றுகொண்டிருக்கின்றது?

விடை:— மானஸோத்தரகிரியில் செக்குனுடைய திருகுமரத்தில்கோர்க்கப்பட்ட சக்கிரத்தைப்போல் சுழன்றுகொண்டிருக்கின்றது.

வினா: — 304. அந்த இருசிலேவைக்கப்பட்ட மூல்பாகத்தையுடையதான இரண்டாம்இருசானது எவ்விடத்தில் எவ்விதமாய் யாரிடம்வைக்கப்பட்டதாக விருக்கின்றது?

விடை:— அவ்விரண்டாம் இருசானது, செக்கிலிராநின்ற உலக்கைமரம்போல துருவமண்டலத்திலுள்ள துருவனிடத்தில் நுணியைவைக்கப்பட்டதாக விருக்கின்றது.

வினா: — 305. அத்தேரானது எவைகளால் இழுக்கப்படுகின்றது?

விடை:— ஏழுஅசுவங்களால் இழுக்கப்படுகின்றது.

வினா: — 306. அவ்வேழுஅசுவங்களுக்குரிய பெயர்கள்எவை?

விடை:— காயத்திரிமுதலானசந்தஸ்ஸுகளுடையபெயர்களே, அவ்வேழுஅசுவங்களுக்குரிய பெயர்களாம்.

வினா: — 307. அந்தரதமானது யாரால்ஸாரத்தியம் செய்யப்படுகின்றது?

விடை :— அருணனால் ஸாரத்தியஞ்செய்யப்படுகின்றது.

வினா : — 308. அருணனவர்சூரியனுக்கு எந்தமுகமாக விருந்துகொண்டு ஸாரத்தியஞ்செய்கின்றார் ?

விடை :— எக்காலத்திலும் சூரியனுக்குமுன்னே மேற்குமுகமாக விருந்துகொண்டு ஸாரத்தியஞ்செய்கின்றார்.

வினா : — 309. அந்தரதத்தில் இவரைப்போல் இன்னும் வேறாஎவர்களாவது கூடவிருக்கின்றார்களா ?

விடை : — இருக்கின்றார்கள்.

வினா : — 310. எவர்கள் கூடவிருக்கின்றார்கள் ?

விடை :— வாலகில்லியர்என்னும் மகரிஷிகளும், இன்னும் வேறுசிலரிஷிகளும், கந்தர்வர்களும், அப்ஸரஸ களும், நாகங்களும், கிராமணிகளும், யக்ஷர்களும், தேவர்களும் கூடவிருக்கின்றார்கள்.

வினா : — 311. வாலகில்லியர்என்பவர்கள் எத்தனைபேர்கள்? அவர்களுடைய சரீரப்பிரமாண மெவ்விதமாக விருக்கும் ? எதற்காக அந்தரதத்தில் கூடவிருக்கின்றார்கள் ?

விடை :— வாலகில்லியர்என்பவர்கள் அறுபதினாயிரம்பேர்கள். அவர்களுடைய சரீரப்பிரமாணமானது பெருவிரலைப் போலிருக்கும். சூரியஸ்தோத்திரத்தின் பொருட்டு அந்தரதத்தில் கூடவிருக்கின்றார்கள்.

வினா : — 312. இந்தமகரிஷிகள் நின்றுகொண்டு ஸ்தோத்திரம்செய்கின்றார்களா? அல்லது உட்கார்ந்துகொண்டுஸ்தோத்திரம் செய்கின்றார்களா ?

விடை :— நின்றுகொண்டுஸ்தோத்திரம் செய்கின்றார்கள்.

வினா : — 313. அந்தரதத்தில் மற்றும்சிலரிஷிகளும், கந்தர்வாள் முதலியவர்களும் எவ்விதமாகவிருக்கின்றார்கள் ?

விடை :— ஒவ்வொருவகுப்பாரும் தனித்தனியே 16 - பேர்களாகவும், ஜோடுஜோடாய் 7-கணங்களாகவும் இருக்கின்றார்கள்.

வினா : — 314. இவர்களை யாதுகாரணத்தின்பொருட்டு அந்தரதத்தில் கூடவிருக்கும்படி நியமிக்கப்பட்டிருக்கின்றது ?

விடை :— மாதங்கள் தோறும் நானாவிதமான கர்மங்கள் ஏற்படுகின்ற சூரியபகவானை அவரவர் தமதுலீலாகர்மங்களினால் உபாஸிக்கும்பொருட்டு நியமிக்கப்பட்டிருக்கின்றது.

வினா :— 315. இந்தப்பூமண்டலத்தை, சூரியனானவர் எவ்வளவு நேரத்தில்தாண்டுகிறார் ?

விடை :— க்ஷணநேரத்தில் தாண்டுகிறார்.

வினா :— 316. பூமண்டலமானது எவ்வளவுவிஸ்தீரணத்தையுடையது ?

விடை :— ஒன்பதரைக்கோடியே லக்ஷத்தீராயிரம் யோஜனையும் நானூறுகுரோசமுமான விஸ்தீரணத்தையுடையது.

வினா :— 317. ஒருயோஜனையென்பது எத்தனைநாழிகைவழி தூரம் ?

விடை :— பத்துநாழிகைவழி தூரம்.

---

## சந்திரனும்நக்ஷத்திரங்களும்.

வினா :— 318. சூரியமண்டலத்துக்கும் சந்திரமண்டலத்துக்கும் எவ்வளவுதூரம் உண்டு ? முன்கூறினமண்டலத்துக்குப் பின்கூறினமண்டலம் மேலேஇருக்கின்றதா ? அல்லதுகீழேயிருக்கின்றதா ?

விடை :— சூரியமண்டலத்திலிருந்து சந்திரமண்டலத்திற்கு லக்ஷம்யோஜனை தூரம்உண்டு. சந்திரமண்டலமானது, சூரியமண்டலத்துக்கு மேலேஇருக்கின்றது.

வினா :— 319. நக்ஷத்திரமண்டலமானது எவ்விடத்திலிருக்கின்றது?

விடை :— சந்திரமண்டலத்துக்குமேலே இருக்கின்றது.

வினா :— 320. சந்திரமண்டலத்திலிருந்துநக்ஷத்திரமண்டலத்திற்கு எவ்வளவுயோஜனை தூரம் உண்டு ?

விடை :— லக்ஷம்யோஜனை தூரம்உண்டு.

வினா :— 321. அந்த நக்ஷத்திரங்களை அவ்விடத்தில் ஸ்தாபித்தவர் யார் ?

விடை :— ஈசுவரன்.

வினா :— 322. அவர் எதனால்அவைகளை அவ்விடத்தில் ஸ்தாபித்திருக்கின்றார் ?

விடை :— காலசக்கிரத்தினால் ஸ்தாபித்திருக்கின்றார்.

வினா:—323. அம்மண்டலத்தில் எத்தனைநக்ஷத்திரங்கள் இருக்கின்றன?

விடை:— அபிசித்தென்ற நக்ஷத்திரத்தைச்சேர்த்து 28-நக்ஷத்திரங்கள் இருக்கின்றன.

வினா:—324. ஐயா! ஆகாயத்தில் அனேக நக்ஷத்திரங்கள்காணப்படுகின்றனவே, பின் அவைகளெல்லாம் எவை?

விடை:— அப்பா! இந்த 28-நக்ஷத்திரங்களைத்தவிர மற்றப்படி நக்ஷத்திரவடிவாகக் காணப்படுகின்றவையெல்லாம் புண்ணிய புருஷர்களாம்.

## சுக்கிரன்.

வினா:—325. ஐயா! இஃது இருக்கட்டும். நக்ஷத்திரமண்டலத்துக்கும்மேலே என்னஇருக்கின்றது?

விடை:— நவக்கிரகங்கள்இருக்கின்றன.

வினா:—326. நவக்கிரகங்களில் யாருடையகிரகம்முதலாவதுஇருக்கின்றது?

விடை:— சுக்கிரனுடையகிரகம் முதலாவதுஇருக்கின்றது.

வினா:—327. இவருடைய கிரகத்திற்கும் நக்ஷத்திரமண்டலத்துக்கும் எத்தனையோஜனை தூரம்உண்டு?

விடை:— இரண்டுலக்ஷம்யோஜனை தூரம்உண்டு.

வினா:—328. இவரும்சூரியனுடன் எங்கும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றாரா?

விடை:— ஆம். ஆனால், கொஞ்சம் முன்னும்பின்னுமாகவும், சிலவேளைகூடவும், சீக்கிரம், மந்தம், ஸமம் என்னும் கதிகளினாலே சூரியனைப்போலவே உலகமெங்கும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றார்.

வினா:—329. இந்த சுக்கிரபகவானுடையராசி சலனத்தினால்என்ன அறியப்படுகின்றது?

விடை:— வருஷம் உண்டென்று அறியப்படுகின்றது.

வினா:—330. இந்தசுக்கிரன் எவ்விதமான அதிகாரத்தை யுடையவர்?

விடை:— வருஷப்பிரதிபந்தங்களான கிரகங்களுடைய சக்தியை அடக்குகிற அதிகாரத்தையுடையவர்.

## புதன்.

வினு :— 331. இவருடையகிருகத்திற்குமேலே யாருடைய கிருகம் இருக்கின்றது ?
விடை :— புதனுடையகிருகம் இருக்கின்றது.

வினு :— 332. இந்தக்கிருகத்திற்கும் அந்தக்கிருகத்திற்கும் எவ்வளவுயோஜனைதூரம் உண்டு ?
விடை :— இரண்டுலக்ஷம் யோஜனைதூரம் உண்டு.

வினு :— 333. இந்தப்புதனுனவர் சூரியனுடைய ராசியிலிருந்து பிரியும்பக்ஷத்தில்அதனுல் என்ன ஸம்பவிக்கும் ?
விடை :— காற்றுமழைகளினுல் அபாயம் ஸம்பவிக்கும்.

---

## அங்காரகன்.

வினு :— 334. இந்தப்புதனுடைய கிருகத்திற்குமேலே யாருடைய கிருகம்இருக்கின்றது ?
விடை :— அங்காரகனுடைய கிருகம்இருக்கின்றது.

வினு :— 335. இந்த அங்காரகனுடையகிருகத்திற்கும் புதனுடைய கிருகத்திற்கும் எத்தனையோஜனை தூரம் உண்டு?
விடை :— இரண்டுலக்ஷம் யோஜனைதூரம் உண்டு.

வினு :— 336. இவர்ஒவ்வொருராசியிலும் எத்தனைநாள்தங்கியிருப்பார் ?
விடை :— 45-நாள்தங்கியிருப்பார்.

வினு :— 337. இவர்வக்கிரித்தாரேயானுல் அதனுல் என்னஸம்பவிக்கும் ?
விடை :— உலகத்துக்கு துக்கம்ஸம்பவிக்கும்.

---

## பிரகஸ்பதி.

வினு :— 338. இவருடைய கிருகத்திற்குமேலே யாருடையகிருகம் இருக்கின்றது ?
விடை :— பிரகஸ்பதிபகவானுடைய கிருகம்இருக்கின்றது.

வினு :— 339. இந்தப்பிரகஸ்பதிபகவானுடையகிருகத்திற்கும் அந்த அங்காரகனுடைய கிருகத்திற்கும் எத்தனையோஜனை தூரம்உண்டு ?

விடை :— இரண்டுலக்ஷம் யோஜனைதூரம்உண்டு.

வினா : — 340. இவர் ஒவ்வொருராசியிலும் எவ்வளவுகாலம் இருந்து வருகிறார் ?

விடை :— ஒருவருஷகாலம் இருந்துவருகிறார்.

வினா : — 341. இவருடைய வக்கிரத்தினால் என்னஸம்பவிக்கும் ?

விடை :— பிராமணர்களுக்குப் பிரதிகூலம்ஸம்பவிக்கும்.

---

## சனீசுவரர்.

வினா : — 342. இவருடையகிருகத்திற்குமேலே யாருடையகிருகம் இருக்கின்றது ?

விடை :— சனீசுவரபகவானுடைய கிருகம் இருக்கின்றது.

வினா : — 343. இந்தச் சனீசுவரபகவானுடைய கிருகத்திற்கும், அந்தப் பிரகஸ்பதிபகவானுடைய கிருகத்திற்கும் எவ்வளவுயோஜனைதூரம் உண்டு ?

விடை :— இரண்டுலக்ஷம் யோஜனைதூரம் உண்டு.

வினா : — 344. இந்தச்சனீசுவரபகவானானவர் ஒவ்வொருராசியிலும் எத்தனைமாதம்வரை தங்கியிருப்பார் ?

விடை : — 30-மாதங்கள்வரை தங்கியிருப்பார்.

வினா : — 345. இவர்மற்றகிருகாதிபதிகளுக்கு முன்னாலேசெல்லுகின்றது வழக்கமா ? அல்லது பின்னாற்செல்லுகின்றது வழக்கமா ?

விடை : — பின்னாற்செல்லுகின்றதுதான்வழக்கம்.

வினா : — 346. இந்தச்சனீசுவரபகவானானவர் 12-ம் இடத்திலும், ஜன்மராசியிலும், இரண்டாம்இடத்திலும் இருந்தாரேயானால், அதனால்என்னஸம்பவிக்கும் ?

விடை : — ஸகலஜனங்களுக்கும் கஷ்டம்ஸம்பவிக்கும்.

---

## ஸப்தரிஷிமண்டலம்.

வினா : — 347. இவருடையகிருகத்திற்குமேலே என்னஇருக்கின்றது ?

விடை : — ஸப்தரிஷி மண்டலமிருக்கின்றது.

வினா :— 348. இந்த ஸப்தரிஷிமண்டலத்திற்கும் அந்தச்சனீசுவர பகவானுடைய கிருகத்திற்கும் எத்தனையோஜனை தூரம் உண்டு?

விடை : — பதினொருலக்ஷம் யோஜனைதூரம்உண்டு.

வினா :— 349. இந்தஸப்தரிஷிகளுக்குரிய பெயர்களெவை?

விடை :— ஸப்தரிஷிகளின்பெயர்களாவது, காசியபர், அத்திரி, பாரத்துவாஜர், விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்னி, வஸிஷ்டர்என்று சொல்லப்படும்.

வினா : —350. ஐயா! வாசஸ்பத்தியம்என்னும் ஸம்ஸ்கிருதநிகண்டுவில் ஸப்தரிஷிகளுக்குரியபெயர்கள் நீங்கள்கூறுகின்றபடியில்லையே, அதென்ன?

விடை :— அப்பா! மன்வாதிகளின்வித்யாஸங்களினால் அவர்களுக்குரிய பெயர்கள்மாறுபடக்கூடும்.

வினா :— 351. அந்தஸப்தரிஷிகள் அவ்விடத்தில் என்னசெய்துகொண்டிருக்கிறார்கள்?

விடை :— லோகோபகாரார்த்தமாக ஜகத்ரக்ஷகரான ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய பரமபதத்தை ஸதாபிரதக்ஷிணம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.

---

## பரமபதம்.

வினா : —352. அந்த ஸப்தரிஷி மண்டலத்திற்குமேலே என்ன இருக்கின்றது?

விடை :— ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய பரமபதம்இருக்கின்றது.

வினா : —353. ஸப்தரிஷிமண்டலத்திலிருந்து பரமபதத்திற்கு எத்தனையோஜனை தூரம்உண்டு?

விடை :— பதிமூன்றுலக்ஷம் யோஜனைதூரம்உண்டு.

வினா : —354. ஐயா! உத்தானபாதருடைய குமாரனை துருவசக்கிரவர்த்திஎவ்விடத்தில் வஸிக்கின்றார்?

விடை : — அப்பா! இந்தப்பரமபதத்தில்தான் வஸிக்கின்றார்.

வினா : —355. அவர்இப்பொழுதும் இருக்கின்றாரா?

விடை : — அவர்கற்பகாலபர்யந்தம் இருப்பவராதலின், எப்பொழுது மிருக்கின்றார்.

வினா: — 356. ஐயா! ஆகாயத்திலிருக்கின்ற ஜோதிற்கணங்கள் எதனால் பூமியில் விழுகிறதில்லை?

விடை:— அப்பா! அவைகள் பிரகிருதி புருஷஸம்யோகத்தை அடைந்தவைகளானாலும், தங்கள் கர்மங்களினால் உண்டாக்கப்பட்ட கதியை உடையவைகளாகையாலும் தாங்கள் பூமியிலேவிழுந்து போகாமல் நின்று கொண்டிருக்கின்றன.

---

## சிம்சுமாரஸ்வரூபம்.

வினா: — 357. சிலயோகிகள் இந்த ஜோதிற்கணங்களை சிம்சுமாரஸ்வரூபியாயும் பகவானாயுமிருக்கிற வாஸுதேவருக்கு அவயவங்களாகச் சொல்லுகின்றார்களே, அதென்ன விஷயம்?

விடை:— ஆம். அவர்கள் அவைகளைத் தங்கள் யோகதாரணையில் அவ்விதமாகவே சொல்லுகின்றார்கள்.

வினா: — 358. அப்படியானால், அந்த சிம்சுமாரஸ்வரூபத்திற்கு எந்தெந்த ஜோதிற்கணங்கள் எந்தெந்த அவயவங்களாக ஏற்பட்டிருக்கின்றன?

விடை:— அப்பா! அந்த சிம்சுமாரஸ்வரூபத்தைத் தலைகீழாகவிருந்து குண்டலாகாரமாகப் பார்க்கிறவிஷயத்தில் துருவன் வாலின் நுனியாகவும், பிரஜாபதி, அக்னி, இந்திரன், தர்மன் முதலியவர்கள் வாலாகவும், தாதா விதாதாக்கள் வாலின் அடியாகவும், ஸப்தரிஷிகள் கடிப்பிரதேசமாகவும் தோன்றப்படும். பிரதக்ஷிண குண்டலாகாரமாகப் பார்க்கிறவிஷயத்தில், உத்தராயனங்களான அபிஜித்து முதல் புனர்வஸு நக்ஷத்திரம் வரையுள்ள 14 - நக்ஷத்திரங்களும் அந்த ஸ்வரூபத்திற்கு தெக்ஷிணபாரிசமாகவும், தெக்ஷிணாயனங்களான பூசம் முதல் உத்திராடம் வரையுள்ள 14-நக்ஷத்திரங்களும் அந்தஸ்வரூபத்திற்கு உத்தரபாரிசமாகவும் காணப்படும். ஆகவே, அந்தஸ்வரூபத்தின் உபய பாரிசங்களையும் பார்வையிடுகிற விஷயத்தில் ஒவ்வொருநக்ஷத்திரங்களும் ஒவ்வொரு அவயவங்களாகத் தோன்றும்.

வினா:—359. ஐயா! இவ்விதம்உரைத்தாற் போதாது. நன்றாகப் புலப்படவில்லை. ஆதலின், விளங்க எடுத்துரைக்க வேண்டும்?
விடை:— அப்பா! ஆகா! அப்படியே உரைப்பதைத் தெளிவாகக்கேட்டுத் தெரிந்துகொள்.

வினா:—360. அசுவதி எவ்விடத்தில் இருக்கின்றது?
விடை:— முதுகிலிருக்கின்றது.

வினா:—361. ஆகாசகங்கை எவ்விடத்தில் இருக்கின்றது?
விடை:— வயிற்றில் இருக்கின்றது.

வினா:—362. புனர்வஸுவும் பூசமும் எவ்விடங்களில் இருக்கின்றன?
விடை:— வலதுஇடது நிதம்பப்பிரதேசங்களில் இருக்கின்றன.

வினா:—363. திருவாதிரையும் ஆயில்யமும் எவ்விடங்களில் இருக்கின்றன?
விடை:— வலதுகாலிலும் இடதுகாலிலும் இருக்கின்றன.

வினா:—364. அபிசித்தும் உத்திராடமும் எவ்விடங்களில் இருக்கின்றன?
விடை:— வலதுநாசியிலும் இடதுநாசியிலுமிருக்கின்றன.

வினா:—365. திருவோணமும் பூராடமும் எவ்விடங்களில் இருக்கின்றன?
விடை:— வலதுநேத்திரத்திலும் இடதுநேத்திரத்திலும் இருக்கின்றன.

வினா:—366. அவிட்டமும் மூலமும் எவ்விடங்களில்இருக்கின்றன?
விடை:— வலதுகாதிலும் இடதுகாதிலுமிருக்கின்றன.

வினா:—367. தக்ஷிணாயன நக்ஷத்திரங்களான மகம் முதலுள்ள எட்டுநக்ஷத்திரங்கள் எவ்விடத்தில் இருக்கின்றன?
விடை:— இடதுமார்பில் இருக்கின்றன.

வினா:—368. உத்தராயனநக்ஷத்திரங்களான மிருகசீருஷம் முதல் தலைகீழாயெண்ணப்பட்ட எட்டுநக்ஷத்திரங்கள் எவ்விடத்தில் இருக்கின்றன?
விடை:— வலதுமார்பில் இருக்கின்றன.

வினா:—369. சதயமும் கேட்டையும் எவ்விடங்களில் இருக்கின்றன?

விடை :— வலதுதோளிலும் இடதுதோளிலுமிருக்கின்றன.

வினா : —370. யமன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— வலதுதாடையிலேயிருக்கின்றார்.

வினா : —371. அகஸ்தியர் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— இடதுதாடையிலே இருக்கின்றார்.

வினா : —372. அங்காரகன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— முகத்தில் இருக்கின்றார்.

வினா : —373. சனீசுவரபகவான் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— உபஸ்தத்தில் இருக்கின்றார்.

வினா : —374. பிரகஸ்பதி எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— பிடரியிலேஇருக்கின்றார்.

வினா : —375. சூரியன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— நடுமார்பில் இருக்கின்றார்.

வினா : —376. நாராயணன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— ஹிருதயத்தில் இருக்கின்றார்.

வினா : —377. சந்திரன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— மனஸில்இருக்கின்றார்.

வினா : —378. சுக்கிரன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— நாபியில்இருக்கின்றார்.

வினா : —379. அசுவினிதேவதைகள் எவ்விடங்களில் இருக்கிறார்கள் ?
விடை :— ஸ்தனங்களில் இருக்கிறார்கள்.

வினா : —380. புதன் எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— பிராணுடாநவாயுக்களில்இருக்கின்றார்.

வினா : —381. ராகு எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— கழுத்தில் இருக்கின்றார்.

வினா : —382. கேது எவ்விடத்தில் இருக்கின்றார் ?
விடை :— ஸர்வாங்கங்களிலும் இருக்கின்றார்.

வினா : —383. வானத்திற்காணப்படுகிற மற்றுள்ளநக்ஷத்திர கணங்கள் எவ்விதமாகவிருக்கின்றன ?

விடை :— ஸர்வாங்கங்களிலுமுள்ள ரோமங்களாக விருக்கின்றன.

வினா : — 384. இந்த சிம்சுமாரஸ்வரூபமான பகவானுனவர் எதைத் துவம்ஸம் செய்கின்றார் ?

விடை :— மந்திரஜபசீலர்களுடைய பாபத்தைத் துவம்ஸம்செய்கின்றார்.

வினா : —385. இந்தஸ்வரூபத்தை எப்பொழுது தியானித்துப்போற்றவேண்டும் ?

விடை :— திருஸந்தியா காலங்களில் தியானித்துப் போற்றவேண்டும்.

வினா : —386. ஐயா ! இதுவரைநான் தங்களால்பூமியிலுள்ளவிசேஷங்களும், அதற்கப்பாலிருக்கிற தீபங்களின்சிறப்பும், ஸூர்யாதிமண்டலங்களின் சிறப்பும், பரமபத வைபவமும்கேட்டறிந்து திருப்தியடைந்தேன். அதுபோல் இப்பூமியின் கீழிருக்கிறஉலகங்களின் வர்த்தமானங்களைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற ஆவல் எனக்கு அதிகமாகவிருக்கின்றது. ஆதலின், அவ்விதமே தயவுசெய்து சொல்வீர்களா ?

விடை :— ஆகா ! தெரிந்தவரை அறிவிக்கச் சந்தோஷமாகவிருக்கிறேன்.

---

## அதலலோகம்.

வினா : — 387. இப்பூமிக்குக்கீழேயிருக்கிற அதலலோகத்தில்வஸிப்பவர்யாவர் ?

விடை :— அஸுரர்கள்.

வினா : — 388. அவர்களுக்கு அதிபதியானவனெவன் ?

விடை :— மயனுடையபுத்திரனுகிய பலனென்னும்ஓர் அஸுரன்.

வினா : — 389. இவனெவ்விஷயத்திற் சிறந்தவன் ?

விடை :— மாயவித்தையிற் சிறந்தவன்.

வினா : — 390. அப்படிஎவ்வளவுமாயவித்தைகள் கற்றிருக்கின்றான் ?

விடை :— 96-மாயவித்தைகள் கற்றிருக்கின்றான்.

வினா : — 391. அதனால்அவனுக்கு ஏதேனும் கர்வமுண்டோ ?

விடை :— உண்டு. மஹாகர்விஷ்டன்.

---

## விதலலோகம்.

வினா:—392. அதற்குக் கீழேயிருக்கிற விதலலோகத்தில் வஸிப்பவர் யாவர்?

விடை:— ஆடகேசுவரான ருத்திரன் சக்திஸமேதராகவாஸம் செய்கின்றார்.

வினா:—393. அவ்விடத்தில் ஏதேனும் நதியுண்டா?

விடை:— உண்டு.

வினா:—394. அந்நதியின் பெயரென்ன?

விடை:— ஆடகி என்றுபெயர்.

வினா:—395. இந்நதி எவ்விடத்திலிருந்து உற்பத்தியாயிற்று?

விடை:— ஆடகேசுவரன் சக்தி இவர்களுடைய வீர்யத்திலிருந்து உற்பத்தி யாயிற்று.

வினா:—396. அந்நதியின் தீர்த்தத்தைப் பானம்செய்கிறவர்யாவர்?

விடை:— அக்னியும், வாயுவும் பானம்செய்கிறார்கள்.

வினா:—397. அந்நதியில் ஏதேனும் உலோகங்கள் உற்பத்தியாகின்றதா?

விடை:— உற்பத்தியாகின்றது.

வினா:—398. அது என்னது?

விடை:— ஸ்வர்ணம்.

வினா:—399. அது எவ்விதம் உற்பத்தியாகின்றது?

விடை:— வாயுவின்வாயிலிருந்து கொப்பளிக்கப்படுகின்ற தீர்த்தத்தினால் உற்பத்தியாகின்றது.

வினா:—400. இவ்வுலகத்தில் ஆடகேசுவரர் யாதுகாரணத்தின் பொருட்டு வாஸம்செய்கிறார்?

விடை:— பிரமஸ்ருஷ்டியை விருத்திசெய்யும்பொருட்டு வாஸம் செய்கிறார்.

வினா:—401. இதற்கு லக்ஷியம் எவ்விடத்தில் இருக்கின்றது?

விடை:— தேவீபாகவதத்தில் இருக்கின்றது.

விடை :— ஸர்வாங்கங்களிலுமுள்ள ரோமங்களாக விருக்கின்றன.

வினா : — 384. இந்த சிம்சுமாரஸ்வரூபமான பகவானுனவர் எதைத் துவம்ஸம் செய்கின்றார் ?

விடை :— மந்திரஜபசீலர்களுடைய பாபத்தைத் துவம்ஸம்செய்கின்றார்.

வினா : — 385. இந்தஸ்வரூபத்தை எப்பொழுது தியானித்துப்போற்றவேண்டும் ?

விடை :— திருஸந்தியா காலங்களில் தியானித்துப் போற்ற வேண்டும்.

வினா : — 386. ஐயா ! இதுவரைநான் தங்களால்பூமியிலுள்ளவிசேஷங்களும், அதற்கப்பாலிருக்கிற தீபங்களின்சிறப்பும், ஸூர்யாதிமண்டலங்களின் சிறப்பும், பரமபத வைபவமும்கேட்டறிந்து திருப்தியடைந்தேன். அது போல் இப்பூமியின் கீழிருக்கிறஉலகங்களின் வர்த்தமானங்களைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற ஆவல் எனக்கு அதிகமாகவிருக்கின்றது. ஆதலின், அவ்விதமே தயவுசெய்து சொல்வீர்களா ?

விடை :— ஆகா ! தெரிந்தவரை அறிவிக்கச் சந்தோஷமாகவிருக்கிறேன்.

---

## அதலலோகம்.

வினா : — 387. இப்பூமிக்குக்கீழேயிருக்கிற அதலலோகத்தில்வஸிப்பவர்யாவர் ?

விடை :— அஸுரர்கள்.

வினா : — 388. அவர்களுக்கு அதிபதியானவன்எவன் ?

விடை :— மயனுடையபுத்திரனாகிய பலன்என்னும்ஓர் அஸுரன்.

வினா : — 389. இவன்எவ்விஷயத்திற் சிறந்தவன் ?

விடை :— மாயவித்தையிற் சிறந்தவன்.

வினா : — 390. அப்படிஎவ்வளவுமாயவித்தைகள் கற்றிருக்கின்றான் ?

விடை :— 96-மாயவித்தைகள் கற்றிருக்கின்றான்.

வினா : — 391. அதனால்அவனுக்கு ஏதேனும் கர்வமுண்டோ ?

விடை :— உண்டு. மஹாகர்விஷ்டன்.

## விதலலோகம்.

வினா: — 392. அதற்குக் கீழேயிருக்கிற விதலலோகத்தில் வஸிப்பவர் யாவர்?

விடை:— ஹாடகேசுவரரான ருத்திரன் சக்திஸமேதராகவாஸம் செய்கின்றார்.

வினா: — 393. அவ்விடத்தில் ஏதேனும் நதியுண்டா?

விடை:— உண்டு.

வினா: — 394. அந்நதியின் பெயரென்ன?

விடை:— ஹாடகி என்றுபெயர்.

வினா: — 395. இந்நதி எவ்விடத்திலிருந்து உற்பத்தியாயிற்று?

விடை:— ஹாடகேசுவரன் சக்தி இவர்களுடைய வீர்யத்திலிருந்து உற்பத்தியாயிற்று.

வினா: — 396. அந்நதியின் தீர்த்தத்தைப் பானம்செய்கிறவர்யாவர்?

விடை:— அக்னியும், வாயுவும் பானம்செய்கிறார்கள்.

வினா: — 397. அந்நதியில் ஏதேனும் உலோகங்கள் உற்பத்தியாகின்றதா?

விடை:— உற்பத்தியாகின்றது.

வினா: — 398. அது என்னது?

விடை:— ஸ்வர்ணம்.

வினா: — 399. அது எவ்விதம் உற்பத்தியாகின்றது?

விடை:— வாயுவின்வாயிலிருந்து கொப்பளிக்கப்படுகின்ற தீர்த்தத்தினால் உற்பத்தியாகின்றது.

வினா: — 400. இவ்வுலகத்தில் ஹாடகேசுவரர் யாதுகாரணத்தின் பொருட்டு வாஸம்செய்கிறார்?

விடை:— பிரமஸ்ருஷ்டியை விருத்திசெய்யும்பொருட்டு வாஸம் செய்கிறார்.

வினா: — 401. இதற்கு லக்ஷியம் எவ்விடத்தில் இருக்கின்றது?

விடை:— தேவீபாகவத்தில் இருக்கின்றது.

## ஸுதலலோகம்.

வினா:—402. மூன்றாவதாகிய ஸுதலலோகத்தில் வஸிப்பவர் யாவர்?

விடை:— மஹாபலிச்சக்ரவர்த்தியென்னும் ஓர் பாகவதோத்தமரும், அவரது பரிவாரங்களும் வாஸம்செய்கிறார்கள்.

வினா:—403. மஹாபலிக்கு என்னகாரணத்தினால் ஸுதலலோகவாஸம் ஏற்பட்டது?

விடை:— இவர் அஸுரேந்திரனானதால், ஸுரேந்திரனுடைய போகபாக்கியங்களை அபகரிக்கக்கூடுமெனக் கருதி ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினால் அவ்வுலகவாஸம் ஏற்படுத்தப்பட்டது.

வினா:—404. அவ்வுலகத்தில் ஐசுவரியப்பெருக்கு மிகுதியா?

விடை:— ஆம். போகபாக்கியங்களுக்கொன்றும் குறைவில்லை. அவ்வுலகத்தார் க்ஷாமமென்றபேச்சையே கேட்டிருக்கமாட்டார்கள்.

வினா:—405. ஐசுவரியப்பெருக்கு அவ்வளவு மிகுதியாவதற்குக் காரணம் யாது?

விடை:— மஹாபலியாகிய அஸுரேந்திரன் பூலோகத்திலிருக்கிறபொழுது ஸ்ரீவாமனமூர்த்திக்கு பூதானம்செய்ததே ஐசுவரியம் மிகுதியாவதற்குரிய காரணம்.

வினா:—406. ஆனால், இவருக்கு பகவத்பக்தி அதிகமோ?

விடை:— ஆம். அதிகமே.

வினா:—407. அதென்ன? அஸுரகுலத்தில் ஜனித்தவருக்கு அதிக பக்தி ஏற்பட்டது?

விடை:— இதுவென்ன ஆச்சரியமா? இவர் பரமபாகவதசிரோமணியாகிய பிரஹ்லாதருக்குப்பேரனன்றோ? ஆதலின், அந்நாள்முதல் இந்நாள்வரை மனோவாக்குக்காயங்களால் ஸதா ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைப் பிரார்த்தித்துக்கொண்டு வருகின்றார்.

வினா:—408. ஆனால், மஹாபலி இப்பொழுதும் இருக்கின்றாரோ?

விடை:— அவர் சிரஞ்சீவியாதலின், அவருக்கு காலத்திரயத்திலுமழிவில்லை.

வினா :—409. இவருக்கு பகவத்பக்தியாற் கிடைத்த பெரும்பேறு யாது?

விடை :— ஸர்வலோகநாதனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இவருக்குத் துவாரபாலகனாக அமர்ந்து எப்பொழுதுந் திவ்யதரிசனமளித்துக்கொண்டிருப்பதே யெவரும் அடையாப் பெரும்பேறு.

வினா :—410. முன் இராவணனானவன் திருலோகங்களிலுஞ்சென்று திக்விஜயம் செய்தபொழுது இவ்வுலகத்திற்கு வந்திருந்தானா?

விடை :— ஆம். வந்து அவமானமடைந்து பின் தான்வந்தவழியைப் பார்த்துக்கொண்டு திரும்பிஓடிப்போய்விட்டான்.

வினா :—411. மஹாபலிமுன் பூலோகத்திலிருந்து ஸுதலலோகம் சென்றபிறகு மறுபடியும் பூலோகத்திற்கு வரவில்லையோ?

விடை :— வராமலிருக்கிறதில்லை.

வினா :—412. எத்தனைமுறை வந்திருக்கிறார்?

விடை :— வருஷத்திற் கோர்முறையாக பலதவணை வந்திருக்கிறார்.

வினா :—413. அதுபோல் இப்பொழுதும் வருகிறதுண்டா?

விடை :— உண்டு.

வினா :—414. அது எப்பொழுது?

விடை :— திருக்கார்த்திகைத் தினத்தன்று.

வினா :—415. ஆகையினால்தான் அன்றையதினத்தில் பூலோகமானது தீபங்களால் அலங்கரிக்கப்படுகின்றதோ?

விடை :— ஆம். அவருடைய விஜயத்தைக்கருதியே அன்றையதினத்தில் மண்ணுலகானது மகிழ்ச்சியைஅடைகின்றது.

---

## தலாதலலோகம்.

வினா :—416. அவ்வுலகத்திற்குக் கீழேயிருக்கிற தலாதலலோகத்தில் எவர்கள்வஸிக்கிறார்கள்?

விடை :— திருபுரர்கள்வஸிக்கிறார்கள்.

வினா :—417. அவர்களிடத்திலுள்ள விசேஷமான ஸாமர்த்தியம் யாது?
விடை :— எங்குவேண்டுமானாலும் தங்கள்நகரத்துடன் ஸஞ்சரிப்பதே விசேஷமானஸாமர்த்தியம்.

வினா :—418. இவர்களுக்கு அதிபதியாவன்?
விடை :— திருபுரமயனென்னும் ஓர் அஸுரன்.

வினா :—419. இவர்களுடைய நகரத்தின்பெயர்யாது?
விடை :— திருபுரம்.

வினா :—420. அந்நகரமானது இப்பொழுதும் இருக்கின்றதா?
விடை :— இல்லை. அழிந்துபோயிற்று.

வினா :—421. எவரால் அழிக்கப்பட்டது?
விடை :— விடையேறும் விமலனால்அழிக்கப்பட்டது.

வினா :—422. அவர்யார்?
விடை :— அவர்தான் பரமசிவன்.

வினா :—423. திருபுரத்தை யழிக்கும்பொருட்டு ஈசுவரனுக்கும் அஸுரர்களுக்கும் பலமானயுத்தம்ஏற்பட்டதோ?
விடை :— இல்லை. யுத்தத்திற்குஆயத்தமாக விருந்தார்கள்.

வினா :—424. பிறகுஎவ்விதம் திருபுரத்தை யழிக்கப்பட்டது?
விடை :— பரமசிவனுடைய இச்சாமாத்திரத்தினால் அழிக்கப்பட்டது.

வினா :—425. அவர்செய்த செய்கையென்ன?
விடை :— திருபுரர்கள் தங்கள் நகரத்துடனும் ரதகஜதுரக பதாதிமுதலிய ஸகலபரிவாரங்களுடனும் யுத்தத்திற்கு ஸந்நத்தமாயிருப்பதைப் பார்த்தஈசன்பரிஹாஸமாகக்கொஞ்சம் சிரிக்கபெத்தனித்தார்.

வினா :—426. அதனால்என்ன விபத்துநேர்ந்தது?
விடை :— திருபுரம்எரிந்து கரிந்துசாம்பலாயிற்று.

வினா :—427. இந்தத்திருபுரமயன் அதலலோகத்திலுள்ள மயனுடைய புத்திரனாகிய பலனைப்போல்மாயவித்தையிற் சிறந்தவனோ?
விடை :— ஆம். சிறந்தவனே.

## மஹாதலலோகம்.

வினா:—428. தலாதல லோகத்திற்குக் கீழேயிருக்கிற மஹாதல லோகத்தில் எவைகள் வஸிக்கின்றன?

விடை:— ஸர்ப்பங்களும் அவைகளின் அதிபதிகளும் வஸிக்கின்றன.

வினா:—429. அதிபதிகளின் பெயர்களென்ன?

விடை:— குககன், தக்ஷகன், சுஷேணன், காளியனென்ற பெயர்களாம்.

வினா:—430. இவைகள் மிகவும் க்ரூரஸ்வபாவமுடையவைகளோ?

விடை:— ஆம். க்ரூரஸ்வபாவமுடையவைகளே.

வினா:—431. இவைகளுக்கு அனேகம் சிரஸுகள் உண்டு என்று சொல்லுகிறார்களே, அது உண்மைதானா?

விடை:— ஆம். அது உண்மையே. ஒவ்வொருநாகத்திற்கும் 1, 5, 10, 100, 1,000, 10,000 என்று அனேகம்சிரஸுகள் உண்டு.

வினா:—432. இவைகள் ஒருவருக்கும் பயப்படுகிறதில்லையோ?

விடை:— கருடனைத்தவிர வேறுயாருக்கும் பயப்படுகிறதில்லை.

வினா:—433. இவைகள் அவ்வுலகத்தில் தங்கள்பந்துமித்திரபரிவாரங்களுடன் வஸிக்கின்றனவா?

விடை:— ஆம்.

---

## ரஸாதலலோகம்.

வினா:—434. மஹாதலலோகத்திற்குக் கீழேயிருக்கிற ரஸாதல லோகத்தில் எவர்கள் வஸிக்கின்றார்கள்?

விடை:— காலகேயநிவாதகவசரென்ற அஸுரர்கள் வஸிக்கின்றார்கள்.

வினா:—435. இவர்களுக்குரிய நகரத்தின் பெயர்யாது?

விடை:— இரண்யபுரம் என்றுபெயர்.

வினா:—436. இவர்களுக்கும் தேவர்களுக்கும் அடிக்கடி சச்சரவுகள் நேரிடுகிறதுண்டோ?

விடை:— ஆம். அடிக்கடி சச்சரவுகள் நேரிடுகிறதுண்டு.

வினா: —437. ஆனால்; இவர்கள் பராக்கிரமத்தில் மிகவும் சிறந்தவர்களா?

விடை:— ஆம். இவர்கள் ஜனிக்கிறபொழுதே தகுந்தவல்லமையுடன் ஜனிக்கின்றார்கள்.

வினா: —438. இவர்கள் ஒருவருக்கும் அடங்கி நடக்கிறதில்லையோ?

விடை:— ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத்தவிர வேறு யாருக்கும் அடங்கி நடக்கிறதில்லை.

---

## பாதாளலோகம்.

வினா: —439. இந்தலோகத்திற்குக் கீழேயிருக்கிற பாதாளலோகத்தில் எவர்கள் வஸிக்கிறார்கள்?

விடை:— முன்கூறின நாகலோகபரிபாலகரான வாஸுகி, சங்கன், குளிகன், சுவேதன், தனஞ்சயன், மஹாசங்கன், திருதராஷ்டிரன், சங்கசூடன், கம்பளன், அசுவதரன், தேவோபதத்தகன் என்ற நாகராஜாக்கள் வஸிக்கிறார்கள்.

வினா: —440. இவர்களுக்குக் கோபமும் தௌஷ்டிகத்தன்மையும் அதிகமோ?

விடை:— ஆம். மிகவும் அதிகமே.

வினா: —441. இவர்கள் கொடியவிஷமுடையவர்களா?

விடை:— ஆம். அவ்விஷஜ்வாலையின் காற்றானது வெகுதூரத்திலிருக்கிற நகரங்களையும் வனங்களையும் அக்ஷணமே பஸ்மீகரப்படுத்தும்.

வினா: —442. இந்த நாகராஜாக்களுக்கு முன்கூறின ஸர்ப்பங்களைப்போல் அநேகம்சிரஸுகள் உண்டோ?

விடை:— ஆம். அவைகளைப்போல் இவைகளுக்கும் அநேக சிரஸுகள் உண்டு.

வினா: —443. இந்த நாகராஜாக்கள் தங்கள்சிரஸுகளில் மகுடம் அணிந்துகொண்டிருப்பார்களா?

விடை:— ஆம். அணிந்துகொண்டிருப்பார்கள்.

வினா: —444. அம்மகுடங்கள் அதிக்ஒளியை வீசுமோ?

விடை :— ஆம். அவைகள் மிகவும் தேஜோமயமாக ஜ்வலித்துக்கொண்டிருக்கும். இவ்வுலகத்தில் இம்மகுடங்களின் ஒளிகளைத்தவிர வேறுவித ப்ரகாசமில்லை.

வினா: —445. தாங்கள் கூறிவந்த நாகராஜாக்களுள் ஆதிசேஷனுடையபெயரைக் காணவில்லையே, அவர் எவ்விடத்தில் வஸிக்கின்றார்?

விடை :— ஆதிசேஷனனவர் அவ்வுலகத்திலிருந்து முப்பதாயிரம் யோஜனைக்குக்கீழே வாஸம்செய்கின்றார்.

வினா: —446. எதற்காக அவ்விடத்தில் வஸிக்கின்றார்?

விடை :— இந்தப் பூலோகமுதலான ஸகலலோகங்களையும் தன் சிரஸுகளில் வஹிக்கும்பொருட்டு அவ்விடத்தில் வஸிக்கின்றார்.

வினா: —447. அவருக்கு எத்தனைசிரஸுகள் உண்டு?

விடை :— ஆயிரம்சிரஸுகள் உண்டு.

வினா: —448. அவ்விடத்தில் அவருடைய பாதுகாப்பின்பொருட்டு ஏதேனும் பரிவாரங்கள் அவரைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றனவா?

விடை :— ஆம். சூழ்ந்துகொண்டிருக்கின்றன.

வினா: —449. அவைகள் எவ்விதம் சூழ்ந்துகொண்டிருக்கின்றன?

விடை :— பலவிதவியூகங்களாகச்சூழ்ந்துகொண்டிருக்கின்றன.

வினா: —450. அப்படி எத்தனைவியூகங்கள் உண்டு?

விடை :— 11 - வியூகங்கள் உண்டு.

---

## கீழ்லோகவர்த்தமானங்கள்.

வினா: —451. பிதுர்லோகமென்று சொல்லுகிறீர்களே, அது எவ்விடத்திலிருக்கின்றது?

விடை :— பிதுர்லோகமானது, பூலோகத்திற்குக்கீழே அதலலோகத்திற்குமேலே தென்பாரிசமாகவிருக்கின்றது.

வினா: —452. மேற்கூறிய ஒவ்வொருஉலகங்களும்ஒன்றுக்கொன்று எவ்வளவுதூரத்திலிருக்கின்றன?

விடை:— அவைகள் ஒவ்வொன்றும் பதினாயிரம்யோஜனைதூரத்திற்கப்பாலிருக்கின்றன.

வினா:—453. அவ்வுலகங்களில் சூரியசந்திரர்களுடைய ஸஞ்சாரமுண்டா?

விடை:— அவ்வுலகங்களில் சூரியசந்திரர்களுடைய உதயாஸ்தமனங்களாவது பிரகாசமாவது இல்லையாகையால், அவர்களின் ஸஞ்சாரமும் இல்லையென்றே நிரணயிக்கவேண்டியதாகின்றது.

வினா:—454. அவ்வுலகங்களில் வேறு என்னென்ன விசேஷங்கள் உண்டு?

விடை:— அவ்வுலகங்களில்வஸிப்பவர்களுக்கு துக்கம்,வியாதி, ஜரை, வியர்வை, வயஸ்நிரணயம், மரணம்முதலியவைகள் ஏற்படுகிறதில்லை.

---

## நாலுவிதஸ்தூலசரீரங்கள்.

வினா:—455. ஐயா! இவைகள் இருக்கட்டும். முன்வெளிப்ரபஞ்சத்தின்வரலாறு கூறிவருகிறபொழுது, நாலுவித ஸ்தூலசரீரங்களென்று சொன்னீர்களே, அவையாவன?

விடை:— நாலுவித ஸ்தூலசரீரங்களென்பது, அண்டஜ, உத்பிஜ, சுவேதஜ, ஜராயுஜமென்ற ஜீவராசிகளின் நான்குவகைப் பிறவிகள்.

வினா:—456. அண்டஜமாவதென்ன?

விடை:— முட்டையிலிருந்து ஜனிக்கின்ற ஜீவராசிகள்.

வினா:—457. உத்பிஜமாவதென்ன?

விடை:— பூமியிலிருந்து உத்பவிக்கின்ற விருக்ஷாதிஜீவராசிகள்.

வினா:—458. சுவேதஜமாவதென்ன?

விடை:— வியர்வையிலிருந்து உண்டாகும் பிராணிகள்.

வினா:—459. ஜராயுஜமாவதென்ன?

விடை:— கர்ப்பத்திலிருக்கும் மடைக்குள்கட்டுப்பட்டு ஜனிக்கின்ற ஜீவராசிகள்.

வினா:—460. ஐயா! தாங்கள் முன் நாலுவகையோனியில் எழுவகைத்தோற்றமாய் ஜீவராசிகள் ஜனிக்கப்படுகிறதா

கச் சொன்னீர்களே, அவ்வெழுவகைத்தோற்றங்க ளென்பவை எவை?

விடை:— அப்பா! எழுவகைத்தோற்றங்களாவது, தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், பக்ஷிகள், ஊர்வன, நீர்வாழ்வன, பர்வதம்விருக்ஷம்முதலிய ஸ்தாபரங்களாகிய வைகளாம்.

---

## உட்பிரபஞ்சம்.

வினா:—461. ஐயா! உட்ப்ரபஞ்சத்தில் பஞ்சகோசங்களென்று சொன்னீர்களே, அதென்ன?

விடை:— அப்பா! பஞ்சகோசங்களென்பது, அன்னமயப்ராணமய மனோமயவிக்ஞானமய ஆனந்தமயமென்ற ஐந்து கோசங்கள்.

வினா:—462. கோசங்களாவதென்ன?

விடை:— அடுக்குச்சட்டிபோல் ஒன்றினுள் ஒன்றாகவைக்கப் படும் ஒன்று அல்லது கூடுகளென்றுஅருத்தம்.

வினா:—463. சரீரத்திரயம்என்பது என்ன?

விடை:— ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரணமென்ற மூன்றுவிதசரீரங்கள்.

வினா:—464. ஸ்தூலசரீரமாவது யாது?

விடை:— சர்மம், உதிரம், மாம்ஸம், சனுயு, அத்தி, மச்சை யென்றஆறுதத்துவங்களுடன் கூடினதே ஸ்தூலசரீரமாம்.

வினா:—465. ஐயா! இந்தஸ்தூலசரீரம்பெற்ற பிராணிகளை மூவகை ஜாதியாகக் கூறுகிறார்களே, அதென்ன?

விடை:— அப்பா! மூவகைஜாதியென்பது, இஹபரலோகக்ஞானமுள்ள மனுஷ்யஜாதியும், பரலோகபுத்தியை மறைத்து இஹலோகபுத்தி மாத்திரமுள்ளபசுபக்ஷிமுதலியஜாதியும், இருலோகபுத்தியுமற்ற மரம், கொடி, செடிமுதலிய ஜாதிகளுமாம்.

வினா:—466. ஸூக்ஷ்மசரீரமாவது யாது?

விடை:— ஸூக்ஷ்மசரீரமென்பது, அகங்காரமாகிய 5-தத்து

வத்தையும், ஞானேந்திரியத்தையும், பஞ்சப்ராணங்களையும், கர்மேந்திரியத்தையு முடையதாகவிருக்கும்.

வினு:—467. காரணசரீரமாவது யாது?

விடை:— அவித்தையேகாரண சரீரமாம்.

வினு:—468. ஷட்பாவவிகார மாவதென்ன?

விடை:— ஜனித்தல், வளருதல், இருத்தல், திரிதல், (மற்றொன்றாய்மாறுதல்) குறுகுதல், நசித்தலென்ற ஆறுவிதவிகாரங்களாம்.

வினு:—469. ஷட்கோசங்களாவ தென்ன?

விடை:— முன்கூறின ஸ்தூலசரீரத்திற்குரிய ஆறுதத்துவங்களேஷட்கோசங்களாம்.

வினு:—470. ஷடூர்மிகளாவதென்ன?

விடை:— பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணமென்றவைகளே ஷடூர்மிகளாம்.

வினு:—471. குருட்டுத் தனமென்பதுயாது?

விடை:— கவனியாமற் செய்யும் வேலையேகுருட்டுத் தனமாம்.

வினு:—472. மந்தத்தனமென்பது யாது?

விடை:— பூமியில் ஆமையூர்ந்துசெல்வதுபோலொத்த ஸ்வபாவமே மந்தத்தனமாம்.

வினு:—473. சுறுசுறுப்பு என்பதுயாது?

விடை:— முயலைப்போல் வேகமாயோடிச் செல்லும் ஸ்வபாவமே சுறுசுறுப்பாம்.

வினு:—474. ஆசையாவது யாது?

விடை:— ஒருவஸ்துவையடைய வேண்டுமென்று எண்ணுவதே ஆசையாம்.

வினு:—475. துவேஷமாவதென்ன?

விடை:— ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் சிசுபாலன்கொண்ட கருத்தே துவேஷமாம்.

வினு:—476. திருகரணங்களாவ தென்ன?

விடை:— மனம், வாக்கு, காய மிவைகளாம்.

வினா: —477. அவஸ்தாத்திரயமாவதென்ன?
விடை:— ஜாக்ரம், ஸ்வப்னம், சுஷுப்தியாகியவைகளாம்.

வினா: —478. ஞானேந்திரியமாவதென்ன?
விடை:— தோல், கண், காது, நாவு, நாசி இவைகளாம்.

வினா: —479. கர்மேந்திரியமாவதென்ன?
விடை:— வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தமாகியவைகளாம்.

---

## பஞ்சப்ராணன்.

வினா: —480. பஞ்சப்ராணன்களாவதென்ன?
விடை:— ப்ராணன், அபானன், வியானன், உதானன், ஸமானனாகிய ஐந்துவாயுக்களாம்.

வினா: —481. உபப்ராணன்களாவதென்ன?
விடை:— நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயனென்ற ஐந்து உபவாயுக்களாம்.

வினா: —482. மேலேசொன்ன ப்ராணாதி ஐந்துவாயுக்களும் உபப்ராணாதி ஐந்துவாயுக்களும் சரீரத்தில் என்னென்ன கிரியைகளைச் செய்துகொண்டிருக்கின்றன?
விடை:— இந்த ப்ராணாதிவாயுக்களும் உபப்ராணாதிவாயுக்களும் ஒவ்வொன்றும் ஒவ்வொருகிரியையைச் செய்துகொண்டிருக்கின்றன.

வினா: —483. ப்ராணவாயு எவ்விடத்திலிருந்துகொண்டு எவ்விதமான கிரியையைச் செய்துகொண்டிருக்கின்றது?
விடை:— ப்ராணவாயு ஹ்ருதயத்திலிருந்து நாசியாதி பர்யந்தம் ஸஞ்சரித்துக்கொண்டு உபப்ராணாதி ஐந்துவாயுக்களால், பின்னாற் கூறப்படும் கிரியைகளைச் செய்துகொண்டிருக்கின்றது.

வினா: —484. அபானவாயு எவ்விடத்திலிருந்துகொண்டு எவ்விதமான கிரியையைச் செய்துகொண்டிருக்கின்றது?
விடை:— அபானவாயுகுதத்தில் ஜாடராக்னியாக உஷ்ணித்துக்கொண்டு உண்ட அன்னபானாதிகளை ஜீரணிப்பித்துக்கொண்டிருக்கின்றது.

வினா:—485. வியானவாயு எவ்விடத்திலிருக்கின்றது?
விடை:— ஸர்வாங்கங்களிலும் வியாபித்திருக்கின்றது.

வினா:—486. உதானவாயு எவ்விடத்திலிருந்துகொண்டு எவ்விதமான கிரியையைச் செய்துகொண்டிருக்கின்றது?
விடை:— உதானவாயுகண்டத்திற் கடினமாகவிருந்து கடைந்துகொண்டிருக்கின்றது.

வினா:—487. ஸமானவாயு எவ்விடத்திலிருந்துகொண்டு எவ்விதமான கிரியையைச் செய்துகொண்டிருக்கின்றது?
விடை:— ஸமானவாயுநாபிஸ்தானத்திலிருந்துகொண்டுஉண்ட அன்னபானாதிகளை ஸகலநாடிகளின்வழியாக இழுத்துக்கொண்டிருக்கின்றது.

வினா:—488. ஐயா! இந்தப்ராணாதி பஞ்சவாயுக்களுக்கு இவ்விதமான கிரியைகளைச்செய்யக்கூடிய குணம் எதனால் ஏற்பட்டது?
விடை:— அப்பா! அந்தவாயுக்கள் ஐந்தும் பஞ்சபூதங்களின் அம்சமானபடியினால் அவைகளின் குணங்களால் இவைகளுக்கு அவ்வவ்கிரியை ஏற்பட்டது.

வினா:—489. இந்த ப்ராணாதிவாயுக்கள் பஞ்சபூதத்தினுடைய எந்தஅம்சத்திலிருந்து எவ்விதமாகக் கூட்டிவைக்கப்பட்டிருக்கின்றன?
விடை:— அந்தவாயுக்கள் பஞ்சபூதத்தின் ராஜஸாம்சத்திலிருந்து பூதத்திற்கு ஒவ்வொருமாத்திரையாக எடுத்துக் கூட்டிவைக்கப்பட்டிருக்கின்றன.

வினா:—490. ப்ராணவாயு எதன்அம்சம்?
விடை:— வாயுவின் அம்சம்.

வினா:—491. அபானவாயு எதன்அம்சம்?
விடை:— அக்னியின் அம்சம்.

வினா:—492. வியானவாயு எதன்அம்சம்?
விடை:— ஆகாசத்தின் அம்சம்.

வினா:—493. உதானவாயு எதன்அம்சம்?
விடை:— பிருதிவியின் அம்சம்.

வினா:—494. ஸமானவாயு எதன்அம்சம்?
விடை:— அப்புவின் அம்சம்.

வினு: —495. உபப்ராணுதி ஐந்துவாயுக்களில் நாகன்என்ற வாயு என்னசெய்கின்றது?
விடை:— வாந்திபண்ணுவிக்கின்றது.

வினு: —496. அவைகளில் கூர்மன்என்றவாயு என்னசெய்கின்றது?
விடை:— இமைத்துவிழிக்கின்றது.

வினு: —497. அவைகளில் கிரிகரன்என்ற வாயு என்னசெய்கின்றது?
விடை:— குறுகுறுத்துத் தும்முகின்றது.

வினு: —498. அவைகளில் தேவதத்தன்என்ற வாயு என்னசெய்கின்றது?
விடை:— கொட்டாவி கொள்ளுகின்றது.

வினு: —499. அவைகளில் தனஞ்சயனென்ற வாயு என்னசெய்கின்றது?
விடை:— வீங்குவிக்கின்றது.

வினு: —500. இந்தக்கிரியைகள் ப்ராணனுடைய தொழிலாகவிருப்பதால், அவைகளை உபப்ராணன்களின் கிரியைகளாகக் கூறலாமா?
விடை:— சிலர் இக்கிரியைகளை உபப்ராணன்களின் தொழில்களாகக் கூறுகிறார்கள். அவ்விதம் கூறின்போதிலும், இவ்வைந்து கிரியைகளும் ப்ராணனுடைய தொழிலானபடியினாலே அக்கிரியைகளை உபப்ராணன்களின் தொழில்களாகக் கூறலாகாதென்பதும் ஓர் கருத்து.

---

## அந்தஃகரணம்.

வினு: —501. மனஸ்ஸென்பது யாது?
விடை:— விஷயங்களைப்பற்றிச் செல்லுகிறது எதுவோ, அதுவே மனஸாம்.

வினு: —502. புத்தியென்பது யாது?
விடை:— மனோநாட்டத்தாலேற்படுகின்ற விஷயங்களின் நன்மைதீமைகளைப் பகுத்தறிகின்றதெதுவோ, அதுவே புத்தி.

வினா :— 503. சித்தமென்பது யாது ?

விடை :— புத்தியாலறிந்தவிஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுகிறதெதுவோ, அதுவே சித்தம்.

வினா :— 504. அஹங்காரமென்பது யாது ?

விடை :— நான்செய்தேன், நான்போனேன், வந்தேன் என்று வியவகரிக்கிறதெதுவோ, அதுவே அஹங்காரம்.

வினா :— 505. ஸங்கற்பம்என்பது யாது ?

விடை :— இதைச்செய்யவேண்டும், அதைச் செய்யவேண்டாமென்றெண்ணுகின்ற கோரிக்கையே ஸங்கற்பமாம்.

வினா :— 506. நிச்சயம்என்பது யாது ?

விடை :— ஒருவஸ்துவை மற்றொருவஸ்துவாகக் கருதி ஸந்தேகித்தப்பின் இது அதுவல்லவென்ற தீர்மானத்தைச் சித்தத்தில்நிறுத்துவதே நிச்சயமாம்.

வினா :— 507. நினைப்புஎன்பது யாது ?

விடை :— இது அவ்விதம்பவிக்கும், அது இவ்விதம்பவிக்கும் என்று எண்ணுவதே நினைப்பு.

வினா :— 508. அபிமானம்என்பது யாது ?

விடை :— இது என்மாடு, இதுஎன்வீடு என்று கருதுங்கருதலே அபிமானமாம்.

வினா :— 509. விசுவன்என்பவன் யாவன் ?

விடை :— ஜாக்ரத்தில் வியவகரிக்கின்ற அவஸ்தாபுருஷன்.

வினா :— 510. இவனுக்கு இப்பெயர் எதனால்வந்தது ?

விடை :— விசுவமாகிய ஜகத்தை விளக்கிவிக்கிறபடியினால் அப்பெயர்வந்தது.

வினா :— 511. இவனுக்கு வேறுவிதப்பெயர்கள் உண்டா ?

விடை :— உண்டு.

வினா :— 512. அவையாவன ?

விடை :— வியாவகாரிகன், சிதாபாஸன் என்பவையாம்.

வினா :— 513. வியாவகாரிகனென்ற பெயர் எதனால்வந்தது ?

விடை :— வியவகாரத்திற்கு அபிமானியாகையால் அப்பெயர் வந்தது.

வினா :—514. சித்ப்ரஸனென்றபெயர் எதனால்வந்தது?
விடை :— சித்தினுடைய ஆபாஸமாகவிருப்பதால் அப்பெயர் வந்தது.

வினா :—515. தைஜஸன்என்பவன் யாவன்?
விடை :— ஸ்வப்னத்தில் வியவகரிக்கின்ற அவஸ்தாபுருஷன்.

வினா :—516. இவனுக்கு இப்பெயர் எதனால்வந்தது?
விடை :— தேஜோமயனானகையால் வந்தது.

வினா :—517. இவனுக்கு வேறுவிதப்பெயர்கள் உண்டா?
விடை :— உண்டு.

வினா :—518. அவையாவன?
விடை :— பிராதிபாஸிகன், ஸ்வப்னகல்பிதன் என்பவையாம்.

வினா :—519. பிராதிபாஸிகனென்ற பெயர்எதனால்வந்தது?
விடை :— சுத்தியில் ரஜதம்போல்ஸ்வப்னத்தில் தோற்றமாத்திரமாயிருப்பதால், அப்பெயர்வந்தது.

வினா :—520. ஸ்வப்னகல்பிதனென்ற பெயர்எதனால் வந்தது?
விடை :— பொய்யான ஸ்வப்னத்தைக்கற்பிப்பதால் அப்பெயர் வந்தது.

வினா :—521. ப்ராக்ஞனென்பவன் யாவன்?
விடை :— சுஷுப்திஅவஸ்தையை அபிமானிக்கிறவனே ப்ராக்ஞன்.

வினா :—522. இவனுக்கு இப்பெயர் எதனால் வந்தது?
விடை :— பிரஸ்தாபஅவஸ்தாபுருஷருள் சிறந்தவனானதால்,அப்பெயர்வந்தது.

வினா :—523. இவனுக்கு வேறுவிதமானபெயர்கள் உண்டா?
விடை :— உண்டு.

வினா :—524. அவையாவன?
விடை :— பாரமார்த்திகன், அவித்தியாவச்சின்னனென்பவையாம்.

வினா :—525. பாரமார்த்திகனென்ற பெயர்எதனால் வந்தது?
விடை :— கல்மஷரகிதனாக விருப்பதால் வந்தது.

வினா: — 526. அவித்தியாவச்சின்னனென்றபெயர் எதனால்வந்தது?
விடை:— அவித்தையாகிய அக்ஞானத்துடன் கூடியிருப்பதினால்வந்தது.

வினா: — 527. ஸாத்விகம், ராஜஸம், தாமஸம்என்பவையாவை?
விடை:— அவைகள்மூன்றும் மூன்றுகுணங்கள்.

வினா: — 528. ஸாத்விககுணத்தின் தன்மையென்ன?
விடை: — தத்துவக்ஞானம், ஈசுவரபக்தி முதலியவைகளே ஸாத்விககுணத்தின் தன்மையாம்.

வினா: — 529. ராஜஸகுணத்தின் தன்மையென்ன?
விடை:— காமக்குரோதங்களுடன் கூடின பிரகர்மானுஷ்டானமே ராஜஸகுணத்தின் தன்மையாம்.

வினா: — 530. தாமஸகுணத்தின் தன்மையென்ன?
விடை:— சோகம், மோகம், நித்திரை, மயக்கமாகியவைகளே தாமஸகுணத்தின் தன்மையாம்.

வினா: — 531. ஸுகம்என்பது யாது?
விடை: — இஷ்டகாம்யங்களாகிய போகபாக்கியங்களை அநுபவிக்கிறதே ஸுகமாம்.

வினா: — 532. துக்கம்என்பதுயாது?
விடை:— இஷ்டகாம்யங்களாகிய போகபாக்கியங்களைப்பெற்று, அவைகளை அநுபவியாமலிருப்பதே துக்கமாம்.

வினா: — 533. ஞானக்ஞானங்களாவதென்ன?
விடை:— தன்னைத்தான் அறிவதேக்ஞானம். அதைஅறியாமலிருப்பது அக்ஞானம்.

வினா: — 534. பிரியமென்பது யாது?
விடை:— ஒருபொருளில் ஆசையடைகிறதே பிரியமாம்.

வினா: — 535. அப்பிரியம்என்பது யாது?
விடை:— ஒருபொருளில் வெறுப்படைகிறதே அப்பிரியமாம்.

வினா: — 536. உபேக்ஷையென்பது யாது?
விடை: — ஸகல வஸ்துக்களிடத்திலும் ஆசையற்றிருத்தலே உபேக்ஷையாம்.

## ஸாதனசதுஷ்டயம்.

வினா: — 537. ஸாதனசதுஷ்டயமாவதென்ன?

விடை:— ஸாதனசதுஷ்டயமாவது, நித்தியாநித்திய வஸ்து விவேகம், இஹாவுத்திரார்த்த பலபோகவிராகம், ஸமாதிஷட்கஸம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்பவையாம்.

வினா: — 538. இவற்றுள், நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது யாது?

விடை:— பிரமமே நித்தியமென்றும், பஞ்சபூத பௌதிகமூலிய ஜகத்தெல்லாம் அநித்தியமென்றும் குருமுகமாய்த் தெரிந்துகொள்வதேயாம்.

வினா: — 539. இஹாவுத்திரார்த்த பலபோகவிராகமாவது யாது?

விடை:— இஹபரலோகங்களிலுள்ள போகபாக்கியங்களிலும், அவ்வுலகங்களிலிருக்கின்ற ஸௌந்தர்யவதிகளின் கிரீடாதி ஸம்போகவிஷயங்களிலும் வாந்திசெய்த அசனமல மூத்திராதிகளைப்போல் விருப்பமில்லாமல் ஜகதீசுவரனிடத்தில் அன்புசெலுத்துவதேயாம்.

வினா: — 540. ஸமாதிஷட்க ஸம்பத்தியாவதென்ன?

விடை:— சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ஸமாதானம், சிரத்தைஎன்பவையாம்.

வினா: — 541. சமம்என்பது யாது?

விடை:— மனஸை இதரவிஷயங்களிற் செல்லவிடாமல் சிரவணத்தில் நிறுத்திவைப்பதேயாம்.

வினா: — 542. தமம்என்பது யாது?

விடை:— ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை விஷயங்களிற் செல்லவிடாது சிரவணத்தில் நிறுத்திவைப்பதேயாம்.

வினா: — 543. உபரதியென்பது யாது?

விடை:— உபரதியென்பதை ஸன்னியாஸமாகவும், நிஷ்காமகர்மமாகவும், வியவகாரமற்றிருத்தலாகவும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றன.

வினா: — 544. திதிக்ஷையென்பது யாது?

விடை:— ப்ராரப்தகர்மத்தினால் நேரிடுகின்ற ஸுகதுக்காதிகளின்பொருட்டு ஸந்தோஷத்தையும் வியஸனத்தையும்அடையாமல் ஸமபுத்தியுடனிருப்பதேயாம்.

வினா : — 545. ஸமாதானமென்பது யாது ?
விடை :— சிரவணாதிகளால் அறிந்துகொண்டவிஷயத்தில் மனஸை நிறுத்துவதாம்.

வினா : — 546. சிரத்தையாவதென்ன ?
விடை :— குருவாக்கியத்திலும் வேதாந்தவாக்கியத்திலும் விசுவாஸத்துடனிருப்பதேயாம்.

வினா : — 547. முமுக்ஷுத்வமென்பது யாது ?
விடை :— மோக்ஷஇச்சையுடனேகூடி அதைப்பெற முயற்சிப்பதே முமுக்ஷுத்துவமாம்.

---

## மைத்திரியாதி சதுஷ்டயம்.

வினா : — 548. மைத்திரியாதிசதுஷ்டயமாவதென்ன ?
விடை :— மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷைஎன்பவைகளாம்.

வினா : — 549. மைத்திரியாவதென்ன ?
விடை :— ஸர்வஜீவராசிகளிடத்திலும் மித்துரு பாவமாகவிருப்பதாம்.

வினா : — 550. கருணையாவதென்ன ?
விடை :— ஸகலஜீவராசிகளையும் மன்னுயிரெனக் கருதாமல் தன்னுயிராகப்பாவித்து இரக்கம் பாராட்டுவதாம்.

வினா : — 551. முதிதையாவதென்ன ?
விடை :— எப்பொழுதும் எல்லோரிடத்திலும் ஸந்தோஷமாகவிருத்தலாம்.

வினா : — 552. உபேக்ஷையாவதென்ன ?
விடை :— பாபிகளிடத்தில் வெறுப்படைதலே உபேக்ஷையாம்.

---

## அஷ்டாங்கயோகம்.

வினா : — 553. அஷ்டாங்கயோகமாவதென்ன ?
விடை :— இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, ஸமாதியென எட்டுவித அங்கங்களாம்.

வினா: —554. இந்த அஷ்டாங்க யோகத்திற்கு வேறுபெயர்கள் உண்டா?
விடை:— உண்டு.

வினா: —555. அப்பெயர்கள் எவை?
விடை:— ஹடயோகம், இராஜயோகமென்றவைகளாம்.

வினா: —556. இயமம்என்பது யாது?
விடை:— மன்னுயிருக்குத் துன்பஞ்செய்யாமலும், வாய்மை வழுவாமல் ஸத்தியமாகவும், களவுத்தொழிலிற்பிரவேசியாமலும், பிர்மசரியமென்ற விரதானுஷ்டானத்துடனும், பேராசையன்னியிலும் இருத்தலாம்.

வினா: —557. நியமம்என்பது யாது?
விடை:— சௌசம், ஸந்தோஷம், திருப்தி, தபஸு, அத்தியயனம், ஈசுவரபக்தி இவைகளாம்.

வினா: —558. ஆஸனமாவதென்ன?
விடை:— ஸ்திரமாயும், பிரியமாயும், சுத்தமாயும், ஸங்கடமன்னியிலும், ஸௌகரியமாயும் உட்காருதலாம்.

வினா: —559. பிராணாயாமமாவதென்ன?
விடை:— பிராணவாயுவை வலதுநாசியால் உள்ளேயிழுத்து கொஞ்சம் பந்தம்பண்ணி பிறகு இடதுநாசியினால் வெளியே விடுவதாம்.

வினா: —560. இதைஎவ்விதம் அப்பியாஸம்செய்து அனுஷ்டிக்க வேண்டும்?
விடை:— ஒருகுருமூலமாக அப்பியாஸம்செய்து அனுஷ்டிக்க வேண்டும்.

வினா: —561. பிரத்தியாகாரமாவதென்ன?
விடை:— இந்திரியங்களை விஷயாதிகளிற் செல்லவிடாமல் ஒருவழிப்படுத்துவது.

வினா: —562. தாரணை, தியானம், ஸமாதியாகியவைகளின் விபரங்கள் யாவை?
விடை:— உபாஸிக்கின்ற வஸ்துவைநோக்கி முதலிற்பாவனை செய்து, பிறகு அவ்வஸ்துவை ஒருநிலையில்நிறுத்தி, அதில் த்ருடப்பட்டவுடனேதான் என்ற ப்ரக்ஞையற்றுத் தன்மயமாகுதலாம்.

வினு:—563. இந்த அஷ்டாங்கயோகம்புரிவதனு லடையும்பிரயோஜனம் யாது?

விடை:— அணிமாதி அஷ்டஸித்திகளைப்பெறுவதே அதனுலடையும் பிரயோஜனம்.

வினு:—564. அணிமாதி அஷ்டஸித்திகளென்பவை எவைகள்?

விடை:— தன்னை அதிஸூக்ஷ்மமாகச் செய்துகொள்ளுதலும், பெருத்துக்கொள்ளுதலும், இலேசாக்ச் செய்துகொள்ளுதலும், இஷ்டம்போல் எங்குவேண்டுமானுலும் ஸஞ்சரித்தலும், அபேக்ஷையுள்ள பொருளையடைதலும், பிறரை வசியஞ்செய்துகொள்ளுதலும், ஒருவரும் அறியாமல் மறைந்திருத்தலும், ஈசுவரத்தன்மையை அடைதலுமாம்.

வினு:—565. இந்தஸித்திகளைஎவ்விதம் அப்பியாஸம்செய்துகொள்ளல் வேண்டும்?

விடை:— பெரியோர்கள் துவாராஉபதேசம் பெற்றுக்கொண்டு அப்பியாஸம் செய்துகொள்ளல்வேண்டும்.

வினு:—566. அவர்கள் இவைகளைஎல்லோருக்கும் உபதேசிப்பார்களா?

விடை:— மாட்டார்கள். பாத்திரமறிந்தே உபதேசிப்பார்கள்.

வினு:—567. ஏன்எல்லோருக்கும் உபதேசிக்கமாட்டார்கள்?

விடை:— தங்கள் இன்பத்தைக்கோரி பிறரைத்துன்பஞ்செய்து பாவிகளாகப் பவிப்பார்களேயல்லாமற் கைவல்லியஸித்தியைப் பெறமாட்டார்கள். ஆனதால் எல்லோருக்கும் உபதேசிக்கிறதில்லை.

வினு:—568. ஆனுல்இந்த ஸித்திகளால்அடையும் பிரயோஜனம் யாது?

விடை:— லோகோபகாரமான நற்செய்கைகளைச் செய்துஅதனுல் சித்தசுத்தியைப்பெற்று ஞானமடைவதே பிரயோஜனம்.

வினு:—569. அந்தக்ஞானத்தாலடையும் பிரயோஜனம் யாது?

விடை:— மோக்ஷமே.

வினா:—570. அந்தமோக்ஷமானது இந்தயோகத்தினால் ஸித்திப்பதுபோல் வேறு எந்தயோகங்களால் ஸித்திக்கும்?
விடை:— கர்மம், பக்தி, ஞானமென்ற யோகங்களாலும் ஸித்திக்கும்.

---

## கர்மயோகம்.

வினா:—571. கர்மயோகமென்பது யாது?
விடை:— வேதத்தில்விதிக்கப்படாத நிஷித்தகர்மங்களைவிலக்கித் தனக்குப் பற்றில்லாமற்செய்யும் விஹிதகர்மங்களே கர்மயோகமெனப்படும்.

வினா:—572. விஹிதகர்மங்களை யேன் தனக்குப் பற்றில்லாமற்செய்யவேண்டும்?
விடை:— தான் பற்றுதலுடன் அக்கர்மங்களைச்செய்யும்பக்ஷத்தில் அவைகளின் பலன்களை அநுபவிக்கும்பொருட்டு ஜன்மமும், அந்தஜன்மத்தால் ஸுகதுக்கங்களும் ஏற்படுகின்றது. ஆதலின், நிஷ்காமமாகவே கர்மங்கள் செய்யவேண்டும்.

வினா:—573. நிஷ்காமகர்மத்தால் ஏற்படுகின்ற பலன்களெவை?
விடை:— நிஷ்காமகர்மத்தால் சித்தசுத்தியும், சித்தசுத்தியால் ஞானமும், ஞானத்தால் மோக்ஷமும்ஏற்படுகின்றன.

வினா:—574. கர்மமானது எத்தனைவகைப்படும்?
விடை:— பலவகைப்படும்.

வினா:—575. இதன்விபரங்களைப்பற்றி எவ்விடத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது?
விடை:— கர்மகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

வினா:—576. அக்கர்மகாண்டத்தில் எவனெவன்எந்தெந்த காலத்தில் எந்தெந்தகர்மத்தைச் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது?
விடை:— கர்மகாண்டத்தில் அவனவனுடைய ஜாதிவர்ணாசிரமங்களுக்குத் தகுந்தபடி வயஸுக்கிரமத்தை அநுஸரித்து விதிக்கப்பட்டிருக்கும் அனேகந்தர்மங்களாகிய கர்மங்களைச்செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

வினா: —577. ஆனால், மனிதனானவன் பிறந்ததுமுதல் இறக்கிறபரியந்தம் கர்மங்களைச்செய்துகொண்டுதான் இருக்கவேண்டுமோ?

விடை:— ஆம். மனிதனானவன் ஒருகர்மமும்செய்யாமல் உலகத்திலிருக்கமுடியாதாகையால், எப்பொழுதும் கர்மங்களைச்செய்துகொண்டுதானிருக்கவேண்டும்.

வினா: —578. ஜாதிவர்ணாசிரமங்களென்று சொன்னீர்களே, அதென்ன?

விடை:— ஜாதியென்பது அவரவர்களின் தொழின்முறைகளாலும், மதக்கோட்பாடுகளாலும் ஏற்பட்டிருக்கின்ற பலவித உட்பிரிவுகளேயாம். வர்ணமாவது, ஆதியில் அவரவர்களின் குணத்திற்கும் பிறப்புக்கும் உகந்தவாறு ஏற்பட்டிருக்கின்ற பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன்என்ற பேதங்களாம். ஆசிரமம் என்பது, பிர்மசாரியம், காருஹஸ்தியம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம்என்பனவைகளாம்.

வினா: —579. பிராமணன் என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— பிராமணன் வேள்விபுரிதல், புரிவித்தல், மறையோதுதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல்முதலிய கர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: —580. க்ஷத்திரியன் என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— க்ஷத்திரியன் யாகம்செய்தல், வேதமோதல், ஈதல், பிரஜாரக்ஷணம், யுத்தப்பயிற்சி, தேவதாவிசுவாஸம், வேதியரின்பணிவிடை, அதிதிபூஜை, குருசிசுரூஷை, கோஸம்ரக்ஷணம்முதலிய கர்மங்களைச்செய்யவேண்டும்.

வினா: —581. வைசியன் என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— வைசியன் அத்தியயனம்செய்தல், வேள்விபுரிதல், தானம், பசுபரிபாலனம், தனவிஷயமான லேவாதேவி, கிருஷித்தொழில், வர்த்தகம்முதலிய கர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: —582. சூத்திரன் என்னென்னக்ர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— சூத்திரன் சுத்தி, பிராமணபணிவிடை, ஸத்தியம், க்ஷமை, வேதத்தில்விதிக்கப்படாத நமஸ்காரமந்திரங்கள் முதலிய கர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: —583. உட்பிரிவுஜாதியர் என்னென்னக்ர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— அவரவர்களின் தொழின்முறைகளையும் மதக்கோட்பாடுகளையும் அநுஸரித்து ஸத்கர்மங்களைச்செய்யவேண்டும்.

வினா: —584. பிர்மசர்யாசிரமி என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— பிர்மசர்யாசிரமி தன்பெற்றோர்களால் நடத்திவிக்கப்பட்ட ஜாதகர்மம், நாமகரணம், அன்னப்ராசனம், சவளம், வித்யாரம்பம், உபநயனம்முதலிய கர்மங்களுக்கு அனந்தரம், தண்டம், கமண்டலம், தர்ப்பமுடி, மௌஞ்சி, அரைஞ்ஞாண் ஆகியவைகளைத் தரித்து, பிக்ஷான்னம்புசித்து, வேதமோதி, குருகுலவாஸம்செய்து, அந்தக்குருவுக்கு வேண்டிய பணிவிடைகளைப்புரிந்து, உபதேசம்பெற்று, பிறகு அவருக்கு குருதக்ஷிணை ஸமர்ப்பித்து, அவரதுஅநுமதியுடன் குலாசாரத்திற்கடுத்த கன்னிகையை விவாஹம்செய்துகொள்ளல் முதலிய கர்மங்களைச்செய்யவேண்டும்.

வினா: —585. கிருஹஸ்தாசிரமி என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— கிருஹஸ்தாசிரமி சாஸ்திரயுக்தமான நித்திய நைமித்திககர்மங்களை நிஷ்காமமாகச்செய்து, பிறகுகுடும்பவியாபாரத்தில் வைராக்கிய மடைதல் முதலியகர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: —586. வானப்ரஸ்தாசிரமி என்னென்னகர்மங்களைச் செய்யவேண்டும்?

விடை:— வானப்ரஸ்தாசிரமிஜ்டையைத் தரித்தல், மரவுரிமான் தோல் உடுத்தல், காய், கனி, கிழங்குமுதலியவைகளைப்புசித்தல், பிறரிடம் யாசியாமலிருத்தல், தன்

னிடம் இரந்துவந்தோருக்கு இல்லையென்னாது இயன்றவரை அளித்தல், தேவரிஷி பிதுர்மனுஷ்யாதிகளை ஆராதிப்பதாகிய பஞ்சமஹாயக்ஞங்களைப்புரிதல்முதலியகர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: — 587. ஸன்யாஸாசிரமி என்னென்னகர்மங்களைச் செய்ய வேண்டும்?

விடை :— ஸன்யாஸாசிரமிஸகலபற்றுகளையும் ஒழித்தல், காஷாயம், தண்டம், கமண்டலமாகியவைகளைத் தரித்தல், ஏகாந்தமாகவஸித்தல், ஸுகதுக்கங்களை ஸமமாக பாவித்தல், அந்தஃகரணபுரக்கரணங்களையடக்குதல், லௌகிகவிஷயங்களை நிஷேதித்தல், மனக்கலக்கமற்றிருத்தல், க்ஷமை, தயைமுதலிய உத்தமகுணங்களை வஹித்தல், நிஷ்காமகர்மம் புரிதல், ஈசுவரனைத்தியானித்தல், வேதாந்தவிசாரணை, பிக்ஷையெடுத்துண்ணல்முதலானகர்மங்களைச் செய்யவேண்டும்.

வினா: — 588. இந்தக் கர்மயோகத்தைக்காட்டிலும் ஞானயோகம் சிறந்ததென்று கூறப்படுவதால், கர்மயோகத்தைத் தியஜித்து ஞானயோகத்தைக் கைக்கொண்டாற்போதாதா?

விடை :— கர்மயோகத்தைக் காட்டிலும் ஞானயோகம்சிறந்ததாகவிருந்தபோதிலும், மோக்ஷமடைவதற்கு இரண்டும் ஸாதனங்களாகவிருப்பதாலும், கர்மத்வாராஞானம் ஏற்படவேணதாகையாலும் கர்மயோகத்தைத் தியஜிக்கக்கூடாது.

வினா: — 589. ஆனால், ஞானிக்குக் கர்மமில்லை யென்றவசனத்தின் தாத்பரியம்யாது?

விடை :— ஞானியிடமிருந்து ஸகலகர்மங்களும் தன்னலேநழுவிவிடுமென்பதுதான் தாத்பரியம்.

வினா: — 590. ஆனல்ஞானிகள் கர்மம்செய்கிற தில்லையோ?

விடை :— செய்யாமலிருக்கிறதில்லை. அவ்விதமானல் ஜனகபுரியிலுள்ள ஜனகராஜனும், தர்மவியாதனென்னும் வேடனும் அவரவர்ஜாதி முறைப்படிகர்மானுஷ்டானத்துடனிருக்கக்கணக்கில்லை. அன்றியும்,ஸர்வோத்கிருஷ்டமானகீதையில் உலகமானது பலாபேக்ஷ

யுடன் காம்யகர்மங்களைச் செய்வதுபோல், ஞானியானவன் லோகோபகாரார்த்தம் நித்யகர்மங்களைச் செய்யவேண்டுமென்றுங் கூறப்பட்டிருப்பதால்ஞானியும்தனக்குப் பற்றில்லாமல் கர்மஞ்செய்யவேண்டுமென்றே ஏற்படுகின்றது.

வினா:—591. எதனால் கர்மஞ்செய்யும்படி ஏற்படுகின்றது?

விடை:— மனதின் ஸமஸ்காரத்தால் கர்மஞ்செய்யும்படி ஏற்படுகின்றது.

வினா:—592. அம்மனதின் ஸமஸ்காரம் எதனால் ஏற்படுகின்றது?

விடை:— பூர்வகர்மவாஸனையால் ஏற்படுகின்றது.

வினா:—593. அக்கர்மம் எதனாற்செய்யப்பட்டது?

விடை:— மனோவாக்குக்காயங்களாற் செய்யப்பட்டது.

வினா:—594. கர்மத்தை ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியமென மூன்றுவகையாகக் கூறுகிறார்களே, அதென்ன?

விடை:— அனேகஜன்மங்களாகச் சேர்ந்திருக்கப்பட்ட கர்மங்களை ஸஞ்சிதமென்றும், அதிலிருந்து கிஞ்சிற்றெடுத்து இப்பொழுது அநுபவிக்கப்படுகிறதை ப்ராரப்தமென்றும், இந்தஜன்மத்திற் செய்யப்படுகிறதை ஆகாமியமென்றுங் கூறுவார்கள்.

வினா:—595. இதனால் ஆகாமியத்திலிருந்து ஸஞ்சிதமும், அதிலிருந்து ப்ராரப்தமும் ஏற்படுகிறதாகத் தெரியவருகிறதல்லவா?

விடை:— ஆம். தெரியவருகிறது.

வினா:—596. ஐயா! இந்தப்ராரப்தமானது மூன்றுவிதங்களாகக் கூறப்படுகின்றனவே, அதென்ன?

விடை:— அப்பா! இந்தப்ராரப்தமானது இச்சாப்ராரப்தமென்றும், அநிச்சாப்ராரப்தமென்றும், பரஇச்சாப்ராரப்தமென்றும் மூன்றுவிதங்களாகக் கூறப்படுகின்றன.

வினா:—597. இச்சாப்ராரப்தமாவது யாது?

விடை:— செய்யக்கூடாத ஒன்றைத்தான் கருதிச்செய்வதே இச்சாப்ராரப்தமாம்.

வினா:—598. அநிச்சாப்ராரப்தமாவது யாது?

விடை :— தனக்கு ஒன்றைச்செய்யப் பிரியமில்லாதிருந்தும் அக்ஸ்மாத்தாய் அதைச்செய்யும்படி ஏற்படுவதே அநிச்சாப்ராரப்தமாம்.

வினா :— 599. பரஇச்சாப்ராரப்தமாவது யாது?

விடை :— அன்னியர்களின்பொருட்டு தான் ஒன்றைச்செய்யும்படி ஏற்படுவதே பரஇச்சாப்ராரப்தமாம்.

வினா :— 600. ப்ராரப்தகர்மத்தை அநுபவித்தே தீரவேண்டுமோ?

விடை :— ஆம். அநுபவித்தே தீரவேண்டும்.

வினா :— 601. மேற்சொன்ன பிரசினோத்தரங்களால் ஆகாமியகர்மத்தையும் அநுபவித்துத் தீரவேண்டுமென்று ஏற்படமாட்டாதா?

விடை :— முன்சொன்னபடி நிஷ்காமமாகக் கர்மம்செய்கிற பக்ஷத்தில் அதுபோல் அநுபவித்துத் தீரவேண்டுமென்று ஏற்படமாட்டாது.

வினா :— 602. நிஷ்காமகர்மத்தினால் ஸஞ்சிதகர்மாநுபவம் நசித்துப் போகுமா?

விடை :— நிஷ்காமகர்மத்தினால் ஸஞ்சிதகர்மாநுபவம் நசிக்கமாட்டாது.

வினா :— 603. பிறகு வேறெதனால் நசிக்கும்?

விடை :— ஞானத்தால் நசிக்கும்.

வினா :— 604. ஐயா! முன்சொன்ன ஜனகன், தர்மவியாதன் என்னும் உத்தமபுருஷர்கள் எதற்காகப் பிரமாணங்களைக் கைக்கொண்டு கர்மங்களை ஆசரித்தார்கள்?

விடை :— உலகத்திலுள்ள பாமரர்களின்பொருட்டு பிரமாணங்களைக் கைக்கொண்டு கர்மங்களை ஆசரித்தார்கள்.

வினா :— 605. அவர்கள் அவ்விதம் ஆசரியாமலிருந்தாலென்ன?

விடை :— உலகமானது கெட்டுப்போகும்.

வினா :— 606. ஐயா! முன் விகிதகர்மங்கள் என்று சொன்னீர்களே, அவைகள் எவை?

விடை :— விகிதகர்மங்கள் என்பவை, நித்தியநைமித்திக காமிய ப்ராயச்சித்தங்களாகிய கர்மங்களாம்.

வினா :— 607. நித்தியகர்மங்களென்பவை எவை?

விடை :— நித்தியகர்மங்களென்பவை தினந்தோறும் செய்ய வேண்டிய ஸ்நாநம், ஸந்தியாவந்தனம், மூர்த்தியாராதனை முதலியவைகளாம்.

வினா : — 608. நைமித்திககர்மங்களென்பவை எவை?

விடை :— நைமித்திககர்மங்களென்பவை விசேஷகாலங்களிற்செய்யவேண்டிய உபநயனம், விவாஹம், ஸீமந்தம், சிராத்தம்முதலிய சுபாசுபக்கிரியைகளாம்.

வினா : — 609. காமியகர்மங்கள் என்பவை எவை?

விடை :— காமியகர்மங்களென்பவை குடும்பவிருத்தி, தனதான்யாபிவிருத்தி, ஸ்வர்க்கலோகப்ராப்தி முதலியவைகளையடையக்கருதிச் செய்யப்படும் யக்ஞதானதவங்களாம்.

வினா : — 610. பிராயச்சித்தகர்மங்கள் என்பவைஎவை?

விடை :— பிராயச்சித்தகர்மங்கள் என்பவைதெரிந்து தெரியாமற்செய்தபாபகிருத்தியங்களையும், அறிந்தோ, அறியாமலோசெய்யவேண்டிய விகிதகர்மங்களைச் செய்யாமல்விட்டபாபங்களையும் நிவர்த்திப்பதற்குரியகர்மங்களாம்.

வினா : — 611. ஐயா! கீதையில் கர்மத்தில் ஞானத்தையும், ஞானத்தில் கர்மத்தையும் பார்ப்பவனே புத்திமானென்றும், அவனே மோக்ஷத்திற்கருகனென்றும் கூறப்பட்டிருக்கின்றதே, அதன்கருத்தென்ன?

விடை :— அப்பா! நித்தியமான மோக்ஷஸாம்பராஜ்யத்தைப்பெறக்கருதி யாதொருபலனையும் தான்இச்சியாது எல்லாம்பகவானருளால் நடந்தேறுகிறதென்றும்தனக்கு ஒருஅதிகாரமும் இல்லையென்றும் நினைத்துச்செய்யும் நிஷ்காமகர்மத்தை கர்மத்தில் ஞானத்தைப் பார்ப்பதென்றும், கர்த்ருத்வத்தை பிரகிருதியில்வைத்து இந்திரிய வியாபாரங்களெல்லாம் கர்மாதீனமெனக்கருதி தான்கர்மபலத்தில் ஸம்மந்தப்படாமல் ஆத்மாவொன்றையேநாடி லோகோபகாரமாகச்செய்யப்படும் கர்மங்களேஞானத்தில் கர்மத்தைப்பார்ப்பதென்றும் அதன் கருத்தாகும்.

o

வினா: —612. அவ்விதமன்றி தனக்காக கர்மங்கள்செய்கிறபக்ஷத்தில் அவைகளால் ஸம்பவிக்கின்றவை எவை?

விடை:— புண்ணியபாபங்கள்.

வினா: —613. ஆத்மாவை அறிவதற்காகச் செய்யப்படும் கர்மங்கள் எவ்விதமாக பலிக்கின்றன?

விடை:— ஆத்மாநுபவமென்ற ஸுகமாகபலிக்கின்றன.

வினா: —614. நான்செய்தேன் என்ற கர்த்ருத்துவமானது ஆத்மாவைச் சாரமாட்டாதா?

விடை:— ஆத்மாவுக்கு வியவகாரமில்லாதபடியால் அந்த கர்த்ருத்துவமானது பிரகிருதியைச் சாருமேயன்றி ஆத்மாவைச் சாரமாட்டாது.

வினா: —615. மனிதனானவன் கர்மம்செய்யாமலிருந்தாலென்ன?

விடை:— மனிதனானவன் கர்மம்செய்யாமலிருந்தால் அவனுக்குச் சரீரஸம்ரக்ஷணை ஸித்திக்கமாட்டாது.

வினா: —616. கர்மேந்திரியத்தை நிக்ரஹித்தவனை ஆசாரமுடையவனாகக் கூறலாமா?

விடை:— அவன்மனஸால் இந்திரியவிஷயங்களைச் சிந்தியாமலிருந்தால் அவனை ஆசாரமுடையவனாகக்கூறலாம்.

வினா: —617. ஞானியானவன் கர்மிகளிடத்தில் கர்மங்களை ஒழிக்கும்படி உபதேசிக்கலாமா?

விடை:— உபதேசிக்கக்கூடாது.

வினா: —618. ஏன் அவ்விதம் உபதேசிக்கக்கூடாது?

விடை:— அவ்விதம் உபதேசித்தால் ஸாமான்யரான கர்மானுஷ்டானிகளுக்கு அவிவேகம் ஏற்படுமேயன்றி விவேகம் ஏற்படமாட்டாது. ஆகையால் அவ்விதமுபதேசிக்கக்கூடாது.

வினா: —619. ஸ்வதர்மத்தைக்காட்டிலும் பரதர்மம் சிரேஷ்டமாகவிருக்கும்பக்ஷத்தில் அக்கர்மத்தைக் கைக்கொள்ளலாமா?

விடை:— கைக்கொள்ளலாகாது.

வினா: —620. ஏன் கைக்கொள்ளலாகாது?

விடை:— குணஹீனமான ஸ்வதர்மத்தால்தனக்கழிவுநேரிட்டபோதிலும் அக்கர்மத்தையே கைக்கொள்ளவேண்டு

மென்றும், அவ்விதமின்றி பாதர்மம் சிரேஷ்டமாக விருக்கிறதென்று அக்கர்மத்தைக் கைக்கொள்ளும் பக்ஷத்தில் அதனால் நரகம் ஸம்பவிக்குமென்றும், உப நிஷத்ரூபமான பரப்பிர்மவித்தையாகிய பகவத்கீதை யென்னும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமான யோக சாஸ்திரத்தில் கூறப்படுவதால் அதைக் கைக்கொள்ளலாகாது.

வினா: — 621. ஆனால், இந்தக்கர்மயோகத்தின் முக்கியமான கருத்துத்தான் என்ன?

விடை:— கர்மத்தையும் விடாமற்செய்யவேண்டும். பந்தத்தை யும் ஒழிக்கவேண்டுமென்றதே இந்தக் கர்மயோகத்தின் முக்கியமான்கருத்து.

---

## பக்தியோகம்.

வினா: — 622. ஐயா! கர்மயோகம் சிறந்ததா? பக்தியோகம் சிறந்ததா?

விடை:— அப்பா! பக்தியோகமே சிறந்தது.

வினா: — 623. எதனால்கர்மத்தைக்காட்டிலும்பக்திசிறந்ததாயிற்று?

விடை:— கர்மம் கிரியாரூபமாயும், பக்தி தியானரூபமாயுமிருப் பதால் கர்மத்தைக்காட்டிலும் பக்திசிறந்ததாயிற்று.

வினா: — 624. பக்தியாவதென்ன? அது எத்தனை வகைப்படும்?

விடை:— பக்தியென்பது, இந்தஜகத்துக்குக் காரணபூதரான பகவானையடையும்பொருட்டு ஸதாகாலமும் வாஸ்து வமான பிரீதியுடன் அவருடைய திவ்யசரணாரவிந்தங் களைத் தியானித்துக்கொண்டிருப்பதேயாம். இந்த பக்தி, பரபக்தியென்றும், அபரபக்தியென்றும் இரு வகைப்படும்.

வினா: — 625. மனிதனானவன் இந்தஜகத்துக்குக் காரணகர்த்தா வானபகவான்ஒருவர் உண்டென்பதை எதனால் அறி கின்றான்?

விடை:— இவ்வுலகத்தில் நடந்தேறுகின்ற ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரமென்னும் முத்தொழில்களால் பகவான் ஒருவர்உண்டென்பதை அறிகின்றான்.

வினா:—626. அவைகளால் பகவான் ஒருவர் உண்டென்பதை அறியும் வகையெப்படி?

விடை:— பர்வதங்கள், ஸமுத்திரங்கள், இன்னும் இதுபோல் அபூர்வமானவஸ்துக்கள் முதலியவைகள் மனிதனால் ஸ்ருஷ்டிக்கப்படாமலும், கருக்குழியிலிருக்கிற பிண்டமும், கல்லினுள் இருக்கும் தேரையும் மாதாவாலும் கல்லாலும் பரிபாலிக்கப்படாமலும், தன்கோரிக்கையன்றி தனக்குமரணம் நேரிடுவதினாலும் இவைகளுக்கெல்லாம் காரணகர்த்தாவான பகவான் ஒருவர்உண்டு என்பதை யறியலாம்.

வினா:—627. அறிந்தபின் பக்திசெய்யவிருப்புடைய மனிதனைவன் எந்தெந்த விரதங்களைக் கைக்கொள்ளல்வேண்டும்?

விடை:— பின்னாற்கூறப்படும் விரதங்களைக்கைக்கொள்ளல் வேண்டும்.

வினா:—628. ஐயா! முன்பரபக்தியென்றும், அபரபக்தியென்றும் சொன்னீர்களே, அதென்ன? அவைகளுள் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது?

விடை:— என்உயிர்போயினும் நாராயணநாமத்தை ஸ்மரியாமலிரேனென்று ஸர்வத்தையும் நாராயணமயமாகப் பார்த்த பிரஹ்லாதருடையபக்தியே பரபக்தியாம். தனதான்ய புத்திரதாராதிகளை யபேக்ஷித்துக் கடவுளடிபணிந்து அவைஸித்தித்தபின் தன்கோரிக்கைப் படியுள்ள பிரார்த்தனையைப்புரிவதும், அவைஸித்தியாவிடின் அக்கடவுளைநோவதுமாகிய பக்தியே அபரபக்தியாம். இவைகளுள் முன்கூறியபக்திதான்உயர்ந்தது. பின்கூறியபக்தி தாழ்ந்தது.

வினா:—629. பின் கூறியபக்தி எதனால் தாழ்ந்ததாயிற்று?

விடை:— பின் கூறியபக்தி வர்த்தகத்தைப்போல் ஒன்றைக் கொடுத்து ஒன்றைவாங்குவதினாலும், அதனாற்கைவல்லிய ஸித்தியைப் பெறமுடியாதாகையாலும் தாழ்ந்ததாயிற்று.

வினா:—630. முன் பக்தனானவன் இதனடியிற்கூறப்படும் விரதங்களைக் கைக்கொள்ளவேண்டுமென்று சொன்னீர்களே, அதென்னவிரதங்கள்?

விடை :— பக்தன் கைக்கொள்ளவேண்டிய விரதங்களாவது, ஸமதிருஷ்டி, ஸர்வமதஸம்மதமாகியவைகளாம்.

வினா : — 631. ஸமதிருஷ்டியென்பது யாது?

விடை :— ஸர்வமும் பகவத்ஸ்வரூபமென்றும், அதையன்றி வேறேயொருவஸ்துவு மில்லையென்றும் அடைகிறஞானமே ஸமதிருஷ்டியாம்.

வினா : — 632. ஸர்வமதஸம்மதம் என்பது யாது?

விடை :— ஸர்வமதஸம்மதம் என்பது, சில சைவவைஷ்ணவ போலி பக்தர்களைப்போல் தாங்கள் வழிபடும்கடவுளே கடவுளென்றும், மற்றப்படி பிறமதஸ்தர்தொழும் கடவுள் கடவுளல்லவென்றும் கருதி அத்தெய்வங்களையும் அவைகளிடத்தில் அன்புசெலுத்துகிறவர்களையும் தூஷியாமல் பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அருளிச்செய்திருக்கிற கீதாவசனப்படி எல்லாம் பிர்மமயமென்றும், அந்தப்பிர்மமே மாயையின் ஸம்மந்தத்தால் பற்பல நாமரூபங்களையுடைய தெய்வங்களாக ஆவிர்பவித்திருக்கிறதென்றும் கருத்திருத்துவதேயாம்.

வினா : — 633. கர்மம், பக்தி, ஞானம் என்றமார்க்கங்களுள் எந்த மார்க்கத்தால் எளிதாக முக்தியடையலாம்?

விடை :— இந்தபக்திமார்க்கத்தால் எளிதாகமுக்தியடையலாம்.

வினா : — 634. கர்மம், ஞானமென்னும் மார்க்கங்களால் ஏன் எளிதாக முக்தியடைய முடியாது?

விடை :— கர்மத்தில் லோபமும், அதனாற்பாபமும், அதை நிவர்த்திப்பதற்கு ப்ராயச்சித்தமும், ஞானத்திற்கு இந்திரிய நிக்கிரகமுதலியவைகளும் வேண்டியதாகவிருப்பதால் அவைகளால் எளிதாக முக்தியடையமுடியாது.

வினா : — 635. ஐயா! இவ்வுலகத்திலுள்ள ஸ்திரீகளை மணிமந்திர ஔஷதங்களால் வசியப்படுத்துவதுபோல், பரலோகத்திலுள்ள முக்தியென்னும் ஸ்திரீயை எந்தெந்த மணிமந்திர ஔஷதங்களால் வசியப்படுத்தலாம்?

விடை :— அப்பா! ருத்ராக்ஷம், துளஸிமணியென்ற மணிகளாலும், பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் என்ற மந்திரங்

களாலும், விபூதி, கோபிசந்தனம் என்றஔஷதங்களாலும் அந்தப்பரலோகத்திலுள்ள முக்தியென்னும் ஸ்திரீயை வசியப்படுத்தலாம்.

வினா: — 636. சிலபக்தர்கள் சிலகாலம்வரை பக்திசெய்தும் முக்தியடையாமல் முன்போற் பின்னும் இவ்வுலகவியாபாரமான ஸம்ஸாரத்திற்கிடந்து உழலுகிறார்களே, அதென்னகாரணம்?

விடை:— அவர்கள் வேதவாக்கியங்களை நன்குணர்ந்து தங்கள் மனதைபரிபாகப்படுத்தாமல் பக்திசெய்யத்துவக்கியதாலும், செய்யவேணுமுபோல் பக்தியை நீடூழிகாலமாகச் செய்யாததினாலும், உலகப்பற்றை யொழித்து ஞானத்வாரா முக்தியடையமுடியாமல் முன்போற் பின்னும் உலகஸம்ஸாரத்திற்கிடந்து உழலுகிறார்கள்.

வினா: — 637. வேதவாக்கியங்களை நன்குணர்ந்து மனதைபரிபாகப்படுத்துகிறவிதம் எவ்விதம்?

விடை:— நாம்யாரென்றும், நமக்கேன்ஜனன மரணங்களேற்படுகின்றனவென்றும், உலகமும் அதன்ஸுகமும் நித்தியமா, அல்லது அநித்தியமாவென்றும் சங்கைசெய்து, அவைகளின் வாஸ்தவத்தை விசாரித்தறிவதேவேதவாக்கியங்களை நன்குணர்ந்து மனதைபரிபாகப்படுத்துகிற விதமாம்.

வினா: — 638. மேற்சொன்ன மார்க்கங்கள் ஞானமார்க்கங்களல்லவா? அவைகளை இந்தபக்திமார்க்கத்தில் அநுஸரிக்கச் சொல்லலாமா?

விடை:— மேற்சொன்ன மார்க்கங்கள் ஞானமார்க்கங்களாகவிருந்தாலும், முக்தியானது ஞானத்வாரா அடையவேணுதாகவிருப்பதால் மேலேசொன்ன ஞானமார்க்கங்களை இந்தபக்திமார்க்கத்தில் அநுஸரிக்கச் சொல்லலாம்.

வினா: — 639. ஆனால், பக்திமார்க்கத்திற்கும் ஞானமார்க்கத்திற்கும் அதிகவித்தியாஸமில்லையோ?

விடை:— இல்லை.

வினா: — 640. பக்திமார்க்கஞ்சிறந்ததா? ஞானமார்க்கஞ்சிறந்ததா?

விடை:— ஞானமார்க்கமேசிறந்தது.

வினா: — 641. இந்தபுக்திமோக்ஷத்தை சிரத்தையுடன் அனுஷ்டிக்கிறவர்கள் அந்தர்யாமியாகவிருக்கிற ஜகதீசுவரனுக்கு எவ்விதமாகபவிக்கிறார்கள்?

விடை:— பரமஆப்தர்களாகபவிக்கிறார்கள்.

வினா: — 642. இதற்குப்பிரமாணம் யாது?

விடை:— கீதையேபிரமாணம்.

வினா: — 643. ஐயா! பக்தர்கள் நான்குவிதமானபதவிகளையடைகிறார்களெனக்கூறுகிறார்களே, அவைகள் எவை?

விடை:— அப்பா! பக்தர்கள் நான்குவிதமானபதவிகளையடைகிறார்கள். அவைகளாவது, ஸாலோக்கிய, ஸாமீப, ஸாரூப, ஸாயுஜ்யமென்றவைகளாம்.

வினா: — 644. ஸாலோக்கியபதவியாவதென்ன?

விடை:— பக்தர்களால் ஆராதிக்கப்பட்டதெய்வங்களுக்குரிய கைலாஸம், வைகுண்டமாகிய ஸ்தலங்களில்வஸிப்பதே ஸாலோக்கியபதவியாம்.

வினா: — 645. எவர்கள் இந்தப்பதவியைஅடைந்திருக்கிறார்கள்?

விடை:— சிறுத்தொண்டர், அஜாமளன்முதலியவர்கள் இந்தப்பதவியைஅடைந்திருக்கிறார்கள்.

வினா: — 646. ஸாமீபபதவியாவதென்ன?

விடை:— கைலாஸ வைகுண்டங்களிலுள்ள ஈசுவராதிகளுடையஸமீபத்தில்வஸிப்பதே, ஸாமீபபதவியாம்.

வினா: — 647. இந்தப்பதவியை எவர்கள்அடைந்திருக்கிறார்கள்?

விடை:— நந்திகேசுவரர், கருடாழ்வார்முதலியவர்கள் அடைந்திருக்கிறார்கள்.

வினா: — 648. ஸாரூபபதவியாவதென்ன?

விடை:— தாங்கள்ஆராதிக்கின்ற மூர்த்திகளின்ஸ்வரூபங்களைத் தாங்களுமடைவதே ஸாரூபபதவியாம்.

வினா: — 649. இந்தப்பதவியை எவர்கள்அடைந்திருக்கிறார்கள்?

விடை:— ஞானிகள் அடைந்திருக்கிறார்கள்.

வினா: — 650. ஸாயுஜ்யபதவியாவதென்ன?

விடை:— நீரிற்கலந்தஉப்பைப்போல் அந்தந்தஈசுவராதிகளின் ஸ்வரூபத்தில்ஐக்கியமடைகிறதேஸாயுஜ்யபதவியாம்.

வினா: — 651. இந்தப்பதவியை எவர்கள்அடைந்திருக்கிறார்கள்?

விடை:— விதேகமுக்தர்கள் அடைந்திருக்கிறார்கள்.

---

## ஞானயோகம்.

வினா:—652. ஐயா! ஞானயோகமென்பது யாது?

விடை:— அப்பா! ஞானயோகமென்பது, ஜீவேசுவரஜக்த்தாகியவைகளை வேதாந்தசாஸ்திரத்தாலும், ஸ்வானுபவமுடைய பெரியோர்களாலும் விசாரித்தறிந்து, அவைகள்மூன்றும் மூன்றுவஸ்துக்களல்லவென்றும், ஏகமேவாத்வைதம்பிர்மமென்ற வாக்கியப்படி உள்ளது ஒன்றேயென்றும், அதுதான் பிர்மமென்றும் நிதித்தியாஸனம்செய்து, தான் அந்த ஸ்வதந்திரதத்துவமாயும் ஸத்தியமாயும் உள்ளபிர்மத்தில் ஐக்கியமடையக்கருதி வேதோக்தமானகர்மங்களை ஈசுவரார்ப்பணமாகச் செய்வதையொத்த மார்க்கங்களாம்.

வினா:—653. இந்தக்ஞானத்தினால் எவைகளெல்லாம் நசிக்கின்றன?

விடை:— இந்தக்ஞானத்தினால் ஸகலபந்தங்களும்நசிக்கின்றன.

வினா:—654. அந்த பந்தநாசத்தால் யோகிஅடைகின்ற பிரயோஜனம் யாது?

விடை:— இவ்வுலகத்தை மாயாமயமாகவும் அற்பமாகவும்கருதி மோக்ஷமடைவதே யோகிஅடைகின்றபிரயோஜனம்.

வினா:—655. இதன் விபரங்களைப்பற்றி எவ்விடத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன?

விடை:— இதன் விபரங்களைப்பற்றி ஞானகாண்டத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

---

## சிரவணமனனாதிகள்.

வினா:—656. ஐயா! இஃதிருக்கட்டும். முன் உட்ப்ரபஞ்சத்தின் வரலாற்றிற்கூறப்பட்ட சிரவணம்என்பது யாது?

விடை:— ஞானஸித்தியின்பொருட்டு குருமுகமாகத் தத்துவார்த்தங்களைக்கேட்பதே சிரவணமாம்.

வினா:—657. மனனமென்று சொன்னீர்களே, அதென்ன?

விடை:— குருமுகமாகக் கேட்டறிந்த தத்வார்த்தங்களை யுக்தியினாலேஆலோசித்து, அதை எப்பொழுதும் சிந்தனைசெய்துகொண்டிருப்பதே மனனமாம்.

வினா:—658. நிதித்தியாஸனமாவதென்ன?
விடை:— கர்மக்ருரோதாதிகளைவிட்டுவிட்டு அஹம் பிர்மாஸ்மி யென்கிற நிரந்தரசிந்தையைப்பெறுவதே நிதித்தியாஸனமாம்.

வினா:—659. ஸமாதியென்பது என்ன?
விடை:— ஏகாக்ரசித்தத்துடன் பிர்மத்தில் லயமடைகிறதே ஸமாதியாம்.

வினா:—660. பிரமாணமாவது என்ன?
விடை:— சுருதிஸ்மிருதிகளால் விதிக்கப்படுகின்ற விதியே பிரமாணமாம்.

வினா:—661. அப்பிரமாணமென்பது என்ன?
விடை:— சுருதிஸ்மிருதிகளால் விதிக்கப்படாத விதியே அப்பிரமாணமாம்.

வினா:—662. பிரமாணத்தின் நிச்சிதமாவது யாது?
விடை:— இது வேதவிதிதான் என்று நிச்சயிப்பதே பிரமாணத்தின் நிச்சிதமாம்.

---

## தாபத்திரயம்.

வினா:—663. இவை இருக்கட்டும். முன் தாபத்திரயமென்று சொன்னீர்களே, அதென்ன?
விடை:— ஆதியாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம்என்பவைகளே தாபத்திரயமாம்.

வினா:—664. இதில் ஆதியாத்மிகம்என்பது யாது?
விடை:— சரீரத்திலிருந்து உத்பவிக்கின்ற வியாதி முதலியவற்றாலும், தன்ஸந்ததிகளாலும், கொடியமிருகங்களாலும், பேய்பிசாசுகளாலும், திருடர், ராக்ஷதர் முதலியவர்களாலும் ஸம்பவிக்கின்ற துக்கங்களாம்.

வினா:—665. ஆதிதெய்விகம் என்பது யாது?
விடை:— கருத்தரித்தது முதல் பிறந்து வளர்ந்து நரைதிரையாதி வார்த்தகதசையை அடையும்வரையில் நேரிடுகின்றனவும், துர்மரணம், நாசம்முதலியவற்றால் நேரிடுகின்றனவுமாகிய துக்கங்களாம்.

வினா: — 666. ஆதிபௌதிகம்என்பது யாது?

விடை:— ஜலம், வெயில், மழை, காற்று, இடி, மின்னல், பனி, கோவில், கோபுரங்கள், ப்ராகாரங்கள், மண்டபங்கள், சுவர்கள்முதலிய அசேதனங்களால் ஸம்பவிக்கின்ற துக்கங்களாம்.

வினா: — 667. இந்ததாபத்திரயதுக்கங்களையனுபவிக்கின்றவை எவை? சரீரமா? ஆத்மாவா?

விடை:— இந்ததுக்கங்களை சரீரமும் ஆத்மாவும் அனுபவிக்கவில்லை. ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரங்களோடே கூடின ஜீவன் அனுபவிக்கின்றான்.

---

## உட்ப்ரபஞ்சத்தின் இதரவிருத்திகள்.

வினா: — 668. மனோவியாதியென்பது யாது?

விடை:— உயிர்ச்சேதம் பொருட்சேதமுதலிய விபத்தினால் ஏற்படுகின்ற துயரத்தை ஸகிக்கமுடியாமல் மனோதாபமடைகிறதே மனோவியாதியாம்.

வினா: — 669. வியாதியென்பது யாது?

விடை:— ஸ்தூலசரீரத்தை அதிஷ்டித்துக்கொண்டு வரப்பட்ட க்ஷயரோகம், சீதகரம், தாபஜ்வரம், குன்மம், தலைவலிமுதலிய நோய்களாம்.

வினா: — 670. ஆரோக்கியம்என்பது யாது?

விடை:— யாதொருவிதமான வியாதிகளும் வேறுவிதபீடைகளும் ஏற்படாமல் ஸந்தோஷமனஸுடன் த்ருடசரீரியாகவிருப்பதே ஆரோக்கியமாம்.

வினா: — 671. பக்தியென்பது யாது?

விடை:— மாதா, பிதா, குரு, தெய்வம், ஸத்ஜனங்கள்முதலானோரிடத்தில் பாராட்டும் விசுவாஸமே பக்தியாம்.

---

## வைராக்யம்.

வினா: — 672. வைராக்யம்என்பது யாது?

விடை:— இகஅமுத்திரார்த்த பலபோக விராகநியாயப்படி இந்தலோகத்தில் கர்மத்தினால் ஜனித்துவரப்பட்ட அநித்தியமான ஸ்ரக்சந்தனவனிதாதி விஷயபோகங்களி

னும், பரலோகத்தில் கர்மஜன்னியத்தால்வரப்பட்ட அநித்தியமான ரம்பாஸம்போக அமிர்தாதிகளிடத்தி லும், வாந்திசெய்த அசனமலமூத்திராதிகள்போல் ஆசையில்லாமல் இந்தஜகத்திற்குக் காரணகர்த்தா வாகிய ஈசுவரனிடத்தில் பிரீதியாகவிருப்பதே வைராக்யமாம்.

வினா: —673. இந்தப்பிரகாரம் வைராக்ய மடைவதென்றால் மிகவும் கஷ்டமல்லவா? பரமாத்மஸ்வரூபரும்மஹாஞானியுமாகிய யாக்ஞவல்கியரே அவருடையபிரதிவாதிகளாகிய உஸத்தாக்கோளர்களை கல்வியில் ஜயித்து கீர்த்திபெறக்கருதினரென்றும், அதனால் அவருக்கு வித்தியாமதம் உண்டென்றும், பிரகதாரண்யசுருதியினால் தெரியவருவதுபோல், இன்னும்ஓர்தத்துவசாஸ்திரத்தினால் அவர் அனேகம் பிர்மவித்துக்களால் நிறைந்திருக்கப்பட்ட ஜனகராஜன்ஸபையில் தனக்கு ஸ்வர்ணபரணத்தால் அலங்கரிக்கப்பட்ட அனேகம் பசுக்களிடத்தில் அபேக்ஷையிருக்கிறதாகக்கூறி அவைகளைப்பெற்றதினால் அவருக்குதனத்தில் ஆசை உண்டென்றும், அன்றியும்இவைகளைப்பெறும் பொருட்டு மற்றபிர்மவித்துக்களைப்பார்த்து நமஸ்காரம்பண்ணுகிறேனென்று பரிகாஸமாகச் சொன்னபடியினாலே அவருக்குக் கர்வம் உண்டென்றும், அச்சபையிலுள்ள மற்றபிர்மவித்துக்கள் தாங்கள் அடைகின்ற கோதானத்தை யாக்ஞவல்கியர் அபகரித்துக் கொண்டாரேயென்று நினைத்தபடியால் அந்தபிர்மவித்துக்களுக்கு அஸூயையொழியவில்லையென்றும், இந்த அஸூயையால் யாக்ஞவல்கியரிடம் வேதாந்தமரியாதையைத் தாண்டி வேதாந்தவாதஞ்செய்த அவர்களில் ஒருவராகிய சாகல்லியனை இந்தயாக்ஞவல்கியர் சபித்தாரென்றும், அதனால் அவருக்குக் குரோதமும் பிர்மஹத்தியு முண்டென்னும் சங்கைகள் ஏற்படுமென்றும் தெரியவருவதால், நாம் எவ்விதம் வித்தையில் அகர்வமும், நிந்தையில்ஸகிப்பும், தனதான்ய புத்திரதாராதிகளில் உபேக்ஷையும், கோபத்திற் கோபமும், குரோதத்திற்குரோதமும் அடையமுடி

யும்? அவைகளைக் கிஞ்சிற்று தயவுசெய்து விளங்க எடுத்துரைக்கவேண்டும்?

விடை:— கஷ்டம்அநுபவியாமல் பிர்மானந்தானுபவம் ஸித்திக்குமா? ஸித்திக்காதாகையால், மேற்சொன்னபடி வைராக்யத்தைப் பின்னுற்கூறப்படும் உபாயங்களால் அடையவேண்டும். இந்தவைராக்யமானது, தத்துவக்ஞானமுண்டாகிறதற்கு முன்வேண்டியதேயன்றி, பிர்மநிஷ்டனானதற்குப் பின்வேண்டியதன்று. யாக்ஞவல்கியரோ, பிர்மத்தின் ஸாக்ஷாத்காரத்தையடைந்தவர். அவர் தனக்குக் காமக்குரோதாதிகள் உண்டானதாகவே யறியவில்லை. ஆகையால் அவருக்கு ஏற்பட்ட காமக்குரோதாதிகளும், மற்றபிர்மவித்துக்களுக்கேற்பட்ட அஸூயையும் அயுக்தமானவையல்லவென்பது சுருதியின்கோட்பாடாகவிருக்கின்றதென்பதை யறிந்துகொள்ளவேண்டியது.

வினா:—674. இவ்விதம் எந்தசுருதிகளிற் கூறப்படுகின்றன?

விடை:— கௌஷதகிஉபநிஷத்திலும், சேஷாரியையிலும்கூறப்படுகின்றன.

வினா:—675. பிரஸ்தாபவிஷயத்தைப்பற்றி கௌஷதகி உபநிஷத்தின் முக்கியமான கருத்தென்ன?

விடை:— பிர்மக்ஞானிக்கு மாதா, பிதா, கர்பசிசு இவர்களின்வதத்தினாலும், ஸ்வர்ணாபகாரத்தினாலும், இதரபாபகர்மங்களாலும் யாதொருபலமும் இல்லையென்பதே அவ்வுபநிஷத்தின் முக்கியமானகருத்து.

வினா:—676. சேஷாரியையின் முக்கியமான கருத்து என்ன?

விடை:— பாமார்த்தமான பிர்மஸ்வரூபத்தையறிந்தவன் லக்ஷம் அசுவமேதயாகமும் லக்ஷம் பிர்மஹத்தியும் பண்ணினபோதிலும் அதனால் ஏற்படக்கூடியபுண்ணியபாபங்கள் அவனுக்கு ஸம்மந்தமில்லையென்பதே அந்த சேஷாரியையின் முக்கியமான கருத்து.

வினா:—677. ஆனால்சரிதான். பிர்மநிஷ்டர்களின்விஷயத்தில் ஏற்பட்டசங்கை நிவர்த்தியாயிற்று. இதுபோல் இன்னும் வித்யா கர்வம்முதலிய துற்குணங்கள் அற்றுப்

போகும்உபாயங்கள் எவைகளென்னும் சங்கைகளை யும் நிவர்த்திசெய்யவேண்டும்.

விடை:— ஆகா, அப்படியே. உனக்கு ஏற்பட்டிருக்கின்ற அவ்விதமான சங்கைகளையும் நிவர்த்திசெய்கிறேன்.

வினா:—678. அவ்விதமாயின், வித்யாகர்வமடங்குவதற்குரிய உபா யம் யாது?

விடை:— வல்லவனுக்குவல்லவன் வையகத்தில்உண்டுஎன்னும் வாக்கியத்தைமறவாமலிருக்கும் விவேகமே வித்தி யாகர்வம் அடங்குவதற்குரிய உபாயமாம்.

வினா:—679. வல்லவனுக்குவல்லவன் வையகத்தில் உண்டுஎன்பத ற்கு ஏதேனும் நிதர்சனங்கள் இருக்கின்றனவா?

விடை:— எத்தனையோ நிதர்சனங்கள் இருக்கின்றன. முன் பிரவாகணன்என்ற ராஜாவால் உத்தாலகரின்குமார னும் வித்யாகர்விஷ்டனுமான சுவேதகேதுதனக்கு பஞ்சாக்னி வித்தைதெரியாமல் அவமானமடைந்த தும், வாலாகியென்கிற மற்றொருவித்யாகர்விஷ்டன் ஸ்ரீ காசியில் அஜாதசத்துருவென்கிற ராஜாவோடே வாதம்செய்து மானங்கெட்டதும், உஷத்தாக்கோளர் முதலியவர்கள் யாக்ஞவல்கியரால் ஜயிக்கப்பட்டது மே போதுமான நிதர்சனங்களாகவிருக்கின்றன.

வினா:—680. ஸரிதான். வித்யாகர்வமடங்குவதற்குரிய உபாயம் தெரியவந்தது. ஒருவன் மற்றொருவனை நிஷ்காரண மாக நிந்தையோ அவமானமோ செய்யுமிடத்து அவன் அவைகளை ஸகிப்பதற்குரிய உபாயம் யாது?

விடை:— ஒருவன் மற்றொருவனை நிஷ்காரணமாக நிந்தையோ அவமானமோசெய்வதினால் இவன் அடைகின்ற பிர யோஜனம் யாதென்பதை முதலாவது ஆலோசனை செய்யவேண்டும். அவ்விதம் ஆலோசிக்கிறபொழுது அதனால் இவன் அடைகின்றபிரயோஜனம் ஸந்தோஷ மென்று புலப்படும். இந்த ஸந்தோஷத்தை உலகத் தில் ஒருவன் மற்றொருவனுக்கு உண்டுபண்ணும் பொருட்டு தன்னாலும் தன்மூதாதைகளாலும் மெய்வ ருத்தத்துடன் அரும்பாடுபட்டு ஆபத்துக்குதவு மென்று சேகரித்துவைக்கப்பட்டிருக்கின்ற தனங்

களைச் செலவிடுவது வழக்கம். அவ்விதமிருக்க, மேற் சொன்ன மற்றொருவனுக்கு யாதொருபிரயாஸையு மன்றி அவனால் அவனைநிந்தித்தவன் ஸந்தோஷமடைகிறதென்றால், இதனால் அந்தமற்றொருவனுக்கு இதனிலும் பதின்மடங்கதிகமான ஸந்தோஷமல்லவா ஏற்படவேண்டுமென்ற விவேகமே நிந்தையையும் அவமானத்தையும் ஸஹிப்பதற்குரிய உபாயமாம்.

வினா:—681. நல்லது. தனாபேக்ஷையை நிவர்த்திப்பதற்குரியஉபாயம் யாது?

விடை:— தனத்தைத்தேடுகையிலும் காப்பாற்றுகையிலும் விரயம்செய்கையிலும் துக்கமேயேற்படுவதால், ஸாக்ஷாத் துக்கமாகத்தோன்றுகிற அந்த துக்காதிஷ்டானமான தனத்தைச் சுடவேண்டுமென்றவிவேகமே தனாபேக்ஷையை நிவர்த்திப்பதற்குரிய உபாயமாம்.

வினா:—682. ஐயா! கோபம்தணிவதற்குரிய உபாயம் யாது?

விடை:— அப்பா! கோபமானது இஹபரலோகங்களில் அடையத்தக்க சதுர்விதபுருஷார்த்தங்களையுங்கெடுத்து நரகத்தை விளைவிப்பதாகவிருப்பதால், இனிமேல்அது தன்னிடம்அணுகாதபடி அதைக் கோபிக்கிறவிவேகமே கோபம்தணிவதற்குரிய உபாயமாம்.

வினா:—683. சதுர்விதபுருஷார்த்தங்களாவதென்ன?

விடை:— தர்மார்த்தகாமமோக்ஷ மென்றவைகளே சதுர்வித புருஷார்த்தங்களாம்.

வினா:—684. தன்னைக்கோபிக்கிறவர்களைத்தான் என்னசெய்யவேண்டும்?

விடை:— அனேகம்வந்தனங்கள் செய்யவேண்டும்.

வினா:—685. எதற்காக அனேகம்வந்தனங்கள் செய்யவேண்டும்?

விடை:— அவர்களின் கோபத்தினால் தன்னிடமிருக்கப்பட்ட ஸகலதோஷங்களும் நிவர்த்தியாகி இனி அவ்விதமானதோஷங்கள் ஸம்பவியாதபடி நல்லவைராக்யமேற்படுவதால்அதன்பொருட்டு அவர்களுக்கு அனேகம் வந்தனங்கள்செய்யவேண்டும்.

வினா:—686. மாதாஸையையொழிப்பதற்குரிய உபாயம் யாது?

விடை :— அவர்களின் ஸ்தூலசரீரங்களின் தத்துவங்களை ஆராய்ந்துபார்க்கிற விவேகமே அம்மாதாசையை ஒழிப்பதற்குரிய உபாயமாம்.

வினா : — 687. அவர்களின் ஸ்தூலசரீரங்கள் அப்படி என்னென்ன தத்துவங்களை அடங்கப்பெற்றவைகளாக விருக்கின்றன ?

விடை :— சர்மம், உதிரம், மாம்ஸம், சனுயு, அஸ்தி, மச்சையென்ற தத்துவங்களை அடங்கப்பெற்றவைகளாக விருக்கின்றன.

வினா : — 688. அதனால் என்ன கெட்டுப்போயிற்று? ஒரு கோமளாங்கியானவள் மேருபர்வதசிகரத்தில் விளங்கா நின்ற கங்காப்பிரவாஹத்தைப்போல் தன் ஸ்தனோபாரத்தின்மேல் ஓர் அழகான முத்தாஹாரத்தை யணிந்துகொண்டு புருஷனிடம்வந்து தாமரைமலரின் இதழையொத்த தன்நேத்திரங்களால் ஜாடைசெய்து தன்னை மதனமோஹாமிருத ஜாலவினோதமென்னும் கலவியால் திருப்திபண்ணி ரக்ஷிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறபொழுது அந்தப்புருஷனுக்கு மேற்சொன்னதத்துவவிசாரணையால் அவள்மீதுஏற்படுகின்றமயலானது ஒழிந்துவிடுமா ?

விடை :— ஒழிந்துவிடும்.

வினா : — 689. அது எப்படி ?

விடை :— அது எப்படியென்றால், எலும்பு, நரம்பு, மாம்ஸம் முதலியவற்றாற்கட்டப்பட்டு, தோலினால்மூடப்பட்டு, மரப்பாவையை யொத்துவிளங்குகின்ற அம்மாதின் நேத்திராதிகளிலுள்ள மாம்ஸம், இரத்தம், கண்ணீர், பூளை, நாற்றமுதலியவைகளை நன்குணர்ந்து வெறுப்படையாமல், அந்நேத்திரம், ஸ்தனோபாரமுதலியவைகளைக்கண்டு கரிவிளமலராகவும், தாமரைமலரின் இதழ்களாகவும், ஸ்வர்ணகும்பங்களாகவும், செவ்விளநீர்களாகவும் கருதி மயக்கமடைவது அவிவேகசிரோமணியான காமியின்ஸ்வபாவமென்று தெரிந்துகொள்வதால் ஒழிந்துவிடும்.

வினா:—690. விவேகியானவன் மேற்சொன்னவிஷயத்தை எவ்வாறுகக் கருதியிருக்கின்றான்?

விடை:— விவேகியானவன் மேற்சொன்னவிஷயத்தைத் தன் மதியால் ஆராய்ந்துபார்த்து அது மிகவும் ரஸாபாஸமென்று கருதிஇருக்கின்றான்.

வினா:—691. அவனுக்கு அவ்விஷயத்தில் இன்னும் வேறுஎன்னென்ன அபிப்ராயங்கள் உண்டு?

விடை:— அவனுக்கு ஸ்தனோபாராதிகள் மேருபர்வதமுதலியவைகளாக வர்ணிக்கப்படுவது காமியின் பொருட்டேயாகுமென்றும், அப்படிவர்ணிக்கப்படுகின்ற ஸ்தனோபாராதிகள் இன்னும் சிலநாளில் பட்டணத்துபிள்ளையார் வாக்கியப்படி காட்டிலோ, செடியிலோ, அல்லது கடற்புரத்திலோ, நாய், நரி, பேய், கழுகு முதலியவைகளுக்கு உணவுபொருள்களாக பக்ஷிக்கப் போகிறதென்றும் என்ற அபிப்ராயங்கள் உண்டு.

வினா:—692. ஐயா! ஸ்திரீயினுடைய அவயவத்தில் எந்த அவயவம் மங்களகரமானது?

விடை:— அப்பா! ஸ்திரீயினுடைய அவயவத்தில் எந்த அவயவம்தான் மங்களகரமானது? எல்லாம் அத்தியந்தம் அமங்களம்தான்.

வினா:—693. ஆனால், புருஷனானவன் ஸ்திரீயினிடத்தில் காடாலிங்கன முதலியவற்றால் ஸம்போக ஸாம்பராஜ்யத்தைப் பெறக்கருதி உருண்டு திரண்டு வெகுஉன்னதங்களாக விளங்குகிற ஸ்தனோபாரங்களையும், வேலையொத்தவிழிகளையும் கண்டு மயங்குவது விவேகமல்லவோ?

விடை:— ஆம், விவேகமல்ல.

வினா:—694. புருஷன் மாதராசையை அகற்றிவிடுவதினால் அவன் அடைகின்ற பிரயோஜனம் யாது?

விடை:— அவனுக்கு இஹலோகத்திலுள்ள இதரவிஷயங்கள் தானாகவே அற்றுப்போகிறதுதான் அவன் அடைகின்ற பிரயோஜனம்.

வினா:—695. இவ்வாசையை ஒழிக்காதவிஷயத்தில் என்னென்ன கெடுதிகள் ஸம்பவிக்கின்றன?

விடை:— துக்கம், நரகம்முதலியகெடுதிகள் ஸம்பவிக்கின்றன.

வினு:—696. ஆனதால், இந்தவிவேகத்தைப் புருஷன் ஒருபொழுதும் மறக்கலாகாதோ?

விடை:— மறக்கலாகாது.

வினு:—697. புத்திராபேக்ஷையை நிவர்த்திப்பதற்குரிய உபாயம் யாது?

விடை:— புத்திரன்ஜனியாவிடின் புத்திரனில்லையேயென்றும், அதன்பிறகு ஜனிக்கும்பொருட்டுப் பலவாறனகர்மங்களையும்தர்மங்களையும்செய்யப் போதுமானதனஸ்திதி இல்லையேஎன்றும், ஒருக்கால் அவ்விதமின்றி கர்மவசத்தால் கர்பமானால் எங்கே பாதியில் பிண்டம் கரைந்துபோய்விடுமோ வென்றும், பிரஸவகாலம்நெருங்கிவிட்டால் ஸுகப்பிரஸவமாக வேண்டுமேயென்றும், ஜனித்தபிற்கு வ்ரல்க்ரகபீடை, ரோகம்முதலியவை ஏற்படலாகாதேயென்றும், குமாரனுல்அசல் வீட்டுப்பிள்ளைகளுடன் சண்டைசச்சரவுகள் செய்யத்தொடங்குகிறனேயென்றும், அதை நிவர்த்திக்கக்கருதி வித்யாப்யாஸம்செய்வித்தால் நிரக்ஷரகுக்ஷியாகப்பவியாமல் இருக்கவேண்டுமேயென்றும், உபனயனனந்தரம் அப்புதல்வனுக்கு விவாஹம்செய்யத் தனக்குத்தக்க அந்தஸ்தில்லையேயென்றும், யௌவனதசையில் அவனுக்குப் பரதாராகமனம் ஸம்பவிக்கலாகாதேயென்றும், ஸந்ததிகள்விருத்தியானல் அன்னவஸ்திராதிகளை அண்ணல் அருள்செய்யவேண்டுமேயென்றும், அண்ணலருளால் போக்பாக்கியங்கள் குறைவில்லாதிருக்கிறபொழுது கர்மவசத்தால் ஸந்ததிகளுக்குமரணம்நேர்ந்தால், தனக்கு அவ்விதம்ஸம்பவிக்கலாமாவென்றும், இதுபோல் இன்னும்பலவித துக்கங்கள் புத்திரனுல் ஏற்படுவதை ஆராய்ச்சிசெய்வதேபுத்திராபேக்ஷையைநிவர்த்திப்பதற்குரிய உபாயமாம்.

வினு:—698. ஐயா! புத்திரனில்லாதவனுக்குப்புண்ணியலோகமில்லையென்கிறார்களே, அவ்விதமிருக்க, தாங்கள் எனக்கு இவ்விதமுபதேசிக்கிற காரணம் யாது?

விடை:— அப்பா! புத்திரனில்லாதவனுக்குப் புண்ணியலோக மில்லையென்பது உண்மைதான். ஆனால், அது வியாவகாரிக விஷயமேயன்றி பாரமார்த்திகவிஷயமல்ல. பாரமார்த்தத்தையறிய விரும்புகிறவனுக்குப் புத்திரனால் புண்ணியலோகம் கிடைக்கப்போகிறதில்லையென்பதை யறிந்துதான் நான் உனக்கு இவ்விதமுபதேசிக்கின்றேன்.

வினா:—699. இதுபோல் இந்த உபதேசமானது இதற்கு முன் யாரால் யாருக்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றது?

விடை:— இந்தஉபதேசமானது இதற்குமுன் வஸிஷ்டமஹாரிஷியினால் ஸ்ரீராமசந்திரமூர்த்திக்கு உபதேசிக்கப் பட்டிருக்கின்றது.

---

## உட்ப்ரபஞ்சத்தின் முன்தொடர்ச்சி.

வினா:—700. ஐயா! வைராக்யமானது மேற்சொன்ன உபாயங்களால் ஸித்திக்குமென்பதைத் தெரிந்துகொண்டேன். இதுபோல் முன் உட்ப்ரபஞ்சத்தில் பிரஸ்தாபிக்கப் பட்ட மந்தம்என்பது யாதென்பதைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற விருப்பமிருக்கின்றது. ஆதலின், அதைத்தயவுசெய்து எடுத்துரைக்கவேண்டும்?

விடை:— அப்பா! இதுசெய்யத்தக்கது, இது செய்யத்தகாததென்பதை அறியாமற் செய்கின்ற சிற்றறிவுதான் மந்தமென்று நீ அறிந்துகொள்ளவேண்டியது.

வினா:—701. தீவரம் என்பது யாது?

விடை:— விஷயங்களை நன்றாய்ப் பரியாலோசனைசெய்து அவற்றிலுள்ள குணகுணங்களைச் சீக்கிரத்தில் பகுத்தறியும் நுண்ணறிவே தீவரமாம்.

வினா:—702. ஸகுணோபாஸனையாவது யாது?

விடை:— மனோவாக்குக்காயங்களால் அறியப்படாத ஜகதீசுவரனுக்கு நாமரூபங்களைக் கற்பித்துக்கொண்டு அவரை வழிபடுதலே ஸகுணோபாஸனையாம்.

வினா:—703. நிர்குணோபாஸனையாவது யாது?

விடை :— நிர்குணோபாஸனையென்பது, குணரஹிதமாயும், ஸச்சிதானந்தரூபமாயுமுள்ள ஈசுவரன் நானேயென்றும், தனக்கு அன்னியமாக வேறொன்றில்லை யெனக்கருதி தியானிப்பதேயாம்.

வினா :—704. மனோநாசமாவதென்ன ?

விடை :— மனோநாசமென்பது, சலனஸ்வபாவமுடைய மன்னை பட்டிமாட்டைப்போல் அடிக்கடி ஸங்கற்பங்களைக் கோரிக்கொண்டு மறுபடியும் திருப்பினவிஷயங்களிற் செல்லவிடாமல் அதை ஒருவழிப்படுத்தி ஸ்ரீ ஸத்குரு கடாக்ஷத்தினால் தனக்கு அன்னியமாக யாதொருவஸ்துவுமில்லை யென்றறிந்து அப்படி அறிகின்ற அறிவினாலும் வைராக்யத்தினாலும் சித்த நிரோதமடைவதாம்.

வினா :— 705. வாஸனாநாசமாவதென்ன ?

விடை :— வாஸனாநாசமென்பது, லோகவாஸனை, தேகவாஸனை, சாஸ்திரவாஸனையாகிய மூன்றையும் முன்போல்பழக்க வழக்கங்களில் பின்னும் அனுஷ்டித்துவாராமல்மாக் கடித்து நசிக்கச்செய்வதாம்.

வினா :— 706. லோகவாஸனையென்பது யாது ?

விடை :— எல்லோரும் தன்னை இகழாமல் எப்பொழுதும் புகழ்ந்து பேசிக்கொள்ளவேண்டுமென்று எண்ணுகின்ற அபிமானமே லோகவாஸனையாம்.

வினா :— 707. தேகவாஸனையென்பது யாது ?

விடை :— தீர்க்காயுளைப்பெற்றவனாயும், ஆரோக்கியமுள்ளவனாயும், அழகுபொருந்தினவனாயும்இருக்கவேண்டுமென்று எண்ணுகின்ற அபிமானமேதேகவாஸனையாம்.

வினா :— 708. சாஸ்திரவாஸனையென்பது யாது ?

விடை :— வேதாந்தசாஸ்திரத்திற்கு அன்னியமான நூல்களைக்கற்று, அவற்றின் அர்த்தக்ஞானத்தில்தேர்ந்து, அவைகளில் கூறுகின்ற அனுஷ்டானத்துடனிருக்க வேண்டுமென்று எண்ணுகின்ற அபிமானமே சாஸ்திரவாஸனையாம்.

வினா: —709. ஆனால், இந்தசாஸ்திரவாஸனையென்பது வேதாந்த சாஸ்திரத்திற்குமட்டும் இல்லையோ?

விடை:— வேதாந்தசாஸ்திரத்திற்கும் உண்டு. ஆயினும், அந்நூல் மோக்ஷஸாதன ஹேதுவாகவிருப்பதால், மற்ற சாஸ்திரங்களுடன் சேர்த்துக்கொள்ளப்படவில்லை.

வினா: —710. சாஸ்திரவாஸனை யற்றவிடத்தில் வேதாந்தசாஸ்திர வாஸனைமட்டும் இருக்கலாமா?

விடை:— கூடாது. அந்தசாஸ்திரத்தை அப்பியாஸம்செய்து அநுபவம்ஸம்பாதித்த முமுக்ஷுக்கள் அந்தசாஸ்திரவாஸனையையும் விட்டுவிடவேண்டும்.

வினா: —711. ஐயா! இது இருக்கட்டும். முன் விதேகமுக்தியென்று சொல்லப்பட்டதே, அதென்ன?

விடை:— விதேகமுக்தியென்பது, ஸ்தூலஸூக்ஷ்மகாரணமாகிய சரீரங்கள்நசித்தபிறகு அடையும்முக்தியாம்.

வினா: —712. ஜீவன்முக்தியென்பது யாது?

விடை:— மூன்றுவித சரீரங்களுமிருக்கிற பொழுது, தான் அவைகளைமாந்து அடைகின்றமுக்தியே ஜீவன்முக்தியாம்.

வினா: —713. ஐயா! இப்படிப் பலவித நாமரூபகுண கர்மவிகாரங்களான சக்திக்கு ஆசிரயமாகவிருக்கிறதுதான் உட்பிரபஞ்சமோ?

விடை:— ஆம். அதுதானப்பா உட்பிரபஞ்சம்.

வினா: —714. இந்தப்பிரகாரம் வெளிப்பிரபஞ்சம் உட்பிரபஞ்சமாகியவைகள் நம்மால் அறியப்படுவதுபோல் அப்பிரபஞ்சங்களால் நாம் அறியப்படாமலிருப்பதினால் எதற்கு என்னஸித்தித்தது?

விடை:— ஆத்மாவுக்கு சித்லக்ஷணம் ஸித்தித்தது.

வினா: —715. ஆத்மாவுக்கு சித்லக்ஷணமிருக்கிறதினாலே ஆத்மா சித்ரூபம்தானோ?

விடை:— ஆம். அதற்கென்ன தடை? ஆத்மா சித்ரூபம்தான்.

வினா: —716. ஆத்மாவானது மற்றொன்றினால் அறியப்படவில்லையென்றால், ஸகலத்தையும் அறிகிறமன்தால் அவ்வாத்மா அறியப்படவில்லையா?

விடை :— மனது ஜடரூபமானதால், இதனால் அது அறியப்படு கிறதில்லை. சித்தினால்தான் மனது அறியப்படுகின் றது.

வினா : — 717. மனதானது எதனால் ஜடரூபமாயிற்று ?

விடை :— அதற்கு உத்பத்திநாசமும், ஸங்கல்பரூபமும், அளவும், கடத்தைப்போன்ற பூதகாரியமும், காமாதி விகாரங்களினால் கலங்கும் ஸ்வபாவமும், நினைப்பு, மறப்புகளும் ஏற்பட்டிருக்கிறதினால் அது ஜடரூப மாயிற்று.

வினா : — 718. மனதிற்குப் பிரகாசம் உண்டா ?

விடை :— இல்லை.

வினா : — 719. ஆனால், மனதாலறியவேண்டுமென்று கூறும் நூலின் கருத்தென்ன ?

விடை :— இதனடியிற் கூறப்படும் உதாஹரணம் தான் அதன் கருத்து.

வினா :— 720. அதென்ன ?

விடை :— ஸ்புடம்போடப்பட்ட ஸ்வர்ணத்தின் பிரகாசத்திற்கு அக்னி உதவியாக விருந்தாலும், அவ்வக்னியானது ஸ்வர்ணத்திலுள்ள மலத்தைப் போக்கியதேயன்றி நிர்மலத்தைக்கொடுக்கவில்லை. அப்படி நிர் மலத்தைக்கொடுத்தது அக்னியாக விருக்குமானால், அந்தஅக்னி சமையலின்பொருட்டு அடுப்பில்வைக் கப்பட்டிருக்கின்ற பானைசட்டிகளிடத்திலும் மலத் தைப்போக்கி நிர்மலத்தைக்கொடுக்க வேண்டும். அவ் விதம் காணவில்லை. ஆனதால், அதுபோல் ஜடரூப மானமனதால் ஸ்வப்ரகாசமான சிதாத்மாவை அறிய முடியாது. மனதானது ஆத்மாகாரமாக மாறி ஆத்மா வினுடைய பிரதிபிம்பத்திற்சேர்ந்துகொண்டு அவ் வாத்மாவை மறைத்துக்கொண்டிருக்கிற அக்ஞானத் தைப்போக்கித் தன் ஆத்மா தானாகவேவிளங்குகிற தென்று அறியத்தகுந்தது.

வினா : — 721. ஐயா ! இதனால் ஆத்மாவானது மற்றொன்றால் அறியப் படத்தக்கதல்லவென்று தெரியவருகிறபடியால் அதற்கு சித்ரூபம் ஸித்தித்திருக்கிறதென்ற தீர்மானமா ?

விடை :— ஆம்.

## ஆனந்தலக்ஷணம்.

வினா :—722. ஆனந்தமென்பது என்ன ?
விடை :— ஆனந்தமென்பது ஸுகமென்று அர்த்தம்.

வினா :—723. அந்தஸுகம் எவ்விதமாகவிருக்கும் ?
விடை :— பலவிதமாக விருக்கும்.

வினா :—724. பலவிதமான ஸுகங்களுள் சிரேஷ்டமானஸுகம் எது ?
விடை :— நித்தியமாயும், நிருபாதிகமாயும், நிரதிசயமாயுமிருக்கிற பிர்மானந்தஸுகம்தான் சிரேஷ்டமானது.

வினா :—725. அந்தஸுகமானது எதற்கு ஸ்வரூபமாக பவித்திருக்கின்றது ?
விடை :— ஆத்மாவுக்கு ஸ்வரூபமாக பவித்திருக்கின்றது.

வினா :—726. ஸுகமே ஆத்மஸ்வரூபமாக பவிக்குமானால் புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலியவற்றால் ஏற்படுகின்றஸுகங்களும் அவ்வாத்மஸ்வரூபங்களாக பவிக்கவேண்டுமல்லவா ? அந்தஸுகங்கள் அவ்விதமேன் பவிக்கவில்லை ?
விடை :— புஷ்பாதிகளால் ஏற்படுகின்ற ஸுகங்கள் அநித்தியமாயும், உபாதியையுடையதாயும், அதிசயத்துடன் கூடினதாயுமிருப்பதால் அந்தஸுகங்கள் ஆத்மஸ்வரூபமாக பவிக்கவில்லை.

வினா :—727. பிர்மானந்தமானது நித்தியமென்று எதனால் ஏற்பட்டது ?
விடை :— ஜாக்ரஸ்வப்னசுஷுப்தியாகிய மூன்றுஅவஸ்தைகளிலும் நசியாதிருப்பதால் நித்தியமென்று ஏற்பட்டது.

வினா :—728. இச்சுகம் அந்தமூன்று அவஸ்தைகளிலும் நசியாதிருக்கிறதென்பதை எதனால் அறியலாம் ?
விடை :— சுருதியுக்திப்ரமாணங்களால் அறியலாம்.

வினா :—729. அப்படி நசியாமல் இருக்குமானால் அந்தஸுகம் நம்மால் ஏன் அநுபவிக்கப்படுகிறதில்லை ?
விடை :— விருத்திவிசேஷங்களால் மறைக்கப்பட்டிருப்பதினால் அநுபவிக்கப்படுகிறதில்லை.

வினா:—730. சுஷுப்தி அவஸ்தையில் விருத்தியில்லையே. அப்பொழுது துக்கநிவர்த்திமட்டும் ஏற்படுகிறதேதவிர ஸுகாநுபவம் ஏற்படுகிறதில்லை. ஆகையால் அவ்வானந்தத்தை எவ்விதம் நித்தியமென்றுசொல்லலாம்?

விடை:— இந்த அவஸ்தையிலும் ஸுகலக்ஷணம் இல்லாமலிருக்கவில்லை. அப்படிக்கில்லாமலிருந்தால் நித்திரைநீங்கியெழுந்தபுருஷன் ஸுகமாகத்தூங்கினேன் என்று சொல்லவும், தன்நித்திரைக்குபங்கம்செய்த தனக்கு ஆப்தமானகோமளாங்கியைத் தண்டிக்கவும் கூடாதில்லை. ஆனதால் நான் ஸுகமாகத்தூங்கினேனென்றுசொல்லுகிறசொல்லானது சுஷுப்தியிலிருக்கிற ஆத்மஸ்வரூபானந்தத்தின் இருப்பை விளங்கச்செய்கின்றது. ஆனதால் அவ்வானந்தத்தை நித்தியமென்றுகூற ஒருவிதமான தடையுமில்லை.

வினா:—731. இதனால் ஸர்வத்திராளும் ஸ்வாநுபவத்தினாலேசுஷுப்தியானந்தத்தை அனுபவிக்கிறார்களெனத் தெரியவருகின்றதல்லவா?

விடை:— ஆம். தெரியவருகின்றது.

வினா:—732. இதுபோல் ஜாக்ரஸ்வப்னங்களிலும் அவ்வானந்தமிருக்கிறதாக நிரூபிக்கலாமா?

விடை:— நிரூபிக்கலாம். ஆனால், இந்தஜாக்ரஸ்வப்னானந்தங்கள் சுஷுப்தியானந்தத்தைப்போல் ஏகரூபமாயும், பூர்ணமாயும், அனுதியாயுமில்லாமல் பலவிஷயங்களினால் பற்பலரூபமாயும் தனித்தனியாகவுமிருக்கின்றது. இந்தஸுகங்கள் அநித்தியமாகையால், இவைகளுக்குக் காரணமானநித்தியஸுகம் ஒன்று வேறேயிருக்கவேண்டும். அந்தஸுகமானது முன்கூறியபடி விருத்திவிசேஷங்களால் மறைக்கப்பட்டிருப்பதினால் அனுபவிக்கப்படுகிறதில்லை.

வினா:—733. காரணமான ஆனந்தத்தைக் காரியரூபமான விருத்திகள்மறைக்குமா?

விடை:— மறைக்கும்.

வினு: —734. மறைக்குமென்பதற்கு என்னென்ன நிதர்சனங்கள் இருக்கின்றன?

விடை:— சூரியனும் மேகமும், அக்னியும் புகையும், கயிறும் பாம்புமாகிய நிதர்சனங்கள் இருக்கின்றன.

வினு: —735. மறைவாகவிருக்கிற ஆனந்தத்தை இருக்கிறதாகச் சொன்னால் எவர்கள் நம்புவார்கள்? யாரும் நம்ப இடமில்லையே?

விடை:— அப்படி நம்பாமலிருக்கிறது மதியீனமேதவிர விவேகமல்ல. பாலர்களும் மூடர்களும் சாம்பலினால் மூடப்பட்டிருக்கிற அக்னியைச் சாம்பலாகநினைக்கிறார்கள். விவேகிகளோ, அதை அக்னிஎன்றேகருதுகிறார்கள். ஆகையால், காரணமான ஆனந்தம் காரியமானவிருத்திகளால் மறைக்கப்பட்டிருக்கிறதென்ற சுருதிப்பிரமாணத்தைநம்பி ஜாக்ரஸ்வப்னதி அவஸ்தைகளில் அவ்வாத்மஸ்வரூபானந்தம் இருக்கிறதென்று நிச்சயித்துக்கொள்ளவேண்டும்.

வினு: —736. அந்தஆனந்தமானது மூன்றுஅவஸ்தைகளிலும் இருப்பதினால் அதற்கு நித்தியத்துவம் ஸித்தித்திருக்கிறது என்கிறீர்களா?

விடை:— ஆம். ஸித்தித்திருக்கிறது என்கின்றேன்.

வினு: —737. இந்தஆனந்தம் எதனால் நிருபாதிகமென்று ஏற்பட்டது?

விடை:— அவ்வானந்தம் அவஸ்தாத்திரயத்திலும் உபாதியற்றிருப்பதால் நிருபாதிகமென்று ஏற்பட்டது.

வினு: —738. எது உபாதியென்று சொல்லப்படுகின்றது?

விடை:— நாமரூபமுடையவஸ்துத்தான் உபாதிஎன்று சொல்லப்படுகின்றது.

வினு: —739. ஔபாதிகமென்பது யாது?

விடை:— உபாதியிலிருந்துண்டாகிற ஸுகந்தான் ஔபாதிகம்.

வினு: —740. நிரதிசயம் என்பது யாது?

விடை:— ஒன்றைவிடஅதிகமாய் மற்றொன்று இல்லாமலிருக்கிறதுதான் நிரதிசயம்.

வினு:—741. சுஷுப்திஆனந்தத்திற்கு நித்தியத்துவ லக்ஷணமி ருக்கிறதுபோல், அதற்கு நிரூபாதிகத்துவம், நிரதி சயத்துவமாகியலக்ஷணங்களிருக்கின்றனவா?

விடை:— இருக்கின்றன.

வினு:—742. ஆனால், அந்தலக்ஷணங்களை யெடுத்துரைக்கவேண் டும்?

விடை:— ஆகா! அப்படியே. சுஷுப்திஆனந்தத்திற்கு புஷ் பம், சந்தணம், ஸ்திரீமுதலியவிஷயங்களைப்போல் நாமரூபமுடைய உபாதியொன்றுமில்லை. அவ்வித மிருந்தும், அவ்வானந்தமானது யாவராலும் அநு பவிக்கப்படுகின்றது. ஆனதால், அதற்கு நிரூபாதி கத்துவம் ஸித்தித்திருக்கின்றது. நிரதிசயத்துவமா வது, 11-விதமான ஆனந்தங்களும் ஒன்றுக்கொன்று கூடுதல்குறைவான ஸுகமுடையவைகளாகப் பவித் திருக்கிறதுபோல், இந்த சுஷுப்திஆனந்தமானது, இவ்வளவுஅவ்வளவென்ற எல்லையுடன் பவியாமலி ருப்பதால் அதற்கு நிரதிசயத்துவமும் ஸித்தித்திருக் கின்றது.

வினு:—743. ஐயா! இந்த சுஷுப்திஆனந்தத்தை எல்லையற்ற தென்று செப்புகிறீர்களே, அவ்விதம் செப்பலாமா? எல்லையற்றஆனந்தம் சிரேஷ்டமான பிர்மானந்தமல்ல வா?

விடை:— ஆமப்பா! அந்தஸர்வோத்கிருஷ்டமானபிர்மானந்தம் தான் இந்த சுஷுப்திஆனந்தம்.

வினு:—744. அதென்ன, அவ்விதம்சொல்லுகிறீர்கள்? சுஷுப்தி ஆனந்தத்தைப் பிர்மானந்தமாகச் சொல்லலாமா?

விடை:— அதன்லக்ஷணம் இதனிடத்திலுமிருப்பதினுற் சொல் லலாம்.

வினு:—745. அதன்லக்ஷணம் இதனிடத்திலென்னவிருக்கின்றது? ஆசாபாசங்களற்றவிடமல்லவா, அவ்வானந்தம் இரு க்குமிடம்?

விடை:— அதுபோல் இந்தசுஷுப்தியிலும் ஸகலவியவகாரங்க ளும்அடங்கித் தன்மயமாகவிளங்குகிறபொழுது யா ரும் அதற்கன்னியமான ஸுகத்தைவிரும்புகிறதில்லை.

அப்பொழுது ஸகலதுக்கங்களும் நசித்தேயிருக்கின்றன. ஆனதால், இவ்வானந்தத்திற்கு பிரமானந்தலக்ஷணமிருக்கிறதென்று சொல்லப்பட்டது.

வினா:—746. அதென்ன? நித்திரையானது ஒன்றையும் அபேக்ஷிக்கிறதில்லையென்று சொல்லுகிறீர்களே. சிறந்த அம்ஸதூளிகாமஞ்சத்தையும், ஸௌந்தர்யவதியான ஸ்திரீயையும் அபேக்ஷிக்கின்றனவே. அப்படி அபேக்ஷிக்கலாமா?

விடை:— அப்பா! அவைகளை அபேக்ஷிக்கிறது ஜாக்ராதாவஸ்தையேயன்றி சுஷுப்தி அவஸ்தையன்று. நித்திரைக்கு நீ சொல்லியவற்றில் அபேக்ஷையிருந்தால் அம்ஸதூளிகாமஞ்சத்தில் சயனித்துக்கொண்டவன் உருண்டுவந்து தரையில் படுத்துறங்கவும், ஜாக்ராதாவஸ்தையில் கண்ணே, மணியே என்று காதலித்த ஸௌந்தர்யவதியான ஸ்திரீ தன்நித்திரைக்கு பங்கம்செய்கிறவிஷயத்தில் எழுந்து அவளைத் தண்டித்து மறுபடியும் சயனித்துக்கொள்ளவும் நிமித்தமில்லை.

வினா:—747. ஆனபடியால், சுஷுப்தியானந்தமானது பிரமானந்தத்தைப்போல் விஷயானந்தத்திலும் சிறந்ததாக விருப்பதால், பிரமானந்தத்திற்கும் சுஷுப்தி ஆனந்தத்திற்கும் பேதமில்லையோ?

விடை:— இல்லை.

வினா:—748. நம்மிடத்தில் பிரமானந்தலக்ஷணங்களிருப்பதினால் நமக்கும் ஆனந்தரூபத்வம் ஸித்தித்திருக்கிறதல்லவா?

விடை:— ஆம். நமக்கும் ஆனந்தரூபத்வம் ஸித்தித்திருக்கிறது.

வினா:—749. இந்நூலில் இதற்குமுன்கூறப்பட்ட மூன்றுவிதமான காரணங்களால் சுருதியுக்தி அனுபவஸித்தமாய்நம்மிடத்தில் ஸச்சிதானந்தலக்ஷணமிருக்கிறதினாலே ஆத்மாவினுடைய ஸச்சிதானந்தபிரமத்வம் நமக்கும் ஸித்தித்ததல்லவா?

விடை:— ஆம். ஸித்தித்தது.

வினா: —750. ஐயா! இதற்குமுன் 11 - விதமான ஆனந்தமென்று சொன்னீர்களே, அவைகள் எவை? அவைகள் ஒன்றுக்கொன்று எத்தனை மடங்கு அதிகமானவை?

விடை:— அப்பா! 11-விதமான ஆனந்தமாவது மனுஷ்யானந்தம், மனுஷ்யகந்தர்வானந்தம், தேவகந்தர்வானந்தம், சிரலோகலோகபிதுர்க்களானந்தம், ஆஜானதேவானந்தம், கர்மதேவானந்தம், தேவானந்தம், இந்திரானந்தம், பிரஹஸ்பதிஆனந்தம், பிரஜாபதிஆனந்தம், பிர்மானந்தமென்றவைகளாம். இவைகள் ஒன்றுக்கொன்று முறையே 100 - மடங்கு அதிகமானவை.

---

## ஸச்சிதானந்தவைபவம்.

வினா: —751. ஐயா! முன் ஆத்மாவினுடைய ஸச்சிதானந்தபிர்மத்வம் நமக்கும் ஸித்தித்திருக்கிறதாகத் தேவரீர் சொன்னதுபோல், நாம் ஸச்சிதானந்தஸ்வரூபர்கள் என்ற ஸ்வானுபவம் நமக்கேன் வருகிறதில்லை?

விடை:— அவ்வனுபவம் எளிதாய் வரமாட்டாது. ஆறுவித அடையாளங்களினாலே வேதாந்தசாஸ்திரதாத்பர்ய நிச்சயரூபமாகிய சிரவணத்தைக் குருமுகமாகக்கேட்டு, கேட்டதற்கு அனுஸாரமாய் மனனமும், மனனனுஸாரமாய் நிதித்தியாஸனமும் செய்து, பிறகு வெகுகாலம் அவ்விதமே இருக்கிறவனுக்குத்தான் ஸச்சிதானந்தபிர்மமே நான்என்ற ஸ்வானுபவமாகிய அபரோக்ஷக்ஞானம் உண்டாகின்றது.

வினா: —752. அவ்விதமன்னியில் நாம் இப்பொழுது எவ்விதமாகவிருக்கின்றோம்?

விடை:— ஸர்வகாரியங்களுக்கும் தானே கர்த்தாவென்றும், அவைகளைச்செய்கிறவன் தானாகவும், தன்னுடைய வர்ணம், ஜாதி, ஆசிரமம்முதலியவை இவையென்றும் அபிமானம் பாராட்டிவருகிறவர்களாக இருக்கின்றோம்.

வினா: —753. ஸச்சிதானந்த ஸ்வரூபமாகப் பவிக்கவேண்டுமானால் இவைகளையெல்லாம் விட்டுவிடத்தான்வேண்டுமோ?

விடை :— ஆம். விட்டுவிடத்தான்வேண்டும்.

வினா : —754. இவைகளைவிடுகிறதினால் எவ்விதமான நிலைமைபவிக்கின்றது ?

விடை :— சுஷுப்தியைப்போல் பற்றற்றநிலைமைபவிக்கின்றது.

வினா : —755. அந்நிலைமையினால் நாம்கிடைக்கப்பெற்ற பிரயோஜனம் யாது ?

விடை :— ஸமுத்திரத்திற்சேருகிற நதியைப்போல் பிர்மத்தில் ஐக்கியமடைகிறதுதான் பிரயோஜனம்.

வினா : —756. ஐக்கியமடைந்தபிறகு நான் பிர்மமாயிருக்கின்றேன், பிர்மமே நானாகவிருக்கின்றேனென்ற அநுபவமும், அதுவிஷயத்தில் பிரயத்தனமும், அதில் கர்த்திருத்துவமும் இருக்குமா ?

விடை :— இராது.

வினா : —757. பிறகு எவ்விதமிருக்கும் ?

விடை :— பிர்மத்திற்கலந்துபோன அந்தஹங்காரமும், நிர்விசேஷஸ்திதியுமான மஹாமஹத்துவத்துடன் எங்கும் தானாகவேவிளங்கும்.

வினா : —758. இதுதான் அபரோக்ஷாநுபவமோ ?

விடை :— ஆம். இதுதான் அபரோக்ஷாநுபவம்.

வினா : —759. இந்த அநுபவமுள்ளபுருஷன்தான் ஸ்வாநுபவரூபனோ ?

விடை :— ஆம். அவன்தான் ஸ்வாநுபவரூபன்.

வினா : —760. இந்த ஸ்வாநுபவரூபனை ஆனந்தஸ்வரூபனென்றும் சொல்லலாமல்லவா ?

விடை :— ஆம். சொல்லலாம்.

வினா : —761. ஐயா ! அந்தஆனந்தத்தின்வைபவம் எவ்விதமாகவிருக்கும் ?

விடை :— அப்பா ! இக்கேள்விக்கு அந்த ஆனந்தஸ்வரூபன்தான் மறுமொழி பகரவேண்டும். அவனையன்றி மற்றவர்கள் அதன்மஹிமையை இவ்விதமென்று எடுத்துரைக்க சக்தராகமாட்டார்கள்.

வினா :—762. அவ்வானந்தத்தை விவரிக்கிற வேதாந்தசாஸ்திரம் அதன்மஹிமையைப்பற்றிக் கூறவில்லையா ?
விடை :— அதுவும் அதன்மஹிமையையெடுத்துரைக்கும் சக்தியைப்பெறவில்லை.

வினா :—763. வேதாந்தத்தாலுரைக்க முடியாத ஆனந்தஸ்வரூபத்தை, அவ்வானந்தஸ்வரூபனால் இவ்விதமென்று எவ்விதம் உரைக்கமுடியும் ?
விடை :— அப்பா ! அதுவும் உண்மைதான். ஆனந்தத்தையனுபவிக்கிறபுருஷனும் அவ்வானந்தத்தை யனுபவிக்கலாமேயன்றி, சுஷுப்தி ஆனந்தத்தைப்போல் இதைப் பிறருக்குச் சொல்லமுடியாது. அவன்தான் எடுத்துரைக்கவேண்டுமென்று முன்கூறினவசனமானது, உபசாரமான வசனமேயன்றி, உண்மையானவசனமன்று.

வினா :—764. பிறருக்கு எடுத்துரைக்கமுடியாவிட்டாலும் அதன் ஸ்வரூபத்தை மனதினாலாயினும் நினைக்கமுடியுமா ?
விடை :— நினைக்கவுமுடியாது. ஏனென்றால், இந்த ஸச்சிதானந்தஸ்வரூபனாகஇருக்கிறவன் தனக்கு அன்னியமாய் ஒருவஸ்து இருக்கிறதாகவும், தான்மனோவாக்குக் காயங்களுடன் இருக்கிறதாயும் அறிகிறானில்லை.

வினா :—765. பிறகு அவன் எவ்விதமாகஇருக்கின்றான் ?
விடை :— வாசாமகோசரமான அகண்டானந்தபிர்மஸ்வரூபானுபவனாக இருக்கின்றான்.

வினா :—766. இவனது அனுபவத்திற்குக் காரணபூதனாகவிருந்த குருவினால் இவனது அனுபவத்தை இவ்விதமென்று உரைக்கமுடியுமா ?
விடை :— அப்பா ! அவராலும் உரைக்க முடியாது. அவ்வர் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய ஈசுவரனாலும் உரைக்கமுடியாது.

வினா :—767. இந்த ஸ்வானுபவத்தையனுபவிக்கிறவன் உலகத்தில் எவ்விதமாகவிருப்பான் ?
விடை :— ஒன்றும் அறியாத பித்தனைப்போல் ஸஞ்சரித்துக் கொண்டு ஆனந்தரூபனாகவிருப்பான்.

———

## பிர்மமும் சக்தியும்.

வினு : —768. ஐயா! நல்லது. சுத்தப்பிர்மத்தினிடத்தில் என்ன இருக்கின்றது?

விடை :— அபின்னமாக ஒருசக்தி யிருக்கின்றது.

வினு : —769. அந்தச்சக்தி அதீதபிர்மத்தில் அடங்கியிருக்கும் போது இந்த ஸர்வஸாக்ஷியானபிர்மத்திற்கு என்ன பெயர்?

விடை :— சுத்தப்பிர்மமென்று பெயர்.

வினு : —770. இந்தச்சக்தி விசிரம்பித்து சுத்தப்பிர்மத்தை வியாபிக்கும்பொழுது அந்தப்பிர்மத்திற்கு என்ன பெயர்?

விடை :— பாவ்யாபகத்திற் குள்ளான படியினலே பரப்பிர்மமென்று பெயர்.

வினு : —771. இச்சக்திக்கு முக்குணங்கள் உண்டா?

விடை :— உண்டு.

வினு : —772. இலக்ஷணசூன்யமாகவிருக்கின்ற இச்சக்திக்கு எவ்விதம் முக்குணங்கள் உண்டாயின?

விடை :— இச்சக்திக்குப் பிர்மத்தினுடைய ஸன்னிதானத்தில் புருஷஸமூகத்தில் ஸ்திரீக்கு இன்பம்ஜனித்தாற்போல முக்குணங்கள் உண்டாயின.

வினு : —773. அச்சக்தியின் சாந்தகுணத்தில் தோற்றுகிறசக்திக்கு என்ன பெயர்?

விடை :— ஆனந்தரூபசக்திஎன்று பெயர்.

வினு : —774. அச்சக்தியின் ரஜோகுணத்தில்தோற்றுகிறசக்திக்கு என்ன பெயர்?

விடை :— சித்ரூபசக்தியென்று பெயர்.

வினு : —775. அச்சக்தியின் தமோகுணத்தில்தோற்றுகிற சக்திக்கு என்ன பெயர்?

விடை :— ஸத்ரூபசக்தியென்று பெயர்.

வினு : —776. மேலே சொன்னகாரணமான ஆனந்தரூபசக்தியுடனே பரப்பிர்மங்கூடி ஸர்வானந்தசுஷுப்தியை அடைகின்றபொழுது அப்பரப்பிர்மத்திற்கு என்ன பெயர்?

விடை :— பரமானந்தமென்று பெயர்.

வினா :— 777. இந்தப்பரமானந்தர் சித்ரூபசக்தியுடனேகூடி ஸர்வ பிரகாசமென்கிற ஸ்வப்னாவஸ்தையை அடைகின்ற பொழுது அப்பரமானந்தருக்கு என்ன பெயர்?

விடை :— பரிபூர்ணரென்று பெயர்.

வினா :— 778. இந்தப்பரிபூர்ணர் சத்ரூபசக்தியுடனேகூடி ஸர்வ வியாபகமென்கிற ஜாக்ராதாவஸ்தையை அடைகின்ற பொழுது அப்பரிபூர்ணருக்கு என்ன பெயர்?

விடை :— பரனென்ற பெயர்.

வினா :— 779. இந்தப்பரனுடையஸ்வரூபம்தான் அகண்டபரிபூர்ண ஸச்சிதானந்தத்தின் ஸ்வரூபமோ?

விடை :— ஆம். இந்தப்பரனுடையஸ்வரூபம் தான் அகண்டபரி பூர்ணஸச்சிதானந்தத்தின் ஸ்வரூபம்.

வினா :— 780. ஐயா! பிர்மத்திற்கும் மாயைக்கும் ஆதி யுண்டா?

விடை :— அப்பா! அவைஇரண்டும் அனாதியானதால் அவை களுக்கு ஆதியில்லை.

வினா :— 781. ஓ, அறிவே திருவுருவாகவந்தமர்ந்த அருள்அமுதே! முன்கர்மத்திற்கும் ஜன்மத்திற்கும் அனாதித்வம் சொன்னீர்கள். இப்பொழுது அதுபோல் பிர்மத் திற்கும் மாயைக்கும் அனாதித்வம்சொல்லுகிறீர்கள். ஆனதால் இதுபோல் இன்னும் எதுஎதுகளுக்கெல் லாம் அனாதித்துவம் ஸித்தித்திருக்கின்றன வென் பதைச் சற்று தயவுசெய்து அறிவிக்கவேண்டும்?

விடை :— அப்பா, ஸாதனசதுஷ்டயமுடையஸம்பன்ன! அனா தித்வமானது முன்கூறியவைதவிர ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் ஸித்தித்திருக்கின்றது.

---

## திருமூர்த்திகளும் மூலப்பிரகிருதியும்.

வினா :— 782. ஐயா! பிர்மவிஷ்ணுருத்திராதிகளாகிய திருமூர்த்தி கள் எதனிடத்திலிருந்து தோன்றினார்கள்?

விடை :— அப்பா! ஸாத்வீகசுணமாயையினிடத்திலிருந்துதோ ன்றினார்கள்.

வினா :— 783. அம்மாயைக்கு முக்குணங்கள் உண்டா?

விடை :— உண்டு.

வினா: — 784. இந்தத்திருமூர்த்திகள் அம்மாயையின் எந்தகுணத்திலிருந்து தோன்றினார்கள்?

விடை:— ஸத்துவகுணத்திலுள்ள ஸத்வாஜஸ்தமோகுணங்களிலிருந்து தோன்றினார்கள்.

வினா: — 785. ஸத்துவத்தின் ஸத்வத்திலிருந்து தோன்றினவர் யார்?

விடை:— விஷ்ணு.

வினா: — 786. ஸத்துவத்தின் ரஜஸிலிருந்துதோன்றினவர் யார்?

விடை:— பிர்மா.

வினா: — 787. ஸத்துவத்தின் தமஸிலிருந்துதோன்றினவர் யார்?

விடை:— ருத்திரன்.

வினா: — 788. மேலேசொன்ன ஸாப்திககுணமாயை எதனிடத்தில் தோன்றிற்று?

விடை:— மூலப்பிரகிருதியினிடத்தில் தோன்றிற்று.

வினா: — 789. இந்த ஸாப்திககுணமாயைக்கு வேறு என்னென்ன பெயர்கள் உண்டு?

விடை:— ஸர்வக்ஞஉபாதி, ஈசுவரகாரணசரீரமென்றபெயர்கள் உண்டு.

வினா: — 790. திருமூர்த்திகளுக்குமேலேயொரு ஈசுவரன் உண்டல்லவா?

விடை:— ஆம். உண்டு.

வினா: — 791. அவரென்ன, ஸர்வக்ஞரா?

விடை:— ஆம். ஸர்வக்ஞரே.

வினா: — 792. அந்தஸர்வக்ஞராகியஈசுவரன் எதனிடத்திலிருந்து தோன்றினார்?

விடை:— அவரும் மேலேசொன்ன ஸாப்திககுணமாயையினிடத்திலிருந்துதான் தோன்றினார்.

வினா: — 793. மூலப்பிரகிருதிஎன்னும் சக்தி எதனிடத்திலிருந்துண்டாயிற்று?

விடை:— சுத்தியில் ரஜதம்தோன்றினாற்போல அகண்டபரிபூர்ணஸச்சிதானந்த பிர்மத்தினிடத்திலிருந்து உண்டாயிற்று.

---

## பொருள்விளக்கம்.

வினா:—794. ஐயா! எது பரம்பொருளென்று சொல்லப்படுகின்றது?
விடை:— அப்பா! ஆத்மா தான் பரம்பொருளென்று சொல்லப்படுகின்றது.

வினா:—795. ஆத்மா பொருளாகும்பக்ஷத்தில் நாமே அவ்வாத்மாவாகவிருப்பதினால் நமது ஸ்தூலசரீரத்தை ஆத்மாவென்று சொல்லலாமா?
விடை:— கூடாது.

வினா:—796. ஏன் கூடாது?
விடை:— ஜீவன்போனபிறகு ஸ்தூலசரீரம் நசித்துவிடுகிறபடியால் அதை ஆத்மாவென்று சொல்லக்கூடாது.

வினா:—797. ஆனால், கண்டேன்கேட்டேனென்ற யுக்தியினாலே இந்திரியத்தை ஆத்மாவாகச் சொல்லலாமா?
விடை:— அதுவுங்கூடாது.

வினா:—798. ஏன் கூடாது?
விடை:— ஜீவன்போனவுடன் இந்திரியமும் அற்றுப்போகிறபடியினால் அவ்விந்திரியத்தை ஆத்மாவாகச் சொல்லக்கூடாது.

வினா:—799. ஆனால், பிராணனை ஆத்மாவாகச் சொல்லலாமா?
விடை:— கூடாது.

வினா:—800. ஏன் கூடாது?
விடை:— மனமில்லாதபொழுது பிராணன் அறியப்படாமலிருப்பதினால் அப்பிராணனை ஆத்மாவாகச் சொல்லக்கூடாது.

வினா:—801. ஆனால், இந்தமனதை ஆத்மாவாகச் சொல்லலாமா?
விடை:— அதுவுங்கூடாது.

வினா:—802. ஏன் கூடாது?
விடை:— புத்தியில்லாதவிஷயத்தில் மனஸு ஆரசிக்கிறபடியினாலே அம்மனதை ஆத்மாவாகச் சொல்லக்கூடாது.

வினா:—803. ஆனால்,இந்தப்புத்தியை ஆத்மாவாகச்சொல்லலாமா?
விடை:— அதுவுங்கூடாது.

வினு: —804. ஏன் கூடாது?

விடை:— சுஷுப்தியிலே புத்திமுதலிய தொன்றும்காணுமல் சூன்யமாகவிருக்கிறபடியினுலே புத்தியை ஆத்மாவாகச் சொல்லக்கூடாது.

வினு: —805. ஆனுல், அந்தச்சூன்யத்தை ஆத்மாவாகச் சொல்லலாமா?

விடை:— கூடாது.

வினு: —806. ஏன் கூடாது?

விடை:— சுஷுப்தியில் சூன்யமாகவிருந்ததென்றுபிறகுகண்டு சொல்லவருகிறபடியினுலே அந்தச்சூன்யத்தை ஆத்மாவாகச் சொல்லக்கூடாது.

வினு: —807. ஆனுல், எதுதான் ஆத்மாவாகச் சொல்லப்படுகின்றது?

விடை:— ஸத்துத்தான் ஆத்மாவாகச் சொல்லப்படுகின்றது.

வினு: —808. இந்தஆத்மா ஸூக்ஷுமநாடி வழியாகஸஞ்சரிக்கிறபடியினுல் அதற்குரியபரிமாணம் அணுவாகவிருக்கலாமா?

விடை:— அவ்வாத்மா அறிவுரூபமாய் பாதமுதல் மஸ்தகபரியந்தம் கலந்திருப்பதால், அதற்குரிய பரிமாணம் அணுதானென்று நிச்சயமாய்ச் சொல்லமுடியாது.

வினு: —809. ஆனுல், அதற்குரியபரிமாணம் புருஷப்பிரமாணமாகவிருக்கலாமா?

விடை:— புருஷப்பிரமாணமாகச் சொல்லுகிற பக்ஷத்தில் ஆத்மாவுக்குப் பரிச்சின்னம்ஏற்படுகின்றது. பரிச்சின்னமானுல், அதற்கழிவுண்டு. அவ்வாத்மா அழிவற்ற பரிபூர்ணமானதால், அதைப் புருஷப்பிரமாணமென்று சொல்ல முடியாது.

வினு: —810. அது பரிபூர்ணமானதால், அதை ஜடமாகச் சொல்லலாமா?

விடை:— சுஷுப்தியில் ஜடமாகவும், ஜாக்ரத்தில் அறிவாகவும் காணப்படுகிறபடியால், அது ஜடமாயும், சித்தாயுமிருக்கிறதென்று சொல்லவேண்டியதாகின்றது.

வினா :—811. பரிபூர்ணத்துக்கு இரண்டுலக்ஷணங்கள் கூடுமா? கூடாதாகையால், அவ்விரண்டிலொன்றுதான் கூற வேண்டும்?

விடை :— அதுவாஸ்தவம். அவ்விதமானால் ஆத்மாவானது சித்தாகத்தானிருக்கின்றது.

வினா :—812. ஆத்மா சித்தாகவிருக்குமானால் சுஷுப்தியில் எது ஜடமாகத்தோன்றுகின்றது?

விடை :— ஆத்மாவுக்கு ஸுகதுக்கம்கொடுக்கவந்த பிரகிருதிதான் ஜடமாகத் தோன்றுகின்றது.

வினா :—813. ஐயா! பிரகிருதியானது புருஷன்உதவியில்லாமல் ஜேஷ்டிக்குமா? மாட்டாது. ஆதலின், அதையடக்கியாளுவதற்கு யாராவதுஒருபுருஷனிருக்கவேண்டும். அவ்வித மில்லாவிடின், ஆத்மாவுக்குப் பந்தமேது? மோக்ஷமேது? ஒன்றுமில்லை. ஆகையால், அந்தப்பிரகிருதியை அடக்கியாளுகின்றபுருஷன் இன்னாரென்பதை எனக்கு அறிவிக்கவேண்டும்?

விடை :— அப்பா! ஈசுவரன்தான் அந்தப்பிரகிருதியை அடக்கியாளுகின்றபுருஷன் என்பதை நீ தெரிந்துகொள்ள வேண்டியது.

வினா :—814. அந்தஈசுவரன் எவ்விதமானதன்மையை உடையவர்?

விடை :— அந்தஈசுவரன் கிலேசகர்மவிபாகங்கள் அற்றிருக்குந் தன்மையையுடையவர். அன்றியும், அவர் ஜீவனைப்போல் அஸங்கசித்தாகவுமிருக்கின்றார்.

வினா :—815. இந்த ஈசுவரனைப்பற்றித் தார்கிகர்கள் எவ்விதமாக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— தார்கிகர்கள் அஸங்கனாகியஈசுவரனுக்கு நியந்திருத்துவங்கூடாதென்றும், ஆகையால், அவர் நித்தியமான இச்சாக்ஞானக்கிரியைகளையுடையவராக இருக்கிறாரென்றும் அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினா :—816. இவ்வீசுவரனைப்பற்றி ஹிரண்யகர்ப உபாஸகர்கள் எவ்விதமாக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— ஹிரண்யகர்ப உபாஸகர்கள், ஈசுவான் நித்தியமான இச்சாக்ஞானக்ரியைகளை யுடையவராக விருக்கும்

பக்ஷத்தில் ஸதா ஸ்ருஷ்டிக்கப்பட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்றும், அவ்விதம்காணுதபடியால் இரண்யகர்பன்தான் ஈசுவரனென்றும் அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினு :—817. குறித்தவிஷயத்தைப்பற்றி விசுவரூபமதஸ்தர்கள் எவ்வாருக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— விசுவரூபமதஸ்தர்கள், ஸ்தூலசரீரத்தைவிட்டு ஸூக்ஷ்மசரீரம் தனியேயில்லையாகையாலும், ஸ்ரீகிருஷ்ணன் விசுவரூபம்காட்டுகிறபொழுது காலெங்கும் கையாகக்காட்டினபடியினுலும், விராட்புருஷன்தான் ஈசுவரனென்றும், ஹிரண்யகர்பன் ஈசுவரனல்லவென்றும் அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினு :—818. பிரஸ்தாபவிஷயத்தைப்பற்றி பிராஜாபத்யமதஸ்தர்கள் எவ்வாருக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— பிர்ஜாபத்யமதஸ்தர்கள், காலெங்கும் கையாகவிருக்கிறது ஈசுவரனுல் மாவட்டையும் ஈசுவரனுகவேண்டுமென்றும், அவ்விதமில்லாதபடியால் பிர்மாதான் ஈசுவரனென்றும் அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினு :—819. வைஷ்ணவர்கள் ஈசுவரனைப்பற்றி எவ்வாருகஅபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— வைஷ்ணவர்கள், இந்தபிர்மா விஷ்ணுவினுடையநாபியிலிருந்துஜனித்தபடியால் விஷ்ணுதான் ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினு :—820. மேற்சொன்னவிஷயத்தைப்பற்றி சைவர்கள் எவ்வாருக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— சைவர்கள், சிவனுடையபாதத்தை விஷ்ணுகாணுதபடியால் சிவன்தான் ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினு :—821. கணபதிஉபாஸகர்கள், எவரை ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை :— கணபதிஉபாஸகர்கள், திருபுரஸம்ஹார காலத்திலே சிவன் கணபதியை பூஜித்தபடியினுலே விக்நேசுவரன்தான் ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினா: — 822. புராணிகர் எவ்விடத்தில் ஈசுவரத்வம் இருக்கிறதாக அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை:— புராணிகர் மேற்சொன்னதேவர்களெல்லாம் புண்ணியஸ்தலங்களில்விளங்குவதால், அந்தஸ்தலங்களே ஈசுவரத்துவமுடையனவென்று அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினா: — 823. தர்மசாஸ்திரக்காரர்கள் எவைகளை ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்?

விடை:— தர்மசாஸ்திரக்காரர்கள், புண்ணியஸ்தலங்களுக்குரிய மஹாத்மியம் மூங்கில், அரசு, எருக்குமுதலியவிருக்ஷங்களாலேற்படுவதாலும், அவ்விருக்ஷங்களைத் தங்கள்குலதேவதைகளாக உலகத்தில் பூஜைபண்ணக் காணுகின்றபடியினாலும், அவ்விருக்ஷங்கள்தான் ஈசுவரனென்று அபிப்ராயப்படுகின்றார்கள்.

வினா: — 824. ஆனால், மேற்சொன்னவர்களின் அபிப்ராயங்களினால் வஸ்துநிரணயம் பண்ணப்படவில்லையா?

விடை:— வஸ்துநிரணயம் பண்ணப்படவில்லை.

வினா: — 825. ஆனால், எவ்விதம் வஸ்துநிரணயம் பண்ணவேண்டும்?

விடை:— பிர்மம்ஒன்றேபொருள், மற்றவையெல்லாம் மாயாமயமென்ற வேதாந்தவிசாரத்தினாலே வஸ்துநிரணயம் பண்ணவேண்டும்.

வினா: — 826. இதனால் மேலே சொன்னவாதங்களுக்கு விரோதமல்லவா?

விடை:— ஒன்றேபொருள்என்கிறவேதாந்தத்திற்கும், அதைத்தானே குருடர் யானைகண்டதுபோல் கண்டிருக்கிற மேற்சொன்ன வாதிகளின் அபிப்ராயங்களுக்கும் யாதொருவிரோதமும் இல்லை.

வினா: — 827. பிர்மம்தான் உண்மைப்பொருள்என்றதற்கும் மற்றவையெல்லாம் மாயாமயமென்றதற்கும் பிரமாணங்களெவை?

விடை:— உபநிஷத்துக்கள்தான் பிரமாணங்கள்.

வினா: — 828. ஐயா! தாங்கள்அன்புகூர்ந்து இதுவரை திருவாய்மலர்ந்தருளிய வேதாந்தசாஸ்திரத்தின் தத்துவமான ஸச்சிதானந்த ஸ்வரூபலக்ஷணத்தையும், இதிஹாஸ

புராணாதிகளிலுள்ளபிரபஞ்சவிஷயங்களையும் கேட்டு நான் கிருதார்த்தனாயினேன். என்ஜன்மம் ஸாபல்யமாயிற்று. ஆகையால், அதன்பொருட்டு வழக்கம்போல் தங்களுடைய திவ்யசரணாரவிந்தத்தில் பலவிதமானவந்தனங்களை பக்திபூர்வகமாக ஸமர்ப்பிக்கின்றேன். அவைகளை ஸ்வீகரித்துக்கொள்ளவேண்டும்.

**விடை:—** அப்பா! உனதுவந்தனங்கள் அவ்விதமேஸ்வீகரித்துக்கொள்ளப்பட்டன. உனதுமோக்ஷாபேக்ஷையானது, எனதுஸத்குருவின்கிருபாகடாக்ஷவீக்ஷிண்யத்தினால் காலதாமஸத்திற்கிடமன்னியில் ஸித்திக்கக்கடவது. ததாஸ்து.

ஓம் தத்ஸத்.

---

ப்ரசிநோத்தாரத்நமாலை, முற்றிற்று.

---



உ

ஸ்ரீ

# புத்தகவிளம்பரம்.



திருநெல்வேலிஜில்லா, கல்லிடைக்குறிச்சி, இந்துசாஸ்திராபிமானிஆபீஸில் விற்கப்படும்புஸ்தகங்களில் அடங்கியவிஷயங்களும், அவைகளின் பெயர், விலை முதலியவைகளும், இதனடியில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

| | | | விலை. | | |
|---|---|---|---|---|---|
| | | | ரு. | அ. | பை. |
| 1. | சிரேஷ்டமாலிகா. | (வி. பி. மூலம்) ... | 0 | 5 | 0 |
| 2. | கல்லிடைக்குதம்பி. | (வி. பி. மூலம்) ... | 0 | 2 | 0 |
| 3. | இந்துசாஸ்திராபிமானி. | (வி. பி. மூலம்) ... | 0 | 6 | 0 |
| 4. | ஆரியஜனபோதினி. | (வி. பி. மூலம்) ... | 0 | 10 | 0 |
| 5. | பிரசிநோத்தரரத்நமாலை. | (வி. பி. மூலம்) ... | 0 | 10 | 0 |

## அறிக்கை.

1-வது 2-வது நெம்பர் புஸ்தகங்கள் செலவாகிவிட்டமையால் மறுபதிப்பு அச்சிட்டவுடன் அவைகளைப்பற்றி விளம்பரப்பத்திரிகைகள்மூலமாக அறிவிக்கப்படும்.

1-வது

## சிரேஷ்டமாலிகா.

இப்புஸ்தகம் இதற்குமுன் வேறொருவராலும் அச்சிடப்படாததும் நம்முன்னோர்களாகிய முனீசுவரர்கள் அருளிய ஐந்தாம்வேதமென வழங்கும் ஸ்ரீ மஹாபாரதம், பாகவதம், இராமாயணம், சைவபுராணமுதலிய புராதனநூல்களிலிருந்தும் எடுத்து 7-5-1898-ல் கல்லிடை, வா. முத்துகிருஷ்ணய்யரால் இனிய செந்தமிழ்நடையில் நவீனமாக மொழிபெயர்க்கலாயிற்று. அதில் குணபோதகமொன்ற ஓர்மஹரிஷியிடம் பாநுசேகரன்என்ற ஓர்மஹீபதி நம் ஆரியசாஸ்திரங்களை அனுஸரித்த ஒவ்வொருவிஷயங்களிலுமுள்ள சிரேஷ்ட

பாவங்களை (மேன்மைகளை)ப்பற்றி அழகிய அடைமொழியுடன் கேட்பதும் அதற்கம்முனிவர் படிக்கும்பண்டிதர்களுடையநாவுக்கு மிக இனிமையைத்தரத்தக்கஅடைமொழியுடன் மறுமொழி கூறுவதும் மிக வியக்கத்தக்கதே. அதெங்ஙனமெனின், (பா) (1) முனீந்திரா! கவிகளில்சிரேஷ்டமாயவர் யாவர்? (கு) இராஜேந்திரா! காளிதாஸரே சிரேஷ்டமாயவர். (பா) (2) முனிசிரேஷ்டா! நன்னிலத்துற்றநதிகளில் சிரேஷ்டமாயது யாது? (கு) இராஜசிரேஷ்டா! கங்காநதியே சிரேஷ்டமாயது. (பா) (3) முனிபுங்கவா! விஷ்ணுபக்தருள் சிரேஷ்டமாயவர் யாவர்? (கு) இராஜசூடாமணீ! பிரஹ்லாதரே சிரேஷ்டமாயவர். என்று இவ்விதமாகவே ஒருமுறைகூப்பிடுவதுபோல் மறுமுறைவசனியாது நூதனம்நூதனமாகப்பெயர்சொல்லி இருவரும் ஸம்பாஷித்துக்கொள்வது இனிதிலுமினிதே. ஆனதால், ஆரியமதத்திலுதித்த அறிஞர்களே! இவ்வருமையானபுஸ்தகத்தின்பெருமையைப் பேரறிவாளர்களாகியதாங்களே அறியவேண்டும். ஆதலின், கருணைக்கு பொக்ஷமாகியகனவான்களே! விலையேறப்பெற்றதாயும் கனமும் பளபளப்புமுள்ள காகிதத்தில் தெளிவுள்ள அக்ஷரமாகப் பரிசோதித்து 150 வினவிடைகளுக்குமேலாகத் தயார்செய்யப்பட்டிருக்கும்புஸ்தகத்திற்கு வி. பி. சார்ச்சுள்பட அணு ஐந்தே விலை ஏற்பட்டிருப்பதால், இதனைவாசிக்கும்நண்பர்கள் தங்கள்தங்கள்நேசர்களுக்கறிவித்து புஸ்தகத்தின் ஸாராம்சங்களையும் விலைநயத்தையும் எடுத்துரைப்பதுடன் வருத்திப் பார்க்கும்படி முயற்சியும் செய்ய வேண்டும்.

---

2 - வது

## கல்லிடைக்கும்மி.

இதில் கல்யாணபுரியாக ஜ்வலித்துக்கொண்டிருக்கிற கல்லிடைக்குரிச்சியின் நகரச்சிறப்பையும், அவ்வூர் தேர் திருவிழாமுதலிய வைபவங்களையும், சிருங்கேரி சங்கராசாரியஸ்வாமிகளவர்களைப் போன்ற புண்ணியபுருஷர்களுடைய விஜயங்களையும்பற்றிக் கூறப்படும். இந்தக்கும்மியை வி. பி. போஸ்டில் அனுப்புவதாகவிருந்தால் அதனைப்பெற்றுக்கொள்பவர்களுக்கு ஜாஸ்தியாக ஒரு அணு நஷ்டம் ஏற்படுகின்றது. ஆதலின், ஒருஅணுவுக்குள்ள தபால்லேபிளை முன்னுடியேவாங்கியனுப்பி புக்போஸ்டில் தருவித்துக்கொள்வது மிகுந்தநலம். போஸ்டேஜைச்சேர்க்காமல் இதன்விலை 6 பை.

---

3 - வது

## இந்துசாஸ்திராபிமானி.

இத்தலைப்பெயரிட்ட புஸ்தகமொன்று கல்லிடைக்குறிச்சி, வா. முத்துகிருஷ்ணய்யரால் இனியசெந்தமிழ்நடையில் நவீனமாக அச்சிடப்பட்டிருக்கின்றது. இதில் இந்துமதக்கோட்பாடுகளையும், பொதுநன்மைகளையும் தழுவிப்பேசுகிற பிரமைவஸத்தியம், ஸம்ஸாரபந்தம், கேரளரஹஸ்யம், ஜீவஹாநி, விபரீதஸம்பவம், கீர்வாணவாக் பரிபாலினிஸபை, இந்துபாலபோதினிஸபை, திருக்கல்லியாணவைபவம், அஜாமளன், கலிபுருஷன், சைவவைஷ்ணவஸம்வாதம், சங்கர வித்தியாசாலை, தர்மசிந்தை, கல்வித்திறமை, முயற்சி, தர்மராஜ்யம், ஈசுவரபக்தி, ஸ்நேகவாஞ்சை, தானப்ரஸம்சை, அஷ்டமிவைபவம், மகுடாபிஷேகம், ராஜவிசுவாஸம், பெண்கல்வி, பிராசீனாசாரம், ஆரிய மதாந்தமென்ற உபன்னியாஸங்களும் வேறுசில நிரூபங்களும் அடங்கியிருப்பதால், ஒவ்வொரு ஆரியமணிகளிடமும் இந்தப்புஸ்தகம் அவசியமிருக்கவேண்டும். அதனால் தத்துவநிரணயம், கர்மசிரத்தை, தீவரபக்தி, ஜீவகாருண்யம், தேசாபிமானம், மதாபிமானம் முதலான சிறந்தகுணங்கள் ஜனிக்கப்படுவதுமன்றி, கேரளாதிபதிகளின் தர்ம மார்க்கமான நீதிபரிபாலனத்தையும், அத்தேயத்து ஆசாரானுஷ்டானங்களையும் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் தெரிந்துகொள்ளலாம். முன்நாளில் ௸ சமஸ்தானத்தில் மந்திரிஉத்தியோகத்தை வகித்திருந்த ம-ா-ா.ஸ்ரீ, தளவாய் ராமய்யர், ஸர், டி, மாதவராவ் முதலிய புத்திசாலிகளின் சரித்திரமும், கேரளவாஸிகளின்கொள்கையை அனுஸரித்த ஆதிசங்கராசாரியஸ்வாமிகளின் ஜனனவரலாறும், இன்னும் சில அத்புதமானவிஷயங்களும் இதில்எழுதப்பட்டிருக்கின்றன. இப்புஸ்தகம் விலைஉயர்ந்த நல்ல கிளேஸ்கடிதத்தில் முத்துக்களைப்போன்ற அக்ஷரங்களாகப் பொருக்கியெடுத்து 8 பேஜுள்ள 16 பாரத்தில் 128 பக்கங்கள்வரை அச்சிடப்பட்டிருக்கின்றது. இக்கிரந்தம் கேவலம் தனஆர்ஜனத்தைப் பெரிதாகநினையாமல் ஜனோபகாரத்தைக் கருதி அச்சிடப்பட்டதால், இதற்கு வி. பி. சார்ச்சுஉள்பட மிகவும் குறைந்தவிலையாகிய அணா ஆறே விலையேற்படுத்தப்பட்டிருக்கின்றது. இப்புஸ்தகத்தில் காலஞ்சென்ற லோகோபகாரி பத்திராதிபராகிய மிஸ்டர், வி. நடராஜய்யரவர்களுடையபடம் ஒன்றுவைத்து நேர்த்தியாகப் பயிண்டுசெய்யப்பட்டிருக்கின்றது.

4 - வது

## ஆரியஜனபோதினி.

இது சிரேஷ்டமாலிகா, கல்லிடைக்கும்மி, இந்துசாஸ்திராபிமானி யென்ற புஸ்தகங்களை எழுதினவரும், மதராஸ் லோகோபகாரி, திருவாரூர் பிர்மக்ஞானபத்திரிகையாகியவைகளுக்கு நிருபநேயராகவிருந்தவரும், மற்ற திராவிடபாஷாபத்திரிகைகளுக்கு விஷயதானங்கள்செய்பவருமாகிய கல்லிடைக்குரிச்சி வா. முத்துகிருஷ்ணய்யரால் இயற்றப்பட்டது. இதில் இந்தியாதேசத்தின் முற்காலதற்காலநிலைமைகளும், இக்காலத்தவருக்கேற்றகைத்தொழில் விஷயங்களும், அதன்பொருட்டு வெளியிடப்பட்ட மாக்ஷிமைதங்கிய ம-ா-ா-ஸ்ரீ, பரோடாமகாராஜா அவர்களின் அபிப்பிராயங்களும், நமது முற்காலத்து மகரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட ஆரியதர்மத்தின் அருமையான அதிஸூக்ஷ்மங்களும், மிஸிஸ் அந்நிபெஸான்டு அம்மையவர்களால் நம்ஜாதிவேற்றுமை அல்லது வர்ணாசிரம தர்மமுறைகளைப்பற்றி உபன்யஸிக்கப்பட்ட உபன்யாஸத்தின் சிறந்தஉண்மையான கருத்துக்களும், தேசாபிமானிகளில் சிங்கமெனப் பெயர்பெற்ற மிஸ்டர், தாதாபாய் நௌரோஜி அவர்கள் இந்துஜனங்களின் பொருட்டு உழைத்துவருகின்ற அரிதான பெரியகாரியங்களும், அவரது குணாமிருதங்களடங்கிய சரித்திரமும், சுத்தஷாட்குண்ய பரிபூரணராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் ஸத்க்ருத்ய அவதாரமஹிமைகளும், (இது படிப்போர்மனதுக்கு மிகுந்த ஆனந்தத்தையும் பரிசுத்தத்தையும் விளைவிக்கத்தக்கது.) ஸநாதனதர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு வெளிநாடுகளில் ஸஞ்சரித்துவந்த ஸ்வாமி விவேகானந்தரவர்களின் கருத்தையொத்த வேதாந்தசாஸ்திரத்தின் தத்துவங்களும், அதன்பொருட்டு கர்னல் ஆல்காட்துரையவர்களால் செய்யப்பட்டிருக்கின்ற அரிதான சிறந்த பெரும்முயற்சிகளும், மஹாராஜகுமாரியான பாஞ்சாலிஎன்னும் பதிவிரதாசிரோமணியாகிய உத்தமியைத் துரியோதனன்ஏவலினால் பாதகனாகிய துச்சாஸனன் ஸபைநடுவே நிறுத்தி மானபங்கம் செய்யத்துணிந்து அவமானமடைந்ததும், (இதைப்படிக்கிறவர்களுக்குப் புஸ்தகத்தைக் கீழேவைக்க மனம்வரமாட்டாது.) முன்னாளில் தர்மபுத்திரமகாராஜனால் செய்யப்பட்ட இராஜஸூயம்என்னும் வேள்வியில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் பொருட்டு அவருக்கும் சிசுபாலனுக்கும் நேரிட்ட வாக்குவாதங்களும், அவைகளுக்கு பீஷ்மர்செய்தஸமாதானமும், மிஸ்டர், வித்தல்தாஸ்தாமோ தரதாக்கர்ஸே அவர்கள் கைத்தொழிலபிவிருத்தியின்

பொருட்டு முன் ஆமதாபாத்தில்வைத்துச் செய்திருக்கிற பிரஸங்கத்தின் ஸாராம்சங்களும், சென்னை ஸென்ட்ரல் அக்ரிகல்சுரல் கமிட்டியாருடையவும், ம-ா-ா-ஸ்ரீ, பென்ஷன் வியவஸாய இனிஸ்பெக்டர் ஜி. ராஜகோபால் அவர்களுடையவும், மனதிற்கிசைந்த வியவஸாய முறைகளும், வியவஸாயமானது ஸிந்துநதிப்பாசானமாகிய பஞ்சாப், வங்காளம், டில்லி, பட்னுவென்னும் பாடலிபுரம், அயோத்தி, பிரயாகை, காஸ்மீரம், பர்மா, பம்பாய், பேஹார், அமெரிக்கா, அஸாம், ஓரிஸா, கோதாவரி, கிருஷ்ணா, பெண்ணைநதியின் பாசானம், காவேரிப்பாசானம், திருவாங்கூர், கன்னடம், கொங்கணம், நெல்லூர், சேவராயமலை, பழனிமலை, காச்சார், டார்ஜிலிங், சிட்டகாங், நீலகிரி, கூடியநாகப்பூர், பூதான், அரக்கான் முதலியவிடங்களில் செய்யப்படுகிறமாதிரிகளும், மேல்வங்காளத்தில் அபினியும், மைஸூரில் பட்டும் எடுக்கிறவிதங்களும், இன்னும் சில அத்புதமானவிஷயங்களும் அடங்கியிருப்பதோடு, நல்ல செந்தமிழ்நடையில் எழுதப்பட்டு, படிப்பவர்களுக்கு லௌகீகயுக்தியும், பகவத்பக்தியும், நல்லொழுக்கமும், ஆழ்ந்தயோசனையும், திவ்யக்ஞானமும், தெளிந்தபுத்தியும் உண்டாகக் கூடிய விதமாய்ப் பொலிந்து விளங்குகின்றன. அன்றியும், குறித்த புஸ்தகத்தில் இஹபரஸாதகமான நீதிமார்க்கங்களும், வேதாந்த விஷயங்களும், நல்ல விவேகமுண்டாகும்படியான சிறுகதைகளும் எழுதப்பட்டு, உலகத்திலுள்ள ஸர்வஜனங்களுக்கும் பொதுவாய், ஸகலமதஸ்தர்களுக்கும் இன்பமாய், எல்லாஜாதியர்களுக்கும் ஏற்றதாய், எல்லாவர்த்தமானங்களுமிருக்கப்பெற்றதாய், பிறமததூஷணையின்றி சொல்நயம், பொருள்நயம்தோன்ற விளங்குவதால், நீங்கள் ஒருமுறை பொருமையோடும் ஆதரவோடும் படித்துப்பார்த்தால், தக்ஷணமே அதன்அருமையும் பெருமையும் உங்களுக்குத் தெளிவாகத் தெரியவரும். இப்புஸ்தகத்தில் புஸ்தகம்முதலிய வியாபாரங்கள்செய்யும் வர்த்தகர்களின் பிரயோஜனத்தைக்கருதி நமது "இந்து சாஸ்திராபிமானி" என்னும் புஸ்தகத்தை ஆதரித்த உள்ளூரிலும் வெளியூர்களிலுமுள்ள பல கனவான்களின்மேல் விலாஸங்கள் அச்சிடப்பட்டிருக்கின்றன. அன்றியும், ஸ்ரீ ராமகிருஷ்ணமூர்த்திகளின் திவ்யதேஜோமயமான திருவுருவப்படங்களும் இப்புஸ்தகத்துடன் சேர்த்து அச்சிட்டு பைண்டு செய்யப்பட்டிருப்பதோடு விலை உயர்ந்த நல்ல கிளேஸ்கடிததத்தில் முத்துக்களைப்போன்ற அக்ஷரங்களாகப் பொருக்கியெடுத்து 8-பேஜுள்ள 16-பாரத்தில் 128-பக்கங்கள்வரை அச்சிடப்பட்டிருக்கின்றது. இந்நூல் கேவலம் தனஆர்ஜனத்தைப்

பெரிதாக நினையாமல் உலகநன்மையின்பொருட்டு வெளியிடப்பட்டிருப்பதால், இதற்கு வி. பி. சார்ச்சு உள்பட மிகவும் குறைந்தவிலையாகிய அணு பத்து விலை யேற்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆதலின், இதனை வாசிக்கும் நண்பர்கள் தங்கள் தங்கள் நேசர்களுக்குப் புஸ்தகத்தின் ஸாராம்சங்களையும் விலையத்தையும் எடுத்துரைக்கவேண்டும். இதை அச்சிடுவதற்குரிய அச்சுக்கூலி, காகிதக்கிரயம், படங்களின்விலை, போஸ்டேஜு ஆகியவைகளை அறிவாளிகள் கணக்கிட்டுப்பார்த்தால், இதற்கு ஏற்படுத்தியிருக்கிற விலை மிகவும் ஸொற்பமென்றும், ஸொந்தக்காரருக்கு அதனால் லாபமும் நஷ்டமுமன்றி அவருடைய உழைப்புக்கு ஒருவித கூலியாகிறதென்றும் அறிந்துகொள்ளுவார்கள். இவ்வளவு இலகுவானகிரயத்தில் இப்புஸ்தகத்தை எழுதி வெளியிட்டதின் காரணம் யாதெனில், இதை எல்லோரும் எளிதில் வாங்கிப் படித்தறியட்டும் என்பதேயாம். இச்சொந்தக்காரரிடம் அவ்வித நன்னோக்கமிருப்பதினால் தான் அவரால் எழுதப்படுகிற புஸ்தகங்கள் காலதாமஸத்திற்கிடமன்னியில் கனவான்களால் மிகவிரைவில் ஆதரிக்கப்படுகின்றன. இப்புஸ்தகம் ஸர்வஜனங்களுக்கும் பிரீதிகரமாயும் மனோகரமாயுமிருப்பதுடன் உலகவியல்பை நன்றாய்த் தெரிவிப்பதற்குத்தக்க ஸாதனமாய் அனேக விசித்திரமான விஷயங்களும், மகான்களின் பெருமையும், யுக்தி, புத்திகளின் மஹிமையும், ஸதாசாராநுஷ்டானங்களால் லபிக்கும் மஹத்கரமான நன்னிலைமையு மடங்கப்பெற்றிருப்பதால், இதனை ஒவ்வொருவரும் வாங்கிப் படிக்கவேண்டியது மிகவும் அவசியம். ஸிலோன் முதலிய வெளிநாடுகளுக்கனுப்பப்படும் இந்தப்புஸ்தக வி. பி. களுக்கு ஒருஅணு ஜாஸ்தியாகச் சார்ச்சு செய்யப்படும்.

---

5 - வது

## பிரசிநோத்தரரத்நமாலை.

இது என்பிதாவாகிய கல்விடை, வா. முத்துகிருஷ்ணய்யாவர்களால் எவரும் எளிதில் படித்தறியுமாறு நல்லசெந்தமிழ்நடையில் வினாவிடைரூபமாக நவீனமாயெழுதி வெளியிடப்பட்டிருக்கின்ற ஓர் தமிழ்ப்புஸ்தகம். அதில், இடைவெளியன்னியில் எங்கும் வியாபித்திருக்கின்ற அகண்டபரிபூரண ஸச்சிதானந்த ஸ்வரூபத்தின் ஸத்து, சித்து, ஆனந்தமாகிய மூன்றுலக்ஷணங்களும், உள்வெளியென்ற இருவகைப் பிரபஞ்சவிஷயங்களும், வெளிப்பிரபஞ்சத்திலுள்ள ஜம்

பூத்வீபத்தின் அற்புதமான நிலைமையும், அதன்மத்தியிலிருக்கின்ற நவகண்டங்களின் சிறப்பும், மஹாமேருவென்னும் ஸ்வர்ணபர்வதத்தின்வைபவமும், அந்தப்பர்வதத்தின் சிகரத்தில் பரமபதநாதனுடைய திருவடியிலிருந்து விஷ்ணுபதியென்ற கங்காநதியானது வந்துவிழுகின்ற அழகும், அதன்பின் அம்மஹாநதி நான்குபிரிவுகளாகப் பூமியிற் பிரவேசித்த விமர்சையும், பஞ்சபூதங்களின் உத்பத்தியும், அவைகளின் குணங்களும், நமது உலகத்தைப்போன்ற மற்றஉலகங்களிருக்குமிடங்களும், அவைகளிலுள்ள நடபடிகளும், முன்கூறப்பட்ட நவகண்டங்களாகிய ஒன்பதுகண்டங்களுக்கும் தனித்தனியே ஏற்பட்டிருக்கின்ற அதிதேவதைகளின் விபரமும், அவைகளை ஆராதிக்கின்ற பக்தசிரோமணிகளின் பக்திசிரத்தைகளும், ஈசுவரனால் இவ்வுலகத்தில் அழகாக அமைக்கப்பட்டிருக்கின்ற பர்வதங்கள், நதிகள் முதலியவைகளின் அமைப்புக்களும், ஸ்வர்ணபர்வதமாகிய மஹாமேருவின் சிரஸிலேயிருக்கின்ற பிர்மதேவனுடைய சாதகும்பியென்ற பட்டணத்தின் சிறப்பும், நாம் இப்பொழுது வஸிக்கின்ற பாதகண்டமாகிய இப்பூமியின் கண்ணுள்ள பர்வதங்கள், நதிகள்முதலியவைகளின் விசேஷங்களும், அப்பூமி புண்ணியபூமியாகப் பவித்ததற்குரிய ஹேதுவும், ஜம்பூத்வீபத்தை இந்த லவணஸமுத்திரம் சூழ்ந்துகொண்டிருப்பதுபோல், பிலக்ஷம்முதலிய மற்றத்தீவுகளைக் கருப்பஞ்சாறு, பால், தயிரென்றகடல்கள் சூழ்ந்துகொண்டிருக்கின்ற சூழ்ச்சியும், ஒவ்வொரு த்வீபத்திலும் அதிகோப்பியமாகவிருக்கின்ற அத்புதமான செயல்களும், ஸூர்யப்பிரகாசமுள்ள தேசங்களுக்கும், ஸூர்யப்பிரகாசமில்லாத தேசங்களுக்கும் மத்தியில் அமைக்கப்பட்டிருக்கின்ற லோகாலோகபர்வதத்தின் மஹிமையும், அதற்கப்பாலுள்ள காஞ்சனமயமான ஸ்வர்ணபூமியின் வைபவமும், அடி லோகாலோகபர்வதத்தின் மேல் திக்கஜங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற ஏற்பாடும், ஸூர்யபகவானுடைய லோகயாத்திரையின் ஸூக்ஷ்மமும், அவ்வாதபனுடைய மண்டலத்திற்குமேலுள்ள சந்திரன், நக்ஷத்திரங்கள், துருவன், ஸப்தரிஷிகள் முதலியவர்களுக்குரிய மண்டலங்களின் மர்மங்களும், நவக்கிரகங்களுடைய கிரகங்களிருப்பும், அக்கிரகாதிபதிகளினால் ஏற்படுகின்ற பலாபலன்களும், வானத்திலுள்ள ஜோதிர்கணங்களைப் பகவானுடைய சிம்சுமார ஸ்வரூபமாய் வர்ணிக்கப்படுகின்ற வர்ணனைகளும், அந்த சிம்சுமாரமென்ற முதலையின் ஸ்வரூபத்திற்கு இன்னின்ன நக்ஷத்திரங்கள் இன்னின்ன அவயவங்களாக அமைப்பெற்றிருக்கின்றனவென்பதும், ஜீவராசி

கள் நாலுவகையோனியில் எழுவகைப்பிறப்பாய் ஜனிக்கின்ற பிறப்பின் வளமையும், இன்னுஞ் சில அத்புதவிஷயங்களு மடங்கியிருப்பதுமன்றி, மேற்சொன்ன வெளிப்பிரபஞ்சத்தைப்போல் நமது சரீரத்திலுள்ளிருக்கும் பிரபஞ்சமாகிய உட்ப்ரபஞ்சத்தில் அன்னமயம் முதல் ஜீவன்முக்திவரையிலுள்ள அனேகமார்க்கங்களால் பற்பலவாறன பேதங்களையடைந்திருக்கின்ற பஞ்சகோசங்களென்ற ஐந்து விதமான ஓரைகளையும், மூன்றுவிதமான சரீரங்களையும், ஜனித்தல் முதலிய ஆறுவிதமான விகாரங்களையும், இரக்தம், மாம்ஸம்முதலிய ஆறுவிதமான கோசங்களையும், பசி, தாக முதலிய ஆறுவிதமான ஊர்மிகளையும், குருட்டுத்தனம், மந்தத்தனம், சுறுசுறுப்பு, ஆசை, துவேஷமாகியவைகளையும், மனோ வாக்கு காயங்களென்ற மூன்று விதமான காரணங்களையும், ஜாக்ர ஸ்வப்ன சுஷுப்தியென்ற மூன்று விதமான அவஸ்தைகளையும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களையும், பிராணுபானன்முதலிய பஞ்சவாயுக்களையும், நாகன், கூர்மனென்ற உபவாயுக்களையும், மனது, புத்தி, சித்தம், அகங்காரம், ஸங்கல்பம், நிச்சயம், நினைவு, அபிமானமுதலியவைகளையும், விசுவன், தைஜஸன், பிராக்ஞன்முதலிய மூன்றவஸ்தா புருஷர்களையும், ஸத்வ ரஜஸ் தமோகுணங்களையும், ஸுகதுக்கங்களையும், ஞாணுக்ஞானங்களையும், பிரியாப்பிரியங்களையும், உபேக்ஷை, ஸாதனசதுஷ்டயம், மைத்திரியாதி சதுஷ்டயம், அஷ்டாங்கயோகம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனம், ஸமாதியாகியவைகளையும், பிரமாணுப்பிரமாணங்களையும், பிரமாணத்தின் நிச்சிதத்தையும், தாபத்திரயத்தையும், மனோவியாதியையும், வியாதியையும், ஆரோக்கியம், பக்தி, வைராக்கியம், மந்தம், தீவரம் முதலியவைகளையும், ஸகுணோபாஸனை, நிர்குணோபாஸனை, மனோநாசம், வாஸனுநாசம், விதேகமுக்தி, ஜீவன்முக்திமுதலிய அனேக அரியவிஷயங்களைப்பற்றியும் மிகவிரிவாக எழுதப்பட்டிருக்கின்றது. ஆனதாலும், ஷை நூலிற்கர்மம், பக்தி, ஞானமென்ற மூன்றுவிதமான யோகவிஷயங்கள் அடங்கியிருப்பதினுலும், பிர்மம், சக்தி, திருமூர்த்தி என்பவைகளின் வரலாறுகள் வரைந்திருப்பதினுலும், ஈசுவரநிர்ணயத்தைப்பற்றிய ஒவ்வொருமதஸ்தரின் அபிப்பிராயத்தையும், அது எடுத்தோதுவதினுலும், அப்புஸ்தகத்தை வாங்கி அடிக்கடி படித்து அதிலுள்ள விஷயங்களைச் சிந்தனைசெய்கிறவர்கள் வெளிப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாவிசேஷங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிந்துகொண்டவர்களாகவும், ஸர்வஜீவராசிகளிடத்திலும் மித்துரு பாவத்தைவஹிக்கும் கருணையாளராக

வும், வாய்மைவழுவாத வள்ளல்களாகவும், பேராசையைப் பகைக்கின்ற பேரறிவாளர்களாகவும், அஷ்டமஹாஸித்திகளைப்பெற்ற ஸித்தர்களின் வல்லமைகளையறிந்து அதிசயிக்கும் அறிஞர்களாகவும், நிஷ்காமகர்மிகளாகவும், வர்ணாசிரம தர்மதத்துவங்களை கிரஹித்துக் கொண்டவர்களாகவும், பாமரஜனங்களுக்கு வினைவலியைப் பகர்ந்தருந்த பண்டிதமணிகளாகவும், பாரமார்த்திகத்தையறிந்த பரபக்த சிரோமணிகளாகவும், ஸமதிருஷ்டி, ஸர்வமதஸம்மதமாகிய ஸத்குணங்களை வஹித்தவர்களாகவும் பவிப்பார்கள். அன்றியும், ஒருக்கால் ஸ்வர்க்கப்ராப்திக்கு அருஹராளாகவோ, அல்லது பாத்ரவிசேஷம்போல் ஆத்மானுபவிகளாகவோ பவிக்கவும் கூடும். இந்நூலில் தனதான்யபுத்திரதாராதிகளாலும், இன்னும் இதுபோன்ற மற்றவைகளாலும் ஸம்பவிக்கின்ற துக்கங்களை எளிதாக அகற்றுவதற்குரிய உபாயங்களும் உரைக்கப்பட்டிருக்கின்றன.

---

## குறிப்பு.

1. இத்தனை சிறந்தவிஷயங்களைச் சற்றேறக்குறைய விரிவாக ஆயிரம் வினவிடைகள்வரை எழுதப்பட்டு விலையுயர்ந்த நல்லவெண்மையான கிளேஸ்பேபரில் பாரம் 8-பேஜ-வைஸில் 140-பக்கங்கள் வரை அச்சிடப்பட்டு அழகாகப் பயிண்டு செய்யப்பட்டிருக்கும் இந்தப் பெரியபுஸ்தகத்திற்கு, உள்நாட்டாருக்கு வி. பி. சார்ச்சுடன் அணா பத்தும், வெளிநாட்டாருக்கு வி. பி. சார்ச்சுடன் அணா பதினொன்றுமே விலை ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது.

2. அவ்விதம் குறைந்தவிலை ஏற்படுத்துகிற காரணத்தைப்பற்றி முன் எங்களால் பிரசுரிக்கப்பட்ட "ஆரியஜனபோதினி"யின் பிரகடனப்பத்திரிகையில் சவிஸ்தாரமாகக் கூறியிருப்பதால், அதனை இதில் விரித்துரைப்பது அவ்வளவு அவசியமில்லையெனக் கருதி நிறுத்தி விட்டோம்.

3. இந்தப்புஸ்தகத்தையும் எங்களாபீஸிலுள்ள மற்றப்புஸ்தகங்களையும் வி. பி. போஸ்டில் பெற்றுக்கொள்ளப் பிரியமுடையவர்கள் தங்கள் ஊர், பெயர் முதலிய முழுவிலாஸங்களையும் தெளிவாக ஒருகார்டில் எழுதி அந்தக்கார்டை திருநெல்வேலிஜில்லா, கல்லிடைக்குறிச்சி, இந்துசாஸ்திராபிமானி ஆபீஸ்மானேஜருக்கு அனுப்ப வேண்டும்.

4. ஒரேமுறையில் ஒரேதினுஸில் ஐந்துபுஸ்தகங்களேனும் அதற்கு மேலேனும் வாங்குகிறவர்களுக்கு அவைகளுக்குரிய போஸ்டேஜை நீக்கிவிடப்படுவதுமன்றி, ஐந்துக்கு ஒன்றுவீதமுள்ள கமிஷனும் கொடுக்கப்படும்.

5. மேற்சொன்ன விதியினால் புஸ்தகவியாபாரிகள் தங்களுக்கு புஸ்தகமொன்றுக்கு எட்டணாவீதமுள்ள விலையும் மேற்கூறிய கமிஷனும் ஸித்திக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ள வேணவராகின்றார்கள்.

6. புஸ்தகங்களைக் கடனாகவாவது, ஸாம்பிளாகவாவது, இலவசமாகவாவது அனுப்பவேண்டுமென்று விரும்புகிறவர்களின் ஆர்டர்கள் கவனிக்கப்படமாட்டாது.

7. நமது ஸஹோதரர்களாகிய இந்துஜனங்கள்மேல் நாட்டார்களைப்போல் வியாபாரவிஷயத்தில் லாபத்தையும் கீர்த்தியையும் பெற விருப்பமிருந்தால், அதன் ஸம்மந்தமான விளம்பரப்பத்திரிகைகள், அல்லது நோட்டீஸுகள் (கியாட்லாக்) முதலியவைகளை இதனடியில் கையொப்பமிட்டிருக்கிற எங்கள் ஆபீஸு மானேஜர்பேருக்கு ரிஜிஸ்தர் புக்போஸ்டிலோ, அல்லது S. I. R. றயில்வழிக்கு கல்லிடைக்குறிச்சி றயில்வேஸ்டேஷனுக்கோ அனுப்பி அவைகளை நமது நாட்டின்கண்ணுள்ள பல வெளியூர்கனவான்களுக்கும், பிறதேசங்களிலுள்ள பிரமுகர்களுக்கும் இந்தப்பத்திரிகையுடன்கூட ஸர்குலேட்செய்யும்படி ஏற்பாடுசெய்யலாம்.

8. நாங்கள் ஆயிரக்கணக்கான மேல்விலாஸங்களைச் சேகரித்து வைத்திருப்பவர்களாகையாலும், எங்கள் புஸ்தகவிஷயமாக அடிக்கடி சென்னை ராஜதானியிலுள்ள எல்லாஜில்லாக்களுக்கும், கொழும்பு, யாழ்ப்பாணம், ரங்கூன், பினங், சிங்கப்பூர், நெட்டால்முதலிய வெளிநாடுகளுக்கும் கியாட்லாக்கு முதலியவைகள் அனுப்பிக் கடிதப் போக்குவரத்துக்கள் செய்துகொண்டிருப்பவர்களாகையாலும், ஏழாவதுபாராவில் கண்டபடி விளம்பரங்கள் அனுப்புகின்ற கனவான்களுடைய வேலைகளை எங்கள் சொந்தவேலைகளைப்போல் மிகுந்த ஜாக்ரதையுடன் நடத்திவரத் தயாராகவிருக்கிறோம்.

9. இந்தக்கம்பெனி லோகோபகாரமான வேலைகள் செய்யவேண்டுமென்ற நன்னோக்கத்துடன் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால், பத்தாவதுபாராவில் கண்டபடி ஸர்குலேட்செய்வதற்குக் குறைந்த சார்

ச்சு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது." ஆகவே, எங்கள்மூலமாகப் பத்திரிகைகளைப் பரவச்செய்ய விரும்புகிறவர்கள் மிகுந்தலாபத்தையும், கீர்த்தியையும் அடைவார்களென்பது நிச்சயம்.

10. அவ்விதமான நோட்டீஸுகளைப் பரவச்செய்ய எங்களுக்குரிய கமிஷனாகிய சார்ச்சை, அந்தநோட்டீஸுகள் அனுப்புகிற பொழுதே மணியார்டர்மூலம் அனுப்பிவிடவேண்டும். சார்ச்சு விபரம். ஆயிரத்துக்கு, ரூ. 3—0—0. இரண்டாயிரத்துக்கு, ரூ. 4—0—0. ஐயாயிரத்திற்கு, ரூ. 6—0—0. பதினாயிரத்துக்கு, ரூ. 10—0—0. அதற்குமேல் ஒவ்வொருஆயிரத்துக்கும், ரூ. 1—0—0 ஜாஸ்தியாக விகிதம் விதிக்கப்படும். இவைகளன்றி இன்னும் இதரவிஷயங்கள் அறிய விரும்புகிறவர்கள் எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

M. வாஞ்சேசுவரய்யர்,
மானேஜர், (Circulating agency.)
இந்துசாஸ்திராபிமானி ஆபீஸ்,
கல்லிடைக்குறிச்சி,
திருநெல்வேலி (Dt.)

---

# விசேஷவிக்ஞாபனம்.

நேயர்காள்!

முன் நமது "இந்துசாஸ்திராபிமானி" என்ற புஸ்தகத்தை ஆதரித்த கனவான்களுக்கு எங்களது நன்றியறிதலை ஸமர்ப்பிக்கும் பொருட்டு இதற்குமுன் எங்களால் இயற்றப்பட்ட "ஆரியஜனபோதினி" என்ற புஸ்தகத்தில் அவர்களின்மேல் விலாஸங்களைப் பிரகடிக்கலாயினோம். அதற்குப்பின், (30–3–10) முதல் இதுவரை "இந்துசாஸ்திராபிமானி," "ஆரியஜனபோதினி" என்ற புஸ்தகங்களைப் பெற்று ஆதரித்த கனவான்களுக்கு ஸமர்ப்பிக்க வேணநன்றியறிதலை அறிவிக்கும்பொருட்டு இதனடியில் ஷை கனவான்களின்மேல் விலாஸங்களைப் பிரகடிக்கப்பட்டிருக்கின்றன. இனி ஆதரிக்கப்படும் அன்பர்களின் விலாஸங்கள் பின்னால் வெளியிடப்படும் புஸ்தகங்களில் பிரகடிக்கப்படும்.

593.

கொடைவள்ளலும், கர்பஸ்ரீமானும், கல்லிடைக்கு ஓர் தார்வேந்தனைப்போல் விளங்கி வருபவருமாகிய மாக்ஷிமைதங்கிய ம-ா-ா-ஸ்ரீ, ரா. ச. ஆ. லெக்ஷ்மணய்யரவர்கள், முதலியப்பபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

மிகுந்த தேசாபிமானியும், பரோபகாரியுமாகிய ம-ா-ா-ஸ்ரீ, ஸ்ரீ. சா. அ. ராம. ராமுவய்யரவர்கள், வைத்தியப்பபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

மாக்ஷிமைதங்கிய ம-ா-ா-ஸ்ரீ, G. ஸுப்ரமண்ய அய்யரவர்கள், எடிடர், சுதேசமித்திரன், P. O. Box 126, மதராஸ்.

ம-ா-ா-ஸ்ரீ, மானேஜரவர்கள், இஸவுக் இந்தியன்பிரஸ் அண்டு இந்துநேசனாபீஸ், 6. தம்புசெட்டிஸ்ட்ரீட், ஜார்ஜ்டவுன், மதராஸ்.

ம-ா-ா-ஸ்ரீ, பி. வைத்தியநாதய்யரவர்கள், மானேஜர், லோகோபகாரி ஆபீஸ், திருவல்லிக்கேணி, மதராஸ்.

தேசாபிமான மதாபிமானவழிகளில் காலத்தை விரயம்செய்யும் ம-ா-ா-ஸ்ரீ, K. R. கிருஷ்ணய்யரவர்கள், ஸ்கூல்மாஸ்டர், இந்து ஸெகண்டரிஸ்கூல், கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

உண்மையை அறியவிரும்பும் உத்தம புருஷசிகாமணியாகிய ம-ா-ா-ஸ்ரீ, கை. ரா. ம. கைலாஸமய்யரவர்கள், ஸ்ரீவராகபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

ம-ா-ா-ஸ்ரீ, பத்மநாபராவ் அவர்கள், போஸ்ட்மாஸ்டர், கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

ம-ா-ா-ஸ்ரீ, மானேஜரவர்கள், கீர்வாணவாக்பரிபாலனஸபை, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

ம-ா-ா-ஸ்ரீ, பண்டிட் K. P. ராமஸ்வாமி அய்யரவர்கள், ஹெட்மாஸ்டர், இந்து ஸெகண்டரி ஸ்கூல், கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி ஜில்லா.

லைப்ரெரி, இந்துஸெகண்டரிஸ்கூல், கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலிஜில்லா.

ம-ா-ா-ஸ்ரீ, விஜயராமத் தேவர், மீ. பக்கிருமுகைதீன் ராகன் கணக்கு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி ஜில்லா.

ம-ா-ா-ஸ்ரீ, K. ராமகிருஷ்ணய்யரவர்கள், மேலத்தெரு, அத்தாழநல்லூர், வீரவநல்லூர்போஸ்டு, திருநெல்வேலிஜில்லா.

,, A. சுப்புய்யாத்தொண்டமானவர்கள், குத்தாலம்ஸ்ட்ரீட், திருநெல்வேலி டவுன்.

,, M. S. ராமஸ்வாமிஅய்யங்காரவர்கள், அஸிஸ்டெண்டு குட்ஸ்கிளார்க், திருநெல்வேலிப்பாலம்.

,, வீ. வீரமணிஅய்யரவர்கள், வீருவாத்தியாரவர்கள் குமாரர், ஸ்கந்தப்பபுரம், கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலி ஜில்லா.

,, R. கிருஷ்ணய்யரவர்கள், கை. ராமய்யரவர்கள் குமாரர், ஸ்ரீவராகபுரம்தெரு, கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலி ஜில்லா.

,, T. M. கார்த்திகைமுத்தய்யர்அவர்கள், C/o. கா. சு. முத்துக்குமாரஸாமி அய்யரவர்கள், பெரியதெரு, திருச்செந்தூர், திருநெல்வேலிஜில்லா.

,, R. S. கங்காஜடேசசர்மா அவர்கள், டீச்சர், ரெண்டன் கட்டளை, நாச்சியார்கோவில், தஞ்சாவூர்ஜில்லா.

,, சு. கிருஷ்ணய்யரவர்கள், ச. சி. ஆ. கம்பெனியார், தாகு மண்டி, பொள்ளாச்சி.

,, வீ. ரா. கி. கிருஷ்ணபிள்ளைஅவர்கள், திருநெல்வேலிப் பாலம்.

,, ச. கு. அ. குளத்துவய்யரவர்கள், முதலியப்பபுரம்தெரு, கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலிஜில்லா.

,, கை. செ. லெக்ஷுமய்யரவர்கள், ஸ்ரீவராகபுரம்தெரு, கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலிஜில்லா.

,, கோமதிசங்கரதீக்ஷிதரவர்கள், சுதேசிவீவிங்பேக்டரி, தங்கம்மாள்புரம்தெரு, கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலிஜில்லா.

,, தி. த. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள், 10-ம் நெ வீடு, தென்னூர், திருச்சிறுப்பள்ளி.

,, பொ. சு. சங்கரய்யரவர்கள், ஸ்ரீவராகபுரம் தெரு, கல்லிடைக்குரிச்சி, திருநெல்வேலிஜில்லா.

